# சங்க இலக்கியத்தில் குலமரபும் தொழில் மரபும்

*முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காகச்*

*சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு*

*அளிக்கப்பட்ட ஆய்வேடு*


ஆய்வாளர்

**நீ. காஞ்சனா**

எம்.ஏ., எம்.ஃபில்.,

மேற்பார்வையாளர்

முனைவர் **கு. மங்கையர்க்கரசி**

எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்., பிஎச்.டி.

இணைப்பேராசிரியர்

தமிழ்த்துறை

எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)

சென்னை – 600 008





**தமிழ்த்துறை**

**எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**சென்னை - 600 008**

**செப்டம்பர் - 2009**

முனைவர் **கு. மங்கையர்க்கரசி,** எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்., பிஎச்.டி.
(மேற்பார்வையாளர்)
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை – 600 008.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியத்தில் குலமரபும் தொழில் மரபும்"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் முனைவர் (பிஎச்.டி.,) பட்டப் பேற்றிற்காகச் **செல்வி நீ. காஞ்சனா,** 2006-2009 ஆம் கல்வியாண்டில் நிகழ்த்தி வழங்கியதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு ஆய்வுப்பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப் பெறவில்லை எனவும் இந்த ஆய்வு அவர்தம் சொந்த முயற்சியால் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

இடம்: சென்னை – 600 008.
நாள்: 23. 09. 2009.




கு. மங்கையர்க்கரசி 23/9/09
**(கு. மங்கையர்க்கரசி)**
மேற்பார்வையாளர்

முனைவர் (திருமதி) கு. மங்கையர்க்கரசி
எம்.ஏ., பி.எட்., எம்.பில்., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியை – தமிழ்த்துறை
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 008.

**நீ. காஞ்சனா,** எம்.ஏ., எம்.ஃபில்.,
முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி),
தமிழ்த்துறை,
சென்னை – 600 008.

## ஆய்வாளர் உறுதிமொழி

**“சங்க இலக்கியத்தில் குலமரபும் தொழில் மரபும்”** என்னும் தலைப்பில் முனைவர் பட்டப்பேற்றிற்காக எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் **முனைவர் கு. மங்கையர்க்கரசி** அவர்களின் மேற்பார்வையின்கீழ் செய்யப்பட்ட இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் எந்த ஆய்வுப் பட்டத்திற்கும், இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும், இத்தலைப்பில் வேறு எவரும் ஆய்வு நிகழ்த்தவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

நீ. காஞ்சனா
**(நீ. காஞ்சனா)**
ஆய்வாளர்

இடம்: சென்னை – 600 008.
நாள்: 23. 09. 2009.

# நன்றியுரை

**"சங்க இலக்கியத்தில் குலமரபும் தொழில் மரபும்"** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி அளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு நன்றி.

எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளராகச் சேர்ந்து பயில இசைவளித்து, இவ்வாய்வு முழுமை பெறுவதற்கு, எல்லா நிலைகளிலும் இன்முகத்தோடு நல்லுதவிகளை நல்கிய ஆய்வு மேற்பார்வையாளரும், தமிழ்த்துறைப் பேராசிரியருமான **முனைவர் கு. மங்கையர்க்கரசி** அவர்களுக்கு எனது நெஞ்சம் நிறைந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

ஆய்வு நிகழ்த்த பல்லாற்றானும் உதவிபுரிந்த எத்திராஜ் மகளிர் கல்லூரியின் (தன்னாட்சி) **முதல்வர்** அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் எம். நித்யகல்யாணி** அவர்களுக்கும், **தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும்** நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வினை மேற்கொண்ட நாள் முதலாகத் தேவையான நூல்களை வழங்கி தமது மேலான கருத்துக்களைக் கூறி ஆய்வேட்டினைச் செம்மைப்படுத்திய **முனைவர் ப. கிருஷ்ணன்** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு தொடர்பான நூல்களையும் கருத்துகளையும் வழங்கி ஆய்வினைச் சிறக்கச் செய்த மயிலம் ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் பணியாற்றும் முதுநிலை விரிவுரையாளர் **முனைவர் இரா. இலட்சாராமன்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

நேரில் சென்றபோது ஆலோசனை வழங்கிய **முனைவர் சிலம்பு நா. செல்வராசு** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு சிறக்க ஊக்கமளித்த பேராசிரியப் பெருமக்கள் **முனைவர் வ. ஜெயதேவன், முனைவர் ந. தெய்வசுந்தரம், முனைவர் அ. பாலு, முனைவர் அ.கோபால்** அவர்களுக்கும் இதயங்கனிந்த நன்றி.

ஆய்வு தொடர்பான அலுவலக உதவிகளை நல்கிய **கல்லூரி அலுவலர்களுக்கு** நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டின் உருவாக்கத்திற்கு உடனிருந்து உதவிய முனைவர் பட்ட ஆய்வாளர்களான **திரு. ஏ. கோதண்டராமன், திரு. அ. செந்தில் நாராயணன், திரு. இ. இனியன், திரு. க. விஜயகாந்த், செல்வி அ. வனிதா, செல்வி மா. வசந்தகுமாரி, அவர்களுக்கும், முனைவர் கதி. முருகேசன், முனைவர் ப. குமார்** அவர்களுக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களைத் தந்துதவிய **சென்னைப் பல்கலைக்கழகம், மறைமலையடிகள், கன்னிமாரா, ரோஜா முத்தையா, தேவநேயப்பாவணர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், விழுப்புரம் பொன் சௌரிராசனார் நூலகம்** ஆகிய நூலகங்களுக்கும் என் நன்றி என்றும் உரியது.

நான் கல்வியில் சிறந்து விளங்க எந்நேரமும் அயராது பாடுபடும் எனது **மாமா திரு. ஆர். சுந்தரேசன், அத்தை சு. செல்வக்குமாரி** அவர்களுக்கும், எனது **குடும்பத்தாருக்கும்** நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினைச் சிறந்த முறையில் கணினி மூலம் பிழையின்றி தட்டச்சுச் செய்துதவிய **டுடே கிராஃபிக்ஸ்** நிறுவனர் **திரு. ரெ. பாபு** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | – | அகத்திணையியல் |
| அகம். | – | அகநானூறு |
| இ.ப.த.ம. | – | இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் |
| இன்னா. | – | இன்னா நாற்பது |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| கலித். | – | கலித்தொகை |
| க.ஆ. | – | கட்டுரை ஆசிரியர் |
| க.வா. | – | கடவுள் வாழ்த்து |
| கற்பு. | – | கற்பியல் |
| குறிஞ். | – | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | – | குறுந்தொகை |
| சிலம்பு. | – | சிலப்பதிகாரம் |
| சிறு. | – | சிறுபாணாற்றுப்படை |
| திருமுருகு. | – | திருமுருகாற்றுப்படை |
| தொல். | – | தொல்காப்பியம் |

| | | |
|---|---|---|
| நூ.எண் | – | நூற்பா எண் |
| நெடு. | – | நெடுநல்வாடை |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| பட். | – | பட்டினப்பாலை |
| பதிற். | – | பதிற்றுப்பத்து |
| பரி. | – | பரிபாடல் |
| பா.எண் | – | பாடல் எண் |
| பிறப். | – | பிறப்பியல் |
| புறத். | – | புறத்திணையியல் |
| புறம். | – | புறநானூறு |
| பெரும். | – | பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | – | பொருநராற்றுப்படை |
| மது. | – | மதுரைக்காஞ்சி |
| மலை. | – | மலைபடுகடாம். |
| மரபு. | – | மரபியல் |
| முல்லைப். | – | முல்லைப்பாட்டு |
| P. | - | Page |
| PP. | - | Pages |

# பொருளடக்கம்

## முன்னுரை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலான இலக்கியப் பாரம்பரியம் கொண்ட பண்டைய மொழிகளுள் தமிழ்மொழியும் ஒன்று. அத்தகைய தொன்மை வாய்ந்த மொழியை அறிஞர்கள் உலக மொழிகளுள் செம்மொழி என்று அறிவிப்பதற்கு இதுவே மிக அடிப்படையான காரணி ஆகும். இச்செவ்வியல் இலக்கியங்களுள் ஒன்றான சங்க இலக்கியம் தமிழின் தொன்மை நிலை, மன்னர்களின் செங்கோலாட்சி, புலவர்களின் நெஞ்சுரம், வள்ளல்களின் கொடைத்தன்மை, மக்களின் அகப்புற வாழ்வியல் போன்றவற்றைப் பிரதிபலிக்கும் வரலாற்றுக் கருவூலமாக விளங்குகிறது. இவ்வகை இலக்கியத்துள் உணர்த்தப்பட்டுள்ள அக்கால மக்களின் குலமரபு பற்றியும் அக்குலங்கள் தோன்ற அடிப்படையாக இருந்த அவர்கள் செய்து வந்த நிலம் சார்ந்த தொழில் மரபையும் குறித்து இவ்வாய்வு நிகழ்த்தப்படுகிறது.

## ஆய்வுத்தலைப்பு

உலக மொழிகளுள் தமிழ்மொழியைச் செம்மொழியாக நடுவணரசு (17.04.2004) அறிவித்துள்ள சூழலில் அவ்விலக்கியங்கள் குறித்த ஆய்வுகளும் மிகுதியாக நிகழ வேண்டும் என்பது சான்றோர்களின் கருத்து. அவ்வகையில் சங்க இலக்கியங்களின் உள்ளடக்கங்களில் பெரும்பாலான ஆய்வுகள் நிகழ்ந்திருப்பதனால் ஐந்திணை மக்களின் குலம், தொழில் சார்ந்த அடிப்படையில் அவர்களை இனங்காட்ட வேண்டும் என முடிவெடுக்கப்பட்டு **"சங்க இலக்கியத்தில் குலமரபும் தொழில்மரபும்"** என்னும் பொருண்மையில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வின் நோக்கம்

சங்க கால மக்களின் வாழ்க்கையை நிலப்பாகுபாட்டின் மூலமாகவும் அவர்கள் கொண்ட தொழில் பாகுபாட்டின் மூலமாகவும் ஐந்து வகைகளாகப் பிரிப்பர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன. அந்நிலங்களில் வாழ்ந்த மக்கள் அந்நிலத்தின் இயற்கை அமைப்பிற்கேற்ப அவர்களின் தொழில்களும் பழக்க வழக்கங்களும் மாறுபட்டன. அவ்வகையில் சங்க இலக்கியத்தில் வரும் ஐந்திணை மக்களைப் பற்றியும் நில அமைப்பின் அடிப்படையில் பகுக்கப்பட்டிருந்த அக்கால

மக்களின் குலமுறையையும் அவர்கள் செய்த தொழில் முறையையும் மையப்படுத்தியும் சங்ககாலத்தில் மக்கள் செய்யும் தொழிலின் தன்மைக்கேற்ப பல்வேறு வகைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். அவ்வகையில் இசை, கூத்து முதலிய தொழில்களில் ஈடுபட்டிருந்தாலும் அவர்கள் பெரிதும் போற்றப்பெற்றனர்.

கலைகள் மக்கள் வாழ்வோடு நெருங்கிய தொடர்புடையவை ஆகும். அவ்வகையில் சங்க இலக்கியத்தில் வரும் கூத்தர், பாணர், பொருநர், விறலியர் போன்றோர் ஒரே நிலத்துக்குரியரல்லர். கலைத்தொழில் இவர்களுக்குரியதாகலின் நானிலத்திற்கும் செல்லும் இயல்பினை உடையவர். அன்றியும் கூத்தர், பாணர், பொருநர் முதலியோர் கலையின் மூலம் பொதுமக்களோடு அன்றாடத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டிருந்தவர் என்பதால் மன்னர்களைப் பற்றிய கொடையும் குணமும் மக்களுக்குத் தெரியவும் மன்னர்களின் கேடும் சிறுமையும் மறையவும் இவர்களைப் போன்ற கலைஞர்களுக்கு அரசர்களால் முக்கியத்துவம் தரப்பட்டிருக்க வேண்டும். இதனாலேயே கூத்தர், பாணர், பொருநர் போன்ற இசைக்கலைஞர்களை ஆற்றுப்படுத்தும் போக்கில் இலக்கியங்கள் புலவர்களால் படைக்கப்பட்டிருக்க வேண்டும். புலவர்களின் படைப்பைக் கண்ட தொல்காப்பியர் போன்ற புலவரால் 'ஆற்றுப்படை' என்ற பெயரில் ஓர் இலக்கிய வகையை இலக்கணமாகக் கூறப்பட்டது எனலாம்.

கூத்தர், பாணர், பொருநர், விறலியர் போன்றோரின் பழக்க வழக்கங்களும் அக, புற வாழ்க்கை நிலைகளையும் விருந்தோம்பல், வழிபாடு, இயல் – இசை – நாடகம் சார்ந்த வாழ்க்கைப் பதிவுகளையும் ஆய்வின் எல்லையாக வரையறை செய்யப்பட்ட சங்க இலக்கியங்களிலிருந்து அக்கால மக்களின் வாழ்க்கை முறைகளையும் தொழில் முறைகளையும் இனங்காணும் முயற்சியில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வு மூலங்கள்

ஆய்வுக்குத் தேவையான மூலங்கள் இரண்டு வகைகளாகத் திரட்டப்பட்டுள்ளன. அவை,

1. முதன்மை நூல்கள்

2. துணைமை நூல்கள்

என்பனவாகும்.

## முதன்மை நூல்கள்

பாட்டும் தொகையும் என்று சுட்டப்படுகிற சங்க இலக்கியங்களான பதினெட்டு நூல்களே முதன்மை நூல்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## துணைமை நூல்கள்

ஆய்வு தொடர்பான நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் போன்ற நூல்கள் துணைமை நூல்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு எல்லை

தமிழ் இலக்கியங்களில் முதன்மையாகக் கருதப்பெறும் சங்க இலக்கிய நூல்களான பாட்டும் தொகையுமாகிய பதினெட்டு நூல்களே இவ்வாய்வுக்கான எல்லையாக வரையறை செய்யப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

சங்க இலக்கியத்தில் குலமரபு மற்றும் தொழில் மரபு தொடர்பான செய்திகளைத் திரட்டி அச்செய்திகளை இயல்களாகப் பகுத்து ஆயும்பொழுது பகுப்பாய்வு முறை பின்பற்றப்பட்டுள்ளது. மேலும் சங்க இலக்கியத்தில் காணும் மக்கள் வாழ்வியல், தொழில், பொருளாதார ஏற்றத்தாழ்வு, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றை ஆராயும்பொழுது சமூகவியல் ஆய்வு பேரளவும் மானிடவியல் ஆய்வு ஓரளவும் பின்பற்றப்பட்டுள்ளன.

## ஆய்வின் பயன்

சங்க இலக்கியங்கள் குறித்த ஆய்வுகள் தொடர்ந்து நிகழ்ந்துவரினும் இவ்வாய்வு சங்க கால மக்களின், நிலம் சார்ந்த அடிப்படையில் அவர்களது குலமரபுகளையும் தொழில் மரபுகளையும் கண்டறிதல்.

## ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகளும் உரைகளும் கட்டுரைகளும் இவ்வாய்வுக்கு முன்னோடிகளாக அமைகின்றன.

## மேனிலை ஆய்வுக்காக

ஐந்திணை மக்களின் வாழ்க்கை நிலைகளை எடுத்தியம்புகிற சங்க இலக்கியங்களில் நிலம், தொழில் சார்ந்ததன் அடிப்படையில் அவர்களின் இனவாழ்க்கை குலம், தொழில் இரண்டையும் மையப்பொருளாக வைத்து அவர்களது வாழ்க்கை முறைகளை உளவியல் சார்ந்த அடிப்படையில் நிகழ்த்தலாம் என்று இவ்வாய்வுக்குப்பின் நிகழும் மேலாய்வுக்களமாகச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

1. குலமரபு தொழில் மரபு: தோற்றமும் வளர்ச்சியும்
2. சங்க இலக்கியத்தில் அந்தணர், அரசர்
3. சங்க இலக்கியத்தில் வணிகர், வேளாளர்
4. சங்க இலக்கியத்தில் ஐந்திணை மக்கள்
5. சங்க இலக்கியத்தில் கலைஞர்களும் பிற தொழிலாளர்களும்

எனும் முறைமைகளில் இவ்வாய்வு பகுக்கப்பட்டுள்ளது.

## இயல் – 1 : குலமரபு தொழில் மரபு: தோற்றமும் வளர்ச்சியும்

**“குலமரபு தொழில் மரபு: தோற்றமும் வளர்ச்சியும்”** என்ற முதல் இயல் குலத்தோற்றம், குலப்பிரிவுகள், குலம் சாதி குறித்த அறிஞர்கள் கருத்து, சாதீயக் கட்டுமானத்திற்கான காரணங்கள், தொல்காப்பியத்தில் குலப்பாகுபாடு, மனுதர்மம் குறிப்பிடும் குலப்பாகுபாடு, தொல்காப்பியம் – மனுதர்மம் ஒப்பீடு, அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நான்கு வருணத்திற்கான தொழில்கள் ஆகியவை குறித்த செய்திகளை ஆய்கிறது.

## இயல் – 2: சங்க இலக்கியத்தில் அந்தணர், அரசர்

**“சங்க இலக்கியத்தில் அந்தணர், அரசர்”** என்ற இரண்டாம் இயல் அந்தணர்களும் வேதங்களும், அந்தணர்களுக்கான தோற்றப்புனைவுகள், அந்தணர்களுக்கான இயல்பு, அந்தணர் தொழில், அவர்கள் செய்யும் சடங்கு முறை, அரசமுறைத் தோற்றம், அரசர்க்குரிய அடையாளங்கள், அரசன் கடமைகள், அரசர்

அந்தணர்க்கான உறவு நிலை, அரசர் அமைச்சர் உறவு நிலை ஆகியவை குறித்த செய்திகளை ஆய்கிறது.

## இயல் – 3: சங்க இலக்கியத்தில் வணிகர், வேளாளர்

**"சங்க இலக்கியத்தில் வணிகர், வேளாளர்"** என்ற மூன்றாம் இயல் வணிகருக்கான தொழில்கள், அவர்களுக்கான வணிகத் தெருக்கள், அவர்கள் செய்யும் வணிக முறைமை, வணிகத்தின் வகைகள், இருவழி வணிகம், ஏற்றுமதி இறக்குமதி, சிறுவணிகர்கள், வேளாளர் தொழில், இருவகை வேளாளர்கள், வேளிர் வேளாளர் வேறுபாடு, வேளாளர் இயல்பு, வேளாளரின் இல்லறச் சிறப்பு, அவர்களின் விருந்தோம்பல் ஆகியவை குறித்த செய்திகளை ஆய்கிறது.

## இயல் – 4: சங்க இலக்கியத்தில் ஐந்திணை மக்கள்

**"சங்க இலக்கியத்தில் ஐந்திணை மக்கள்"** என்ற நான்காம் இயல் குறவர்கள், அவர்களுக்கான தொழில், உணவு, இருப்பிடம், பழக்கவழக்கம், ஆயர்கள், அவர்களுக்கான இருப்பிடம், தொழில், உணவு, விருந்தோம்பல், ஏறு தழுவுதல், வழிபாடு, அரச மரபு தோற்றம், மருத நில மக்களின் தொழில், உணவு, பழக்கவழக்கங்கள், உணவு, பரதவர் குடியிருப்பு, தொழில், உணவு, பழக்கவழக்கம், பாலை நில மக்களின் குடியிருப்புகள், உணவு, தொழில், பழக்கவழக்கம், நடுகல் வழிபாடு ஆகியவை குறித்த செய்திகளை ஆய்கிறது.

## இயல் – 5: சங்க இலக்கியத்தில் கலைஞர்களும் பிற தொழிலாளர்களும்

**"சங்க இலக்கியத்தில் கலைஞர்களும் பிற தொழிலாளர்களும்"** என்ற ஐந்தாம் இயல் கூத்தர், கூத்தர் வகையினர் அவர்களது இனக்குழு வாழ்க்கை, விருந்தோம்பப்படுதல், அவர்களது தெய்வ வழிபாடு, பாணர், பாணர் வகையினர், அவர்களது குடியிருப்பு, பாணர் பாடினியர் காலம், பாணரின் வறுமை, அவர்களது அக, புற வாழ்க்கை முறை, பொருநர், அவர்களது வறுமை, துயிலெழுப்பும் திறம், அவர்கள் வேளாண்மையை வாழ்த்தும் விதம், தோற்கருவிகளை இசைத்தலினால் அரசரால் பெறும் சிறப்பு, விறலியர், அவர்களின் அக, புற வாழ்வு, அவர்களது சார்ந்து

வாழுகின்ற முறை மேலும், கொல்லர், அவர்களின் வகை, குயவர், தச்சர், மருத்துவர், நெசவாளர், புலையர், புலைத்தி ஆகியவை குறித்த செய்திகளை ஆய்கிறது.

ஒவ்வோர் இயலின் பின்னும் அந்தந்த இயலில் கண்ட உண்மைகள் தொகுப்புரைகளாகக் கூறப்பட்டுள்ளன. முடிவுரைப் பகுதியில் ஐந்து இயல்களின் வழியாகப் பெறப்பட்ட உண்மைகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. நிறைவாக, துணைநூற்பட்டியலில் இவ்வாய்வுக்காக எடுத்தாளப்பட்ட நூல்களின் அகரநிரலும், இவ்வாய்வு தொடர்பான பிற ஆய்வுக் கட்டுரைகளும், ஆய்வேடுகளும், அகராதிகளும், இதழ்களும் பட்டியலிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

# இயல் – 1

## குலமரபு தொழில் மரபு: தோற்றமும் வளர்ச்சியும்

1.0. முன்னுரை

1.1. குலம் விளக்கம்

1.2. குலத்தோற்றம்

  1.2.1. குலப்பிரிவுகள் தோன்றிய வகைகள்

1.3. குலம் – சாதி பற்றி அறிஞர்கள் கருத்து

1.4. இனம் – சொல்லும் பொருளும்

1.5. சாதீயக் கட்டுமானத்திற்கான காரணங்கள்

1.6. தொல்காப்பியத்தில் குலப்பாகுபாடு

  1.6.1. அந்தணர்

  1.6.2. அரசர்

  1.6.3. வணிகர்

  1.6.4. வேளாளர்

1.7. மனுதர்மம் கூறும் குலப்பாகுபாடு

1.8. தொல்காப்பியம் – மனுதர்மம் ஒப்பீடு

1.9. தொகுப்புரை

# இயல் – 1

# குலமரபு தொழில்மரபு: தோற்றமும் வளர்ச்சியும்

## 1.0. முன்னுரை

பண்டைக் காலத்தில் மக்களிடையே பல்வகைப் பிரிவுகள் இருந்தன. ஐவகை நிலங்களில் வாழும் மக்கள் பிரிவினர் இருந்தனர். அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் எனும் அவர்கள் செய்யும் தொழிலால் ஏற்பட்ட பிரிவினரும் இருந்தனர். மேலும் பாணர், கூத்தர், பொருநர், விறலியர் போன்ற கலைப்பிரிவினரும் வாழ்ந்தனர். இவர்களின் வாழ்க்கை முறைகளைக் கொண்டு குலம் விளக்கம், குலம் தோற்றம், குலம் – சாதி பற்றி அறிஞர்கள் கருத்து, சாதீயக் கட்டுமானத்திற்கான காரணங்கள், தொல்காப்பியத்தில் குலப்பாகுபாடு, மனுதர்மம் கூறும் குலப்பாகுபாடு, தொல்காப்பியம் – மனுதர்மம் ஒப்பீடு போன்ற தலைப்புகளில் குலமரபு தோற்றமும் வளர்ச்சியும் பற்றி இவ்வியல் ஆய்கிறது.

## 1.1. குலம் விளக்கம்

குலம், இனம், குடி என்பன ஒரு பொருளைக் குறிக்கும் சொற்கள் ஆகும்.

> **“குலம் என்பதற்குத் தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி ‘சாதி, கூட்டம், இனம், குடி’ எனவும், சாதி என்பதற்குக் ‘குலம், மரபு, இனம்’ எனவும், இனம் என்பதற்கு ‘ஒப்பு, குலம், சுற்றம், நிரை, வருக்கம் எனவும் பொருள் கூறுகின்றது.”[1]**

குலம், இனம், சாதி என்பவை பல கூறுகளில் ஒன்றுபட்ட ஒரு குழுவினைக் குறிக்கும் சொற்களாகும்.

## 1.2. குலத்தோற்றம்

குலத்தோற்றம் பற்றிப் பலவிதான கருத்துகள் நிலவுகின்றன. ஆரியர்கள் தமிழகத்திற்கு வருமுன் தோன்றிய குலங்கள் எல்லாம் தொழில் பற்றியனவே ஆகும். இதனை,

**"குலங்கள் இயற்கையாகத் தொழில் பற்றியே தோன்றின. மாந்தன் வாழ்க்கைக்குப் பல்வேறு பொருள்கள் வேண்டி யிருப்பதால், அவற்றையெல்லாம் விளைவிக்கக்வோ தேடவோ, செய்யவோ பல்வேறு குலங்கள் ஏற்பட்டன."[2]**

என்றும்,

**"தொழில் பற்றிக் குலங்கள் ஏற்கனவே ஏற்பட்டிருந்த வேனும், அவற்றையெல்லாம் நால்வகைப் பிறவி வகுப்புகளாக வகுத்தவர் பிராமணர். அதனையே,**

***'முற்படைப் பதனில்வே றாகிய முறைமைபோல்***
***நால்வகை சாதியிந் நாட்டில்நீர் நாட்டினீர்'***

**என்று குலவிளக்க அகவல் பாடிய கபிலர் கூறினார்."[3]**

என்றும் தேவநேயன் அவர்கள் குறிப்பிடுவதிலிருந்து குலங்களெல்லாம் தொழில் பற்றித் தோன்றின என்பதை அறிய முடிகிறது.

**"உலக வழக்கில், கல்வி, காவல் (ஆட்சி), வணிகம் உழவு கைத்தொழில் என்னும் ஐவகைத் தொழில் செய்வோரும், முறையே, பார்ப்பார் அரசர் வணிகர் உழவர்(வேளாளர்) தொழிலாளர் எனப்படுவர். பிராமணர் இப்பாகுபாட்டைப் பயன்படுத்தி, பார்ப்பாரையும் அந்தணரையும் ஒருங்கே பிராமணர் என்றும், அரசரைச் சத்திரியர் என்றும், உழவர் சிறார் சிலர் மாடு மேய்ப்பதாலும், உழுவித்துண்ணும் வேளாளர் வகுப்பைச் சேர்ந்தவர் (வெள்ளாளர்) பலர் கடைக்காரரும் வணிகருமா யிருப்பதாலும், உழவும் வணிகமும் மாடு மேய்ப்பும் ஒருங்கே செய்பவரை வைசியர் என்றும், உழவுங் கைத்தொழிலுங் கூலிவேலையுஞ் செய்யும் மூவகுப்பாரைச் சூத்திரரென்றும், மக்களை நால்வகுப்பாக வகுத்து, பிராமணனுக்கு வெண்ணிறமும்**

**சத்திரியனுக்குச் செந்நிறமும் வைசியனுக்குப் பொன்னிறமும் சூத்திரனுக்குக் கருநிறமும் சார்த்திக் கூறி, நால்வரணப் பாகுபாட்டை ஏற்படுத்தி, பிராமணர் கல்வித் தொழிலையும் பிற வகுப்பார் தத்தமக்குக் குறிக்கப்பட்ட தொழில்களையும் வழிவழி செய்து வரவேண்டுமென்றும், சத்திரியன் முதலிய மூவரும் பிராமணனுக்கு இறங்கு வரிசையில் தாழ்ந்தவரென்றும், சூத்திரன் மேன் மூவருக்கும் வைசியன் மேலிருவர்க்கும் சத்திரியன் பிராமணர்க்கும் தொண்டு செய்ய வேண்டுமென்றும், இது இறைவன் ஏற்பாடென்றும், மேல்வகுப்பார் மூவரும் பூணூல் அணியும் இருபிறப்பாளரென்றும், வேதத்தைச் சூத்திரன் காதாலுங் கேட்கக் கூடாதென்றும், பிராமணனைக் காணின் மற்ற மூவரும் தத்தம் தாழ்வு நிலைக்குத் தக்கவாறு ஒதுங்கி நிற்க வேண்டுமென்றும், இறைவன் கட்டளையிட்டதுபோற் கற்பித்துவிட்டனர்.”**[4]

என்னும் தேவநேயன் அவர்களின் கூற்றின் மூலம் இயற்கையாகத் தொழில் பற்றியிருந்த குலப்பாகுபாடு நிறம் பற்றி மாற்றி அமைக்கப்பட்டதை அறிய முடிகிறது.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் வேட்டையாடுவதால் வேட்டுவர், குறவர் எனவும், முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள் ஆக்களை மேய்ப்பதால் ஆயர் எனவும், மருத நிலத்தில் வாழ்ந்த மக்கள் உழவுத்தொழில் செய்வதால் உழவர் எனவும், நெய்தல் நிலத்தில் வாழ்ந்த மக்கள் மீன்பிடித் தொழிலைச் செய்வதால் நுளையர், பரதவர் எனவும் அழைக்கப்பட்டனர்.

முதன் முதல் தோன்றிய குலங்கள் இந்நால்வகைத் தொழில் வகுப்புகளே ஆகும். முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாலை என்ற நிலம் உருவானது. அங்குள்ள மக்கள் வழிப்போக்கரை அம்பெய்து கொள்ளையிடுவதால் அவர்கள் எயினர் எனவும், வீரம் மிக்கமையால் மறவர் எனவும் அழைக்கப்பட்டனர்.

மருதநில மக்கள் தொகை பெருகிய பின் பண்டமாற்றத்திற்கு வணிகரும், வழக்குத் தீர்ப்பிற்கும் காவற்கும் தலைவரும், நோய் நீக்கவும் மழை பெய்விக்கவும் தெய்வத்தை வேண்ட பூசாரியும் என்று வகுப்புகள் பிரியத் தொடங்கின. இதனை,

**"மருதநில மக்கள் தொகை பெருகிய பின், பண்டமாற்றிற்கு வணிகரும், வழக்குத் தீர்ப்பிற்கும் காவற்கும் ஊர்க்கிழவரும் (தலைவரும்), நோய் நீக்கவும் மழை பெய்விக்கவும் தெய்வத்தை வேண்ட உவச்சனும் (பூசாரியும்), உழவரினின்று பிரிந்தனர்.**

**ஊர்க்கிழவரே அரசர்குலத் தொடக்கம். ஆட்சிப் பரப்பு விரிய விரிய, வேளிரும் மன்னரும் கோக்களும் வேந்தரும் முறையே தோன்றினர்.**

**முதற்காலத்தில், நானிலத்திற்கும் பொதுவான பண்டமாற்று மருத நிலத்திலேயே நிகழ்ந்தது. பின்னர் நீர்வாணிகம் தோன்றிய பின் நெய்தல் நிலத்திலும் நிகழ்ந்தது.**

**மருத நிலத்திற் போன்றே ஏனை நிலங்களிலும், குடியிருப்புத் தலைவரும் தேவராளரும் (பூசாரிகளும்) தோன்றினர்.**

**உவச்சர் வகுப்பினின்றே, நாளடைவில் புலவரும் ஆசிரியரும் துறவியரும் முனிவரும் முதன்முதலாகத் தோன்றினர். கல்வி, உலகியலும் மதவியலும் என இரண்டாகப் பிரிந்தது."[5]**

எனும் தேவநேயன் அவர்களின் கூற்றின் மூலம் குலங்களின் தோற்றம் பற்றி அறிய முடிகிறது. மேலும்,

**"மருத நிலப் பேரூர்களில், உழவிற்குப் பக்கத் துணையாகப் பதினெண் கைத்தொழில்கள் படிப்படியாகத் தோன்றின. பிறநிலக் குடியிருப்புக்களிலும், அவ்வந் நிலத்திற்கேற்றவாறு சில கைத்தொழில்கள் தோன்றின."[6]**

என்பார் தேவநேயன் அவர்கள்.

இவ்வாறு நானிலங்களிலும் வாழ்ந்த மக்கள் பல்வேறு கருவிப் பொருள்களைக் கொண்டு நாகரிக வாழ்க்கைக்கேற்ற பற்பல தொழில்களைச் செய்து வந்தனர். நாகரிகமும் மக்கள் தொகையும் படிப்படியே வளர எல்லாத் தொழில்களும் அல்லது வகுப்புக்களும் இரண்டும் பலவுமாகப் பிரிந்தன. பின்னர் ஒரே வகுப்பார்க்கே இட வேறுபாட்டால் பெயர் வேறுபாடும் ஏற்பட்டது.

உழவர்க்கு வேண்டிய பொருள்களைச் செய்து உதவப் பக்கத்துணையாகத் தோன்றிய பதினெண்குடி மக்களை வின்சிலோ (Winslow) அகரமுதலி பின்வருமாறு கூறும்.

| | | |
|---|---|---|
| வண்ணான் | எண்ணெய்வாணிகன் | ஓச்சன் |
| நாவிதன் | உப்புவாணிகன் | வலையன் |
| குயவன் | இலைவாணிகன் | பாணன் |
| தட்டான் | பள்ளி | |
| கன்னான் | பூமாலைக்காரன் | |
| கற்றச்சன் | பறையன் | |
| கொல்லன் | கோவிற்குடியான் (சங்கூதுவோன்) | |
| தச்சன் | | |

உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவை விளைவிப்பதனால் உழவரே முதல் குடியினராகக் கருதப்பட்டனர். உழவருக்கடுத்தபடியாக வாணிகம் செய்து நாட்டிற்கு நன்மை செய்த வாணிகர் போற்றப்பட்டனர். மக்களுக்குத் தீங்கு நேராமல் நீதியை நிலைநாட்டிய அரசன் வணிகருக்கு அடுத்தபடியாகக் கருதப்பட்டான். ஆசிரியனாகவும் ஆக்கவழிப்பாற்றலுள்ளவனுமான அந்தணன் அரசருக்கு அடுத்தபடி தெய்வத்தன்மையுள்ளவனாகக் கருதப்பட்டான். இதனை,

> **“வேளாளர் வணிகர் அரசர் அந்தணர் என்பதே வரலாற்று முறையாயினும், அந்தணர்க்கும் அரசர்க்கும் சிறப்புக் கொடுத்தற் பொருட்டு அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என**

**எதிர்முறையிற் கூறினர். இந்நாற் பகுப்பையே, பிராமணர் சத்திரியர் வைசியர் சூத்திரர் எனத் திரித்தனர் ஆரியப் பூசாரியர்."[7]**

என்பார் தேவநேயன் அவர்கள்.

குறிஞ்சி நிலத்தில் நாகரிகம் தொடங்கியதேனும் அது முழு வளர்ச்சி அடைந்தது மருத நிலத்திலே ஆகும். மருத நிலத்தில் உழவுத்தொழில் வளர வளர அத்தொழிலுக்குத் தேவையான கருவிகளைச் செய்ய பல தொழிலாளர்கள் தோன்றினர். அத்தொழிலால் வகுப்பு வேறுபாடுகள் தோன்றின. இதனை,

**"கற்காலங் கழிந்து மருதநில வாழ்வு தொடங்கிய பின்னரே தொழிற் பிரிவும் அதுபற்றிய வகுப்பு வேறுபாடுந் தோன்றின."[8]**

எனத் தேவநேயன் அவர்களின் கூற்று மெய்ப்பிக்கும்.

**"நால் வருணம் என்ற பாகுபாடு கி.மு. நான்காம் நூற்றாண்டு அளவில் வட நாட்டிலும் தென்னாட்டிலும் இருந்தது. இப்பாகுபாடு முதலில் தொழில் அடிப்படையிலும் பின்னால் பிறப்பு அடிப்படையிலும் வளர்ந்தது. தொழில்கள் மிகுதியாகப் பெருகியதும் அரசியல், பொருளியல், சமயம் ஆகியவற்றின் தாக்கமும் சாதிகள் பல்கக் காரணமாயின. பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்ற பாகுபாடு இந்தியா முழுவதும் விளங்கியது. அந்தணன், அரசன், வணிகன், வேளாளன் எனத் தமிழில் வழங்கும். சமயம், அரசியல், வணிகம், உழவும் தொழிலும் என்ற குமுகாயத்தின் நான்கு பிரிவுகளும் நான்கு பிரிவினரால் இயக்கப்பட்டன. சமயம், அரசியல், வணிகம் என்னும் மூன்றும் அறிவு உழைப்பு மிகுந்தன. உழவும் தொழிலும் உடல் உழைப்பு உடையன. அறிவு தன் மேம்பாட்டாலும் ஆளுடைமையாலும் உழைப்பைச் சுரண்டத் தொடங்கியது.**

**இதனால் உடலுழைப்பாளர்கள் தாழ்ந்தபடியினர் ஆயினர். மன்னர் பின்னவர் ஆகிய அரசனுக்கு அடுத்த செல்வச் சிறப்பு மிக்க வணிகர் வேளாளர்க்கு மேற்படியினர்; இன்ப வாழ்வோடு போர் முதலிய துன்பமிகு உடலுழைப்பும் உடைய அரசர் அரசியல் தலைமையால் வணிகர்க்கு மேற்படியினர்; அந்தணர், அரசர்க்கும் மேலாகத் தெய்வத்துடன் வைக்கப்படும் மேல் நிலையினர் ஆயினர்."[9]**

என்பார் பா. இறையரசன்.

வேதகாலத்தில் வேதங்கள் இன்றியமையாதனவாகவும் முதன்மையானதாகவும் கொள்ளப்பெற்றன. வேதம் பயிலல், பயிற்றல், சடங்குகள், இறைவழிபாடுகள் போன்றன வடமொழி அறிந்த பிராமணர்களாலேயே செய்யப்பெற்றன. அரியணை ஏறும் நிகழ்வு, அரசு நிகழ்வுகள், குடும்ப நிகழ்வுகள், சடங்குகள் அவர்களாலேயே நிகழ்த்தப்பெற்றன. அவர்களன்றி ஒரு நாட்டின் எந்த ஒரு நன்னிகழ்வோ தீ நிகழ்வோ சடங்குகள் அடிப்படையில் செய்யப்பெறாது. இத்தகு நிலையில் மொழி, கல்வி, அறிவு, ஆன்மிகம் எனும் பல்துறை நிலையிலும் முன்னின்றவர்கள் முதன்மை பெற்றனர்.

ஒரு நாட்டின் காவல், ஆட்சிமுறை போன்றவை அறிவு வலிமையோடு உடல் வலிமை போன்ற பல்வேறு வலிமைகள் பெற்றவர்கள் அடுத்த நிலையில் அமைந்தனர்.

ஒரு நாட்டின் பொருளாதாரத்தை அன்றைய சூழலில் நன்னிலையில் நிலை நிறுத்தவும் தொடரவும் அமைந்த தொழில்கள் வேளாண்மையும் வணிகமும் ஆகும். அவ்வகையில் இவர்கள் மூன்றாவது அடுக்கு நிலையில் உள்ளனர்.

இம்மூவகையினரின் தொழில்களுக்கு உதவும் வகையில் ஏவலராகவும் வினைவலராகவும் அமைந்தவர் நான்காம் நிலையினர் என்பதை மேற்கண்ட சான்றுகள் வழி அறிய முடிகிறது.

**"இருக்கு வேத காலத்தில் சாதிப்பாகுபாடு தோன்றவில்லை. இது ஆரியர்களையும், திராவிடர்களையும் வேறுபடுத்துவதற்காக 'வர்ணம்' என்ற வார்த்தையைப் பயன்படுத்தியுள்ளது. இருக்கு வேதத்தின் இறுதிக் காலத்தில் தொழிலின் அடிப்படையில் நான்கு வகுப்புகள் தோன்றின. யஜுர் வேத காலத்தில் இந்த நான்கு வகுப்புகளும் நான்கு சாதிகளாக மாறின. 1) சமயப் பணியில் ஈடுபட்டிருந்த மத குருக்கள் பிராமணர்கள். 2) ஆட்சித் துறையிலும், போரிலும் ஈடுபட்டு நாட்டைப் பாதுகாத்தவர்கள் க்ஷத்திரியர்கள். 3) நிலங்களைப் பயிரிடுவோரும் வாணிபத்தில் ஈடுபட்டிருந்தோரும் வைசியர்கள். அடிமைப் பணியினைச் செய்தோர் சூத்திரர்கள். இவற்றில் முதல் மூன்று வகுப்பிற்கும், கடைசி வகுப்பிற்கும் இடையில் மிகுந்த வேறுபாடுகள் காணப்பட்டன."**[10]

எனக் கூறுகிறார் பொன். தங்கமணி.

கல்வி, சமூக சமயத் தொடர்புகள், அரசியல் அறிவு, சடங்குகள் போன்ற செல்வாக்கினால் பிராமணர்களும், நாட்டுரிமை, காவல், ஆட்சிப்பொறுப்பு போன்ற செல்வாக்கினால் சத்திரியர்களும், நாட்டுப் பொருளாதாரத்தின் அடிப்படைகளாக விளங்கும் வேளாண்மை, வணிகம் போன்ற செல்வாக்கினால் வைசியர்களும் உயர்நிலைக் குலங்களாகக் கருதப்பெற்றனர்.

இம்மூவகையினருக்கு உதவுவதற்கும் அவர்கள் தொடர்பான செயல்களைச் செய்வதற்கும் அமைந்தவர்களே சூத்திரர்கள். இவர்களுக்குக் கல்வி, ஆட்சிப் பொறுப்புச்சூழல், வணிகம், வேளாண்மை போன்றவற்றில் உரிமையின்மையோடு அடிநிலைத் தொழில் செய்தல் எனும் கட்டமைப்பில் உருவாக்கப்பெற்றமையே இவர்கள் தாழ்ந்த பிரிவினராக ஆனமைக்குக் காரணங்களாகும்.

**"பரம்பரையாக ஒரு தொழிலைச் செய்து வந்தவர்களிடையே பல குலப்பிரிவுகள் தோன்றின. இக்குலப் பிரிவுகளின் இறுக்கமே பின்பு சாதிகளாக இருக்க வேண்டும்."[11]**

என்பார் சி. பரமேஸ்வரி.

மேற்கூறிய சான்றுகளிலிருந்து இருக்கு வேதத்தின் இறுதிக் காலத்தில் தொழிலின் அடிப்படையில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற குலப்பாகுபாடுகள் தோற்றம் பெற்றன. தொடர்ந்து அவ்வத்தொழில் செய்யும் முறையிலேயே அக்குலமரபினரும் செய்து வந்தனர். அவ்வகையில் அத்தொழில் செய்வோர் அடுத்தடுத்து அமைந்து பிறப்பு அடிப்படையில் குலமரபு இறுக்கம் பெற்றது. அவையே பின்னர் சாதிக் கட்டுமானங்களாக மாறின.

### 1.2.1. குலப்பிரிவுகள் தோன்றிய வகைகள்

நிறம், இடம், குடியிருப்பு, ஊண், உடை, அணி, தாலி, கோலம், முதற்கருவி, கருவி, கருவியளவு, பண்டமாற்றுப் பொருள், தொழிற்பிரிவு முதலியவற்றைக் குலப்பிரிவுகள் தோன்றிய வகைகளாகத் தேவநேயன் அவர்கள் குறிப்பிடுவார்.

| | | | |
|---|---|---|---|
| **"1.** | **நிறம்** | **–** | **வெள்ளாளன் (வெண்களமன்), காராளன் (கருங்களமன்), இருளன்.** |
| **2.** | **இடம்** | **–** | **சோழிய வேளாளன், ஆர்க்காட்டு முதலி, மலையாளி.** |
| | **திசை** | **–** | **தென்றிசை வெள்ளாளர், மேல்நாட்டான்.** |
| **3.** | **குடியிருப்பு** | **–** | **கோட்டை வெள்ளாளன், தெருவான் (சேரநாட்டுச் சாலியன்).** |
| **4.** | **ஊண்** | **–** | **'சைவ' (மரக்கறி) வெள்ளாளன், புலையன், தவளை தின்னி (பறையன்).** |
| **5.** | **உடை** | **–** | **தண்டப்புலையன், குளிசீலையாண்டி(கோவணாண்டி)** |

| | | | |
|---|---|---|---|
| **6.** | **அணி** | **–** | **பவளங்கட்டி (கொங்கு வேளாளர்).** |
| **7.** | **தாலி** | **–** | **சிறுதாலி மறவர், ஐந்தாலி (அஞ்சாலி) யிடையர்.** |
| | **கொண்டை முடிப்பு** | **–** | **கொண்டைகட்டி வேளாளர்** |
| **8.** | **கோலம்** | **–** | **பச்சைகுத்தி (குறவர், வேளாளர்) நீறுபூசி (வெள்ளாளன்).** |
| **9.** | **முதற்கருவி** | **–** | **பொற்கொல்லர், வெண்கலக்கன்னார்.** |
| **10.** | **கருவி** | **–** | **வில்லி, வலையன்.** |
| **11.** | **கருவியளவு** | **–** | **சிறுபாணர், பெரும்பாணர், சின்னமேளம், பெரியமேளம் (மேளகாரர்).** |
| **12.** | **பண்டமாற்றுப்** | **–** | **கூலவாணிகன், இலை வாணியன், எண்ணெய் பொருள்வாணியன்.** |
| **13.** | **தொழிற்பிரிவு** | **–** | **தீக்கொல்லன், இரும்புக் கொல்லன், கடைச்சற் கொல்லன்.”[12]** |

## 1.3. குலம் – சாதி பற்றி அறிஞர்கள் கருத்து

குலங்களில் இருந்தே சாதிப் பிரிவுகள் தோன்றின என்னும் கருத்து தமிழ்ச் சிந்தனையாளர்களிடையே வலுவாகக் காணப்படுகிறது.

> **“நாகரிகத்திற்கு ஆட்பட்டுக் குலையத் தொடங்கிய குலங்களின் எச்சம் தான் சாதிகள். அஃதாவது தொல் குலங்கள் தாம் சாதிகளாகத் திரிந்தன.”[13]**

என்பார் குணா.

> **“சமூக வாழ்க்கையில் மொழி, மதம், ஆசாரம், தொழில் பாகுபாடு, இயற்கையின் தட்பவெப்ப சூழ்நிலை, உடலமைப்பு இவைகளாலும் மக்களிடையே பல்வேறு பிரிவினைகள் உண்டாகின்றன.”[14]**

எனக் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது.

**"பழந்தமிழகத்தில் இரண்டடுக்கு முறையில் சாதிமுறை நிலவியிருந்தது. அதாவது நாட்டுப்புறங்களில் தொழிலும் நிலமும் சார்ந்த அடிப்படைகளால் அமைந்த குடிப்பிரிவினைகளும், நகர்ப்புறங்களில் வருணமும் குலமும் சார்ந்த அடிப்படைகளால் அமைந்த மக்கட் பிரிவினைகளும் சாதிகளாய் உயிர்த் திருந்தன."[15]**

எனக் கூறுவார் சின். கோதில் மொழியன்.

இக்கருத்திலிருந்து, நாட்டுப்புறங்களில் ஒரு வகையாகவும் நகரங்களில் ஒருவகையாகவும் சாதீயக் கட்டுமானங்கள் வலுப்பெறுதலை அறிய முடிகிறது.

**"சாதிகளின் தோற்றம் தொழில் பிரிவினையால் உண்டாயிற் றென்றும், பரம்பரையாக ஒரு தொழிலைச் செய்யும் கூட்டங்கள் சாதிகள் ஆயினவென்றும், ஒரு தொழிலைச் செய்பவர் மற்றத் தொழிலாளரோடு உணவு, மணம் முதலிய தடைகளை அனுட்டித்து வந்தனர்."[16]**

எனக் கலைக்களஞ்சியம் குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கது.

**"சங்ககாலத் தொடக்கத்தில் ஏற்படாத சாதிமுறை, சங்ககால இறுதியில் – சங்கம் மருவிய காலத்தில் வலிமை பெற்றது எனலாம். ஒவ்வொரு தொழிற்பிரிவும், சாதிப்பிரிவாக மாறிவிட்டது போலும். இருப்பினும் அடிப்படையில் ஒன்றை மறந்துவிடக்கூடாது. தமிழ்ச் சமுதாய பிரிவு வடபுல ஆரிய மக்களிடத்தில் அமைந்த சாதிப்பிரிவினின்று பெரிதும் மாறுபட்டதும், தொடர்பற்றதும் ஆகும். சிறுசிறு குடிகளாக வாழ்ந்த தமிழ் மக்கள், நிலையானதோர் இடத்தைப் பெற்று வாழ்ந்தனர். தமிழ்ச் சமுதாயத்தில் 'சாதி' தொழிலின்**

**அடிப்படையில் உருவானதேயன்றிப் பிறப்பின் அடிப்படையில் உருவானதன்று."**[17]

என்பார் சி.ஈ. இராமச்சந்திரன்.

**"சாதி என்பது தனித்த நிறுவனமன்று. அது ஒரு குறிப்பிட்ட உற்பத்தி முறையில் காணப்படும் உற்பத்தி உறவு வடிவம் ஆகும். பரம்பரை பரம்பரையாக ஒரே தொழிலில் ஈடுபட்டு, அதில் பெறும் வருமானத்துக்கும் அதையொட்டிய வாழ்க்கைச் சூழலுக்கும் தக்க வாழ்முறையைக் கொண்டு, ஒரு குறிப்பிட்ட குலத்துக்குள்ளே கொள்வினை, கொடுப்பினை கொண்டு, ஒரே விதமான சமூக பழக்க வழக்கங்களை மேற்கொண்ட கூட்டத்தைப் பொதுவாகச் சாதி என அழைக்கலாம்."**[18]

என்பார் கோ. கேசவன்.

**"பரம்பரை பரம்பரையாக ஒரே தொழிலைச் செய்து வந்தமையால் நாளடைவில் பல தொழிற்பிரிவுகள் உருவாகக் காரணமாயிற்று. அந்தந்தத் தொழிற்பிரிவினரும் தமக்குள்ளே மட்டும் மணவுறவு கொண்டு பிறரோடு மணவுறவைத் தவிர்த்தமையால் தனித்தனிச் சாதிகள் உருவாகியிருக்க வேண்டும். சங்க நாளில் அந்தந்தக் குலத்தவரும் தமக்குள்ளே மட்டுமே மணவுறவு கொண்டனர் என்றே தோன்றுகிறது. தலைமக்கட்குரிய ஒப்புமைகளைக் கூறுகையில் பிறப்பு என்பதனை முதல் தகுதியாகக் கூறுவது கொண்டு இதனை அறியலாம்."**[19]

என்பார் அ. தட்சிணாமூர்த்தி.

**"வருணம் என்பதற்கு நிறம் என்பது பொருள். முதலில் நிற அடிப்படையில் தோன்றிய பாகுபாடே நால் வருணத்திற்கும் எண்ணிறந்த சாதிகளுக்கும் வழி வகுத்தது. இந்தியச் சமூகம்**

**என்னும் நிலம் அளவற்ற சாதி வரப்புகளைப் பெற்றதற்குக் காரணம் பிறரிடமிருந்து பிரிந்து நிற்கத் தூண்டிய வருணப் பாகுபாடேயாகும். சாதிகளின் தாயாக வருணாச்சிரமம் அமைந்துவிட்டது."[20]**

என்பார் கு.வெ. பாலசுப்பிரமணியன்.

**"புனிதம், சடங்கு ஆகியன பெயராலும், தீண்டாமை பெயராலும் சமூகத்தில் கீழ்நிலைப்பட்ட ஓர் இனம் உருவாவதற்கு நால் வருணக் கோட்பாடே காரணமாகி உள்ளது."[21]**

என்பார் சிலம்பு நா. செல்வராசு.

**"பழந்தமிழ் நாட்டில் சாதி பற்றிய பிரிவுகள் இல்லை. எண்ணற்ற குலப்பிரிவுகளோ, குடிப்பிரிவுகளோ இல்லை. மக்கள் அவரவர் செய்யும் தொழில்களின் பெயராலும் நிலங்களின் பெயராலும் வழங்கப்பட்டனர்."[22]**

என்பார் ப. அரங்கநாதன்.

**"தமிழர்கள் சாதிப்பிரிவுகள் தொழிலடிப்படையில் அமைந்தது ஆகும். இத்தொழிலடிப்படையில் காணப்பட்ட குலங்களுக்குள் ஏற்பட்ட பிரிவுகளும் இக்குலப்பிரிவுகளுக்குள் ஏற்பட்ட இறுக்கமுமே பின்பு சாதிகளாக உருமாறியிருக்க வேண்டும்."[23]**

என்பார் சி. பரமேஸ்வரி.

**"பழந்தமிழ் மக்களுக்குத் தொழின்மை இயற்கையை மையாகக் கொண்டு அமைந்தது. மக்கள் அவர்களுக்குத் தெரிந்த தொழில்களைச் செய்தனர். நாளடைவில் அத்தொழில்களில் தேர்ச்சியும் பெற்றனர். பின்னர் அவை குலத் தொழில்களாக உருவாக்கப்பெற்று அதற்கும் சாதிகளாக மாற்றம் பெற்றன.**

**தொழில்களில் ஏற்றத்தாழ்வு கருதப்படாதவரை சாதி வேற்றுமைகள் இல்லை. தொழில்களில் ஏற்றத்தாழ்வைக் கற்பித்த பின்னரே சாதி வேற்றுமைகள் மிகுந்தன."[24]**

என்பார் மு. சின்னப்பன்.

**"நில இயற்கையின் அடிப்படையிலும் செய்யும் தொழிலின் அடிப்படையிலும் மக்களிடையே குலப்பாகுபாடு தோன்றியது. அக்குலப்பாகுபாடு பல வகையான சாதிப் பிரிவுகளைத் தோற்றுவித்தது. நாளடைவில் சாதிகளிடையே உயர்வு தாழ்வு தலை காட்டத் தொடங்கின."[25]**

என்பார் அ. முத்துசாமி.

**"சாதி என்னும் சொல்லே தமிழ்ச் சொல்லன்று. இஃதொன்றே, சாதிப்பிரிவு தமிழரிடை என்றும் இருந்ததில்லை; ஆரியக் கலப்பின்போது தமிழகத்தில் இறக்குமதி செய்யப்பட்ட நஞ்சு என்பதைத் தெளிவாக்கும்."[26]**

என்பார் இரா. மதிவாணன்.

**"பண்டைத் தமிழகத்தில் சாதி கிடையாது. குலம் தான் உண்டு. குலம் வேறு, சாதி வேறு என்ற விளக்கம் சரியாக இருக்கலாம். ஆனால், அந்தக் 'குலம்' தான் சாதியை வளர்ப்பதற்கு அல்லது ஜாதியாக மாறுவதற்கு அடிப்படையாக இருந்தது என்பதை மறுப்பதிற்கில்லை. எதற்கோ வகுத்த இந்த குலம், கோத்ரிம் வம்சம் காலப் போக்கில் ஏதேதோ தத்துவங்களைக் கூறிக் கொண்டு, இன்று பிரிவுகளாகி, ஜாதியாகி பரந்தும் விரிந்தும் இருப்பதைக் காணாமலிருக்க முடியவில்லை. 'குலம்' என்ற சொல் குடும்பத்தைக் குறிப்பதாகும்.**

**இக்குலங்கள் கலப்புறும்போது வேறொரு புதிய குலம் தோன்றும்."[27]**

என்பார் அன்பு பொன்னோவியம்.

**"சமூகத்தில் வர்ணங்களின் அடிப்படையில் மக்கள் பாகுபடுத்தப்பட்டனர். ஆரம்பத்தில் பிராமணர், சத்திரியர், வணிகர், சூத்திரர் என்னும் நான்கு வர்ண சாதிகள் உருவாயின. இந்த நான்கு வர்ண சாதிகளே பின்பு நாலாயிரம் சாதிகளாகக் கிளைக்கக் காரணமாயின."[28]**

என்பார் பொதிகைத் தமிழரசன்.

மேற்கூறிய சான்றுகளிலிருந்து, மக்கள் ஒவ்வொருவரும் அவரவர்களுக்குத் தெரிந்த தொழில்களைச் செய்து வந்தனர். அத்தொழில்களே அவர்களின் குலத்தொழில்களாக மாறின. பரம்பரை பரம்பரையாக ஒரு தொழிலைச் செய்து வந்த அம்மக்கள் அக்குலங்களுக்குள்ளே திருமண உறவை மேற்கொண்டதால் அக்குலப்பாகுபாடு மேலும் இறுகியது. தொழிலில் உயர்வு தாழ்வு தலைக்காட்டத் தொடங்கியதற்குப் பிறகு அக்குலப்பாகுபாடு பல வகையான சாதிப் பிரிவுகளைத் தோற்றுவித்தது என்பதை அறிய முடிகிறது.

**"ஒரு தனி மனிதன் பிறந்தது முதல் இறுதிவரை தான் பிறந்த சாதிக்குக் கட்டுப்பட்டவன். சாதியே மணம், வாழ்வு, பிறப்பு, இறப்பு, பாவம், புண்ணியம் ஆகிய சடங்குகள் எவ்வெவ்வகையில் செயல்படுத்தப்பட வேண்டும் என்பதற்கு வழிகாட்டி வருகின்றது.**

1. **அகமணம் (Endogamy)**
2. **உணவு உண்பதில் கட்டுப்பாடு**
3. **தகுதி அடிப்படை (Status)**
4. **உணவு, பாலியல், சடங்கு போன்றவற்றில் தனித்த நிலை**
5. **வழிவழியான தொழிலுரிமை (Traditional Profession)**

**6. பிறவிப் பண்பு (Heriditary)**

**7. பிராமணர்களுடன் கொள்ளும் தொடர்பாலேயே மற்ற சாதியினரின் தகுதிகள் நிர்ணயிக்கப்படல்."[29]**

என ஏழு வகை அடிப்படைப் பண்புகளைச் சாதியின் அடிப்படை கோட்பாடுகளாக ஹட்டன் **(Huttan)** கூறுவதாகச் சு. சண்முகசுந்தரம் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

குலமரபு, சாதிகளாக இறுகியது மட்டுமல்லாமல் ஒரு மரபினரோடு மற்றொரு மரபினர் திருமண உறவு, உணவு படைத்தல், பரிமாறல், வழிபாடு போன்றவற்றில் உறவில்லாத நிலையில் தடை ஏற்படுத்தப்பெற்றது. அச்சூழல் மேலும் சாதீயக் கட்டுமானத்தை உடைக்கவியலா வகையில் கட்டமைத்து விட்டது.

## 1.4. இனம் – சொல்லும் பொருளும்

இனம் என்பதற்கு,

**"குலம், கூட்டம், சம்பந்தம், சுற்றம், திறள், பசுக்கூட்டம், மந்திரிகள் வருக்கம்."[30]**

என்னும் பொருள்களைத் தமிழ்மொழி அகராதி தருகிறது.

**"வருக்கம், குலம், சுற்றம், நிரை, அமைச்சர், ஒப்பு."[31]**

என்ற பொருள்களைத் தமிழ்ப் பேரகராதி குறிப்பிடுகிறது.

சங்க இலக்கியங்களில் இனம் என்பதற்கு விலங்கு, பறவை ஆகியவற்றின் தொகுதியைச் சுட்டுவதாகவே உள்ளது. மிகச் சில இடங்களிலேயே மாந்தர் குழுவைக் குறிக்கப் பயன்பட்டுள்ளது.

***"இனக்களமர் இசைபெறுக"*** **(பொரு.194)**

***"விலை வேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்"*** **(கலித்.103:71)**

***"இருங்கிளை யினனொக்கல்***
***கருந்தொழில் கலிமாக்கள்"*** **(பட்.61–62)**

*"தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவரினம்"*

**(கலித்.39:47)**

என்னும் அடிகளில் இனம் என்பதற்கு மாந்தர் குழுவைக் குறிக்கப் பயன்படுத்தியிருப்பதை அறியலாம்.

*"இனநிரை"* **(நெடு.4)**

*"உழையினம்"* **(குறுந்.68:2)**

*"இனநாரை"* **(பொரு.204)**

*"இனவண்டு"* **(முல்லைப்.3)**

*"எருமையினம்"* **(மலை.472)**

என்னும் அடிகளின் மூலம் இனம் என்பதற்கு விலங்குகளின் கூட்டத்தைக் குறிப்பதைக் காணலாம்.

## 1.5. சாதீயக் கட்டுமானத்திற்கான காரணங்கள்

கவிஞர் குடந்தையான் சமூகவியல் அடிப்படையில் சாதீயக் கட்டுமானங்களின் காரணங்களைக் கூறியுள்ளார். அவை பின்வருவன,

**"1. பரம்பரைத் தொழில்**

**2. ஒரு இனம் தன்னை உயர்ந்த சாதியாகக் கூறிக் கொண்டு தனித்து நின்றது.**

**3. பல்வேறு மதங்கள் தோன்றி மோதிக் கொண்டமை.**

**4. பொதுச் சட்டங்களைக் கொண்டு வராமல் சாதிக்கொரு நீதியினை அரசர்கள் வழங்கியது.**

**5. கர்ம வினையில் முற்பிறவியில் நம்பிக்கை வைத்தது.**

**6. மூதாதையரை வழிபடுதல், புனித உணவு படையல் போன்றவை.**

**7. தாய்வழி – தந்தைவழிப் பண்பாட்டுப் பழக்கங்களில் ஏற்பட்ட மோதல்கள்.**

**8. இன – நிற வேறுபாடுகள் காரணமாக ஏற்பட்ட மோதல்கள்.**

9. **ஆதிக்கக்காரர்கள், அயல் நாட்டவர்கள் பின்பற்றிய பொருளாதாரக் கொள்கைகள்.**

10. **இந்தியத் துணைக் கண்டத்தின் நிலவியல் அமைப்பு.**"[32]

மேற்கூறிய கருத்துகளிலிருந்து தொழில், மேட்டிமை, சமய நம்பிக்கை, குருதி உறவு, பண்பாட்டுச் சிக்கல்கள், நிறம், பொருளாதாரம், நிலவியல் போன்றன அக்கட்டுமானத்தை உருவாக்குவதை அறிய முடிகிறது.

## 1.6. தொல்காப்பியத்தில் குலப்பாகுபாடு

தொல்காப்பியர் காலத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நான்கு பிரிவுகள் இருந்தன.

### 1.6.1. அந்தணர்

தொல்காப்பியர் அந்தணர்க்குரிய அடையாளங்களாக,

*"நூலே கரகம் முக்கோல் மணையே*
*ஆயுங் காலை அந்தணர்க் குரிய"*[33]

என்பனவற்றைக் குறிப்பிடுவார்.

தொல்காப்பியர் கூறிய அடையாளங்களுள் முதலாவதான நூல் என்பது முப்புரிநூலைக் குறிக்கிறது. இந்நூல் அணிவதற்கு முன், பின் என்று இருபிறப்பைச் சுட்டுவதாக உள்ளது. இது அவர்களை மேல் நிலை ஆக்க நிலையில் முன் நிறுத்துகிறது. மேலும் இது அவர்களுக்கே உரியனவாகச் சில ஒழுக்கங்களை உறுதி செய்கிறது; முறைப்படுத்துகிறது. பிற மூன்றும் அவர்கள் செய்யும் முதன்மையான தொழிலாகிய வேள்விக்குப் பயன்படக்கூடியனவாக உள்ளன. சமுதாயத்தில் சமய நம்பிக்கை அடிப்படையில் இவையும் மேல்நிலை ஆக்கத்திற்கான அடிப்படைகளே.

அந்தணர்கள் அரசாள்வதற்கும் உரியவர்கள் என்பதை,

*"அந்த ணாளர்க் கரசுவரை வின்றே"*[34]

எனக் குறிப்பிடுவார்.

அவ்வாறு குறிப்பிட்டாலும் சங்கத் தமிழகத்தில் அரசியல் பொறுப்புகளில் அந்தணர்கள் இருந்துள்ளார்களே தவிர அரசர்களாக முடிசூட்டிக் கொண்ட சான்று எதுவும் இல்லை.

*"அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்"*[35]

எனும் நூற்பாவில் அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்பதற்கு இளம்பூரணர்,

*"ஆறு திறனாகிய அந்தணர் பக்கமும்"*[36]

எனப் பார்ப்பனரை அந்தணர் என்றே குறிப்பிடுகிறார்.

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் ஆகிய ஆறும் அந்தணர்க்குரிய தொழில்களாகும். இங்கும் தொல்காப்பியர் முன்னர்க் கூறிய அடையாளங்களுக்கு ஏற்ற வகையிலேயே அவர்களின் தொழில்களையும் குறிப்பிட்டுள்ளமை சிந்திக்கத்தக்கது. இவை அனைத்துமே வேதம், சமயம், நம்பிக்கை, சடங்கு எனும் வகையில் முன்னிறுத்தப் பெறுகின்றன.

**" 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' என்பது சரியான பாடமல்ல. 'அறுவகைப்பட்ட அந்தணர் பக்கமும்' என்பதே சரியான பாடமாயிருக்க வேண்டும். நெடுங்காலத்துக்கு முன்பே 'அந்தணர்' என்பது 'பார்ப்பனர்' என்று மாறியிருக்க வேண்டும்."**[37]

எனக் கூறும் சாமி. சிதம்பரனாரின் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது.

### 1.6.2. அரசர்

ஒரு நாட்டு மக்களின் முன்னேற்றத்தில் கூடுதல் பங்குடையவன் அரசன். அவன் ஆற்றுகின்ற செங்கோலாட்சி, போர்த்திறம் போல்வன அவனது கடமைகளாகும். தொல்காப்பியர் அரசர்க்கு உரியனவாக,

*"படையுங் கொடியுங் குடையும் முரசும்*
*நடைநவில் புரவியுங் களிறுந் தேரும்*

*தாரும் முடியும் நேர்வன பிறவும்*

*தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய"*[38]

என்பனவற்றைக் குறிப்பிடுகிறார்.

மேலும் தொல்காப்பியர்,

*"ஐவகை மரபின் அரசர் பக்கமும்"*[39]

எனும் நூற்பாவில் அரசர்க்குரிய கடமைகளாக ஐந்தினைக் குறிப்பிடுகிறார். அவை ஓதல், வேட்டல், ஈதல், படை வழங்குதல், குடியோம்புதல் என்பனவாகும். அந்தணர்க்கு உரியனவான ஈதல், வேட்டல், வேட்பித்தல், ஓதல் என்பன அரசர்க்கு உரியதாக வருதலும் உண்டு என்பதை,

*"அந்த ணாளர்க் குரியவும் அரசர்க்கு*

*ஒன்றிய வரூஉம் பொருளுமா ருளவே"*[40]

எனும் நூற்பாவின் மூலம் குறிப்பிடுகிறார்.

அரசர்க்குரிய கடமைகளாக மேலே குறிப்பிடப்பட்டவற்றுள் இறுதி மூன்றும் நாட்டுக்காவல், ஆட்சிப்பொறுப்பு எனும் வகையிலேயே கூறப்பெற்றுள்ளன. மேலும் ஓதல், வேட்டல் என்று குறிப்பிடப்பெற்றாலும் அவர்கள் செய்ததாகக் குறிப்பெதுவும் இல்லை. அவர்கள் அந்தணர்களைக் கொண்டு செய்வித்ததாகவே உள்ளன. வேண்டுமெனில் ஏவுதற் கருத்தாவாகக் கொள்ளலாம்.

### 1.6.3. வணிகர்

வணிகர் வாணிகத் தொழிலை மேற்கொள்ளுவர். இதனைத் தொல்காப்பியர்,

*"வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை"*[41]

என்பர். இதில் வணிகரை வைசியர் என்று குறிப்பிடுகிறார். மேலும் வணிகர்க்கு வாணிகம் மட்டும் அல்லாது உழவுத் தொழிலும் உரியன என்பதை,

*"மெய்தெரி வகையின் எண்வகை உணவின்*

*செய்தியும் வரையார் அப்பா லான"*[42]

எனும் நூற்பாவில் எடுத்துரைப்பார்.

வைசியர்க்கும் அரசர்களைப் போல மலரும் மாலையும் உண்டு. இதனைத் தொல்காப்பியர்,

***"கண்ணியுந் தாரும் எண்ணினர் ஆண்டே"[43]***

எனக் குறிப்பிடுகிறார். இவை அவர்களின் அடையாளங்களாகக் காணப்பெறுகின்றன.

***"இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்"[44]***

எனும் நூற்பாவின் உரையில் வணிகர்க்கு உரிய தொழில்களாக,

**"ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல்"[45]**

ஆகியவற்றைக் குறிப்பிடுவார் இளம்பூரணர். இவர்களும் ஓதல், வேட்டல் என்பனவற்றிற்கு ஏவுதற்கருத்தாவாக விளங்குகின்றனர்.

### 1.6.4. வேளாளர்

வேளாளர்க்கு உழவுத் தொழிலைத் தவிர பிற தொழில்கள் இல்லை. இதனை,

***"வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்லது***
***இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"[46]***

என்பர் தொல்காப்பியர்.

வேந்தர்களின் விருப்பத்தைப் பொறுத்து வேளாளர்கள் உழுதொழிலோடு படையும் கண்ணியும் பெற்று போர் வீரர்களாக ஊழியம் செய்தற்கும் உரியவர்களாயிருந்தனர் என்பதை,

***"வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்***
***வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே"[47]***

எனும் நூற்பா தெளிவுபடுத்தும்.

***"இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்"[48]***

எனும் நூற்பாவின் உரையில் வேளாண் மாந்தர்க்குரிய தொழில்களாக,

**"உழவு, உழவொழிந்த தொழில், விருந்தோம்பல், பகடு புறந்தருதல், வழிபாடு, வேதம் ஒழிந்த கல்வி"[49]**

என ஆறினைக் குறிப்பிடுவார் இளம்பூரணர்.

***"இடையிரு வகையோர் அல்லது நாடிற்***
***படைவகை பெறாஅர் என்மனார் புலவர்"[50]***

எனும் நூற்பாவில் அரசரும் வணிகரும் அல்லாதோர்க்குப் படைக்கல வகை கூறப்பெறுதல் இல்லை என்கிறார்.

வில், வேல், கழல், கண்ணி, தார், ஆரம், தேர், மா போன்றவை மன்னனாற் பெற்ற மரபினான் வைசியர்க்கும் வேளாளர்க்கும் உரியனவாகும். இதனை,

***"வில்லும் வேலுங் கழலுங் கண்ணியும்***
***தாரும் ஆரமுந் தேரு மாவும்***
***மன்பெறு மரபின் ஏனோர்க் குரிய"[51]***

என்பார் தொல்காப்பியர்.

அரசர்க்கு உரியனவாகக் குறிப்பிட்டவற்றுள் முடி, தார், கொடி ஆகியன மூன்றும் அரசர்களிடையே குடிமரபைத் தனித்த நிலையில் புலப்படுத்தக் கூடியனவாக உள்ளன. படை, புரவி, களிறு, தேர், முரசு ஆகியன காவல், அரசியல் ஆட்சி ஆகியவற்றிற்கு உதவுவனவாக உள்ளன. செங்கோல், குடை இரண்டும் ஆட்சி இயல்பை அறிவிக்கும் குறியீடுகளாக விளங்குகின்றன. வணிகர் கண்ணி, தார் போன்றனவற்றை அடையாளங்களாகப் பெற்றுள்ளனர்.

அந்தணரும் அரசரும் வணிகரும் தங்களுக்கு உரியதான அடையாளங்களைப் பெற்றிருத்தலை இதன் மூலம் அறிய முடிகிறது. இவை அவர்களை உயர்த்திப் பிடிக்கும் வகையில் அமைந்துள்ளன.

இத்தகு அடையாளங்கள் கீழ்த்தட்டில் இருக்கும் சூத்திரர்களுக்குப் படையும் கண்ணியும் விளங்குகின்றன. அவையும் வேந்தர் ஏவும் தொழிலிற்கு ஏற்ப அமையுமே தவிர, அவர்களுக்குத் தனித்த நிலையில் அடையாளங்களாக இல்லை என்பது

சிந்தித்தற்குரியது. மன்னர்க்கு உரியனவாகச் சொல்லப்பெற்றனவும் மன்னனால் சிறப்புபெறும் வகையில் வணிக, வேளாளர்க்கு உரியன. அவை அனைவருக்கும் உரியன அல்ல. தொல்காப்பியர் அகத்திணையியலில் ஒவ்வொரு பிரிவிற்கும் உரியோர் யார் என்பதைக் குறிப்பிடுகையில், மூன்று பிரிவினுள் ஓதுவதற்குப் பிரிவதும், தூது போவதற்குப் பிரிவதும் உயர்ந்தவர்க்குரியனவாக குறிப்பிடுகிறார்.

***"அவற்றுள்***
***ஓதலுந் தூதும் உயர்ந்தோர் மேன"***[52]

எனும் நூற்பாவில் உயர்ந்தோர் என்பதற்கு,

**"நால்வகை வருணத்தினும் உயர்ந்த அந்தணர் அரசரைக் குறிப்பிடுகிறார்."**[53]

என்பார் இளம்பூரணர்.

அரசனும் அரசனுடன் சேர்ந்திருப்பவர்களும் பகைவருடன் போரிடப் பிரிந்து செல்வதற்கு உரியவர்கள் என்பதை,

***"தானே சேறலுந் தன்னொடு சிவணி***
***ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே"***[54]

எனும் நூற்பா குறிப்பிடுகிறது.

**"பகைவயிற் பிரிதல் அரசன் கடமை என்று இச்சூத்திரம் கூறுவதால், இதற்கு முன்னுள்ள சூத்திரத்தில் உயர்ந்தோர் என்பதற்கு அந்தணர், அரசர், வணிகர் என்று பொருள் சொல்லுவது பொருத்தமானதே."**[55]

என்பார் சாமி. சிதம்பரனார்.

**"ஒவ்வொருவருக்கும் உரிய தொழில் இன்ன இன்ன என்பதும் காட்டப்பெறுகின்றன. அரசர் நாடாளவும் அந்தணர் 'நூலே கரகம் முக்கோல் மணையே' இவை பற்றாகத் தவம் செய்யவும் வணிகர் வாணிகம் செய்யவும் வேளாளர் உழவுத்**

**தொழில் செய்யவும் வேண்டும் எனக் குறிக்கின்றார். எனவே, தொல்காப்பியர் காலத்தில் நாட்டில் தொழிலால் வேறுபாடு காணும் நிலை உண்டாகிவிட்டது என அறிகின்றோம். எனவே யாதொரு வேறுபாடும் அறியாது தோன்றி வளர்ந்த மனிதன் அந்தக் காலத்துக்கு (தொல்காப்பியர் காலத்துக்கு) முன்பே தொழிலால் வேறுபடுத்தப்பட்டான் என்பது தெளிவு.”[56]**

என அ.மு. பரமசிவானந்தம் அவர்கள் கூறும் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது.

தொழில் வழிக்குடிகளும் தொல்குடி அடிப்படையில் குலமுறைக் குடிகளும் இருந்தன என்பதை,

***“பெயரும் வினையுமென் றாயிரு வகைய***
***திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே”[57]***

எனும் நூற்பா குறிப்பிடுகிறது. இந்நூற்பாவில்,

**“பெயர் என்பதற்கு குலப்பெயரையும், வினை என்பதற்கு தொழிற்பெயரையும்”[58]**

இளம்பூரணர் கொண்டுள்ளார்.

**“உரையாசிரியர்கள் குன்றவர், ஆயர், களமர், பரதவர், எயினர் போன்ற திணை (நில) மக்களை, அவ்வந் நிலத்திற்குரிய குலமக்களாகக் கருதுவதால் இவர்களையும் (நிலமக்கள்) குலவழி நம்பிக்கைக் கொண்ட குடியினராகக் கொள்ளத் தோன்றுகிறது. திணை மக்களிடையே விளங்கியிருந்த வேலன் வெறியாட்டு (தொல். பொருள்.112 ஆம் நூற்பாவுள் 41 – ஆம் அடிக்குரிய இளம்பூரணர் உரை) என்ற சடங்கும், நடுகல் வணக்கம் (புறம்.232, 260, 263, 264, 265, 306, அகம்.365) என்ற மரபும் அவர்களிடையே குல முதல்வர்களை எண்ணித் துதிக்கும் நம்பிக்கை இருந்ததை உணர்த்துகின்றன. எனவே தொல்காப்பியர் காலத்தில் பிறந்த தொல்குடி (குலமுறை) அடிப்படையிலும் கலந்திருந்த**

**சமுதாயப் பிரிவுகள் சாதிகளாக உயிர்த்திருந்தன எனக் கொள்ளலாம்."[59]**

என்று சின். கோதில் மொழியன் அவர்கள் கூறும் கருத்திலிருந்தும் தொல்காப்பியத்தில் குலமுறைப்பாகுபாடு, தொழில் வழிப் பாகுபாடு இருந்ததை அறிய முடிகிறது.

தொல்காப்பியர் காலத்தில் செய்யும் தொழிலுக்கேற்ப அவர்களிடையே உயர்வு தாழ்வு இருந்துள்ளது. இதனை,

***"அன்ன ராயினும் இழிந்தோர்க் கில்லை"[60]***

எனும் நூற்பாவில் எடுத்துரைப்பர்.

**"செய்த தொழிலின் உயர்வு தாழ்வுக்கேற்ப சாதி உயர்வு தாழ்வு ஏற்பட்டது."[61]**

எனக் கூறும் நெஸ்பீல்டு அவர்களின் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது.

***"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு***
***உருவு நிறுத்த காம வாயில்***
***நிறையே அருளே உணர்வொடு திருவென***
***முறையுறக் கிளர்ந்த ஒப்பினது வகையே"[62]***

இந்நூற்பாவில் பிறப்பு என்னும் சொல்லுக்கு,

**"பிறப்பாவது அந்தணர், அரசர், வணிகர், வேளாளர், ஆயர், வேட்டுவர், குறவர், நுளையர் என்றாற் போல வருங்குலம்."[63]**

என்பார் இளம்பூரணர்.

எனவே தொல்காப்பியர் காலத்தில் பிறப்பு அடிப்படை பார்த்து மண உறவு நிகழ்ந்தது என்பதை அறியலாம். மேலும் இந்நூற்பா குலமுறைப்பாகுபாடு இருந்ததாக மேற்கூறிய கருத்துக்கு அரணாக அமைகின்றது.

அகவொழுக்கத்தில் தலைவன் கூற்றுகளைக் கூறும் தொல்காப்பியர் அந்தணர் திறத்தும் கூற்று நிகழும் என்பார். இதனை,

***"அந்தணர் திறத்தும்"*** [64]

எனும் நூற்பா குறிப்பிடுகிறது.

இந்நூற்பாவில் அந்தணர் திறத்தும் என்பதற்கு இளம்பூரணர்,

**"பார்ப்பார் கண்ணும்"** [65]

எனவும்,

நச்சினார்க்கினியர்,

**"வேட்பித்த ஆசிரியனுங் கற்பித்த ஆசிரியனுமாகிய பார்ப்பார் கண்ணும்"** [66]

எனவும் விளக்குவர்.

இவ்விரு உரையாசிரியர்களும் அந்தணர் என்பதற்குப் பார்ப்பார் எனப் பொருள் கொண்டுள்ளனர். இந்நூற்பாவின் மூலம் அகவொழுக்கத்திலும் அந்தணர் ஈடுபட்டிருந்தமை அறியலாம்.

**"ஆரியர்களின் கலப்பிற்குப் பிற்பட்டதே தொல்காப்பியம் என அறிஞர்கள் பலரும் ஏற்றுக் கொண்டுள்ளனர். இதைத் தொல்காப்பியத்தில் கூறப்படும் வர்ணப் பாகுபாட்டு நிலையைக் கொண்டு உணரலாம்."** [67]

என அரங்க. மு. முருகையன் கூறுவதன் மூலமும் தொல்காப்பியர் காலத்தில் நான்கு வர்ணப்பாகுபாடு இருந்ததை அறியலாம்.

**"தொல்காப்பியர் காலத்திலிருந்த பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் மக்களிடையே பிரிவினையை ஏற்படுத்தின. இந்நிலையே பிற்காலங்களில் தொழில் விரிவுகள் தொழில் ரகசியங்களைக் கட்டிக் காக்க வேண்டி அகமணத்தை மேற்கொள்ளல் போன்றவை பரம்பரையாகக் கடைபிடிக்கப்**

**பட்டமையால் கால வளர்ச்சியில் இவை சாதிகளாக மாறின. அல்லது மாற்றப்பட்டன எனலாம்.''[68]**

எனக் கூறுவதன் மூலம் தொல்காப்பியம் பிற்கால சாதிகள் உருவாவதற்கு அடிப்படையாயிருந்தது என்பதை அறியலாம்.

**“தொல்காப்பியம், தமிழ்ச் சமுதாயம் புதுமையான முறையான ஐவகை நில இயற்கையின் வழியே, தொழிற்பண்பை அடிப்படையாகக் கொண்டு பிரிக்கப்பட்டிருந்தது என்பதனைப் ‘பொருளதிகாரம்’ வாயிலாகத் தெளிவுபடுத்துகிறது.''[69]**

எனக் கூறுவார் சி.ஈ. இராமச்சந்திரன்.

இவற்றையெல்லாம் கொண்டு பார்க்கும் போது தொல்காப்பியத்தில் நில இயற்கையின் அடிப்படையில் அமைந்த மக்கட் பிரிவினைகளும், தொழில் அடிப்படையில் அமைந்த குலப்பாகுபாடுகளும் இருந்தன என்பதை அறியலாம்.

தொல்காப்பிய மரபியலில் நான்கு வகை வகுப்புப் பிரிவைக் கூறும் சூத்திரங்கள் தொல்காப்பியரால் எழுதப்பட்டவை அல்ல. அவை ஆரியர், தமிழ் நாட்டுக்கு வந்த பின் எழுதி இணைக்கப்பட்டவை என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர்.[70]

இக்கருத்திற்கு மாறாக,

**“நால்வகை வகுப்புப் பிரிவைக் கூறும் சூத்திரங்கள் தொல்காப்பியரால் சொல்லப்பட்டவையல்ல; அவை ஆரியர் தமிழ் நாட்டுக்கு வந்த பின் எழுதி இணைக்கப்பட்டவை என்று சிலர் சொல்லுகின்றனர். இவர்கள் சொல்வது எவ்வகையிலும் பொருந்தாது. வேறு பல இயல்களிலும் வகுப்புப் பிரிவுகளைக் காட்டும் பல சூத்திரங்கள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் ஆரியர் நுழைப்பு என்று சொல்லி எடுத்தெறிந்து விட்டால், அதன்**

**பிறகு தொல்காப்பியப் பொருளதிகாரமே இருக்க முடியாது புதிய பொருளதிகாரம் எழுத வேண்டியது தான்."[71]**

என்பார் சாமி. சிதம்பரனார்.

## 1.7. மனுதர்மம் கூறும் குலப்பாகுபாடு

மக்கள் தங்களது சந்ததிகளைப் பெருக்கிக் கொள்ள மனிதர்களைப் படைக்கும் போதே,

**"பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என நான்கு வருணங்களாகப் பிரம்மா படைத்தார்."[72]**

எனவும்,

**"பிரம்மா தம் முகத்திலிருந்து பிரம்மர்களையும், தோளிலிருந்து சத்திரியர்களையும், தொடையிலிருந்து வைசியர்களையும், காலிலிருந்து சூத்திரர்களையும் பிறப்பித்தார்."[73]**

எனவும் மனுதர்மம் கூறுகின்றது.

மேற்காட்டிய சான்றிலிருந்து ஆரியர்களின் வருகைக்குப் பின்னரே வருணாசிரம முறை உருவானது என்றும் ஆரியர்கள் வருணாசிரம முறையைக் கடவுளோடு தொடர்புபடுத்தி கட்டாயமாக்கப்படுவதை அறியலாம்.

**"ஆரியர்களின் சூழ்ச்சி தொழிலின் அடிப்படையில் மக்களை வகைப்படுத்தியதில் இல்லை. இந்த நான்கு பிரிவின் பிறப்பைப் பற்றிய கதை கட்டியதிலும், பிரிவை மாற பிறப்புரிமையாக மாற்றியதிலும் தான் இருக்கின்றது. அந்தக் கட்டுக்கதையை உலகநாத பண்டிதர்,**

***'ஆறாநான்முகன் முகத்தி லந்தணர் மரபுண்டாகத்***
***தோளினி லரசர் வர்க்கந் தோன்றிடத் துடைக டன்னில்***
***மீளவும் வணிகர் தங்கண் மொய்க்குல முதிக்கத் தூய***
***தாளிணை தனில்வே ளாளர் சாதியுஞ் சனித்த தன்றே'***

**(சாதி பேத விளக்கம் – 11) என்று கவிதையாகக் கூறுகின்றார்."[74]**

என்பார் குரு. தேமொழி.

## 1.8. தொல்காப்பியம் – மனுதர்மம் ஒப்பீடு

### தொல்காப்பியம்

#### அந்தணர்

நூல், கரகம், முக்கோல், மணை ஆகியன அந்தணர்க்கு உரியன.

#### அரசர்

படை, கொடை, குடை, முரசு, புரவு, களிறு, தேர், தார், முடி ஆகியன அரசர்க்கு உரியன.

#### வணிகர் (வைசியர்)

வணிகன் வாணிக வாழ்க்கையை மேற்கொள்வான். நெல்லு, காணம், வரகு, இறுங்கு, தினை, சாமை, புல்லு, கோதும்பை முதலிய எண்வகை உணவுகளை உண்டாக்குகிற தொழிலும் வணிகர்க்கு உரியது. அரசர், வணிகர் இருவரும் படைக்கல வகையைப் பெறுவர்.

#### வேளாளர்

பயிர்த்தொழிலைத் தவிர பிறவகைத் தொழில் இல்லை.

ஆகியன தொல்காப்பியம் குறிப்பன.

### மனுதர்மம்

#### பிராமணர்

வேதஞானம், வேதம் ஓதல், ஓதுவித்தல், வேள்வி புரிதல், புரிவித்தல், செல்வம் ஈதல், ஏற்றல் ஆகியன பிராமணர்க்கு உரியன.

#### சத்திரியர்

உலகை ஆளுதல், மக்களைக் காத்தல், கொடை, வேள்வி செய்தல், திடமனத்தினராய் இருத்தல்.

**வைசியர்**

செல்வம் தேடுதல், வணிகம் செய்தல், ஆநிரை காத்தல், பயிர்த்தொழில், வட்டித்தொழில் ஆகியன செய்தல்.

**சூத்திரர்**

பிராமணர், சத்திரியர், வைசியர் ஆகிய மூவர்க்கும் மனம் கோணாமல் பணி புரிதல் ஆகியன மனுதர்மத்தில் காணப்பெறுவன. தொல்காப்பியர் கூறும் வேளாளர்க்கும் மனுதர்மம் கூறும் சூத்திரர்க்கும் வேறுபாடு காணமுடிகிறது. மற்ற மூவகையினரைப் பற்றி மனுதர்மமும் தொல்காப்பியமும் ஒரே வகையான கருத்துக்களையே முன் வைக்கின்றன. எனவே தொல்காப்பியர் காலத்திலேயே ஆரியக் கருத்துகள் திராவிடக் கருத்துகளோடு கலந்து வலிமை பெற்றுள்ளதைக் காண முடிகிறது.

## 1.9. தொகுப்புரை

குலம், இனம், குடி என்பன ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்கள் ஆகும். வேத காலத்தில் தோன்றிய அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நான்கு வருணப் பாகுபாடுகள் மரபு வழியாகத் தொடர்ந்து பிறப்பு அடிப்படையில் வளர்ந்து பின்பு சாதிகளாக மாறின.

தொல்காப்பியத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற குலப்பாகுபாடு காணப்பெறுகிறது. தொல்காப்பியர் குறிப்பிடும் நால்வகைப் பாட்டிற்கும், மனுதர்மம் குறிப்பிடும் நான்கு வருணத்திற்கும் வேறுபாடு காண முடிகிறது. ஆரியர் குறிப்பிடும் நான்கு வருணப் பாகுபாடு பிறப்பை அடிப்படையாகக் கொண்டது. தொன்மத்தின் வழி அது கட்டமைக்கப்படுகிறது.

இனங்கள் சில குலங்களாகப் பிரிகின்றன. அந்தக் குலங்கள் பல சாதிப் பிரிவுகளாகத் தோன்றுகின்றன. சமுதாயத் தொகுதி நான்கு அடுக்கமைவுகளைக் கொண்டதாக அமைகிறது. அவற்றுள் மூன்று ஒரு பகுதியாகவும், நான்காவது வேறொரு பகுதியாகவும் பகுத்துக் காணப்படுகின்றன.

மொழி, கல்வி, ஆன்மிகம் எனப் பல்துறைகளடிப்படையில் பிராமணர்கள் முதன்மை நிலையிலும், நாட்டின் காவல், ஆட்சி முறை போன்ற அறிவு வலிமையோடு உடல் வலிமை பெற்ற சத்திரியர்கள் அடுத்த நிலையிலும், நாட்டின் பொருளாதாரத்தை நிலை நிறுத்தக்கூடிய வேளாண்மை, வணிகம் ஆகிய தொழிலைச் செய்த வைசியர்கள் அடுத்த நிலையிலும் அமைந்தனர்.

பிராமணர், சத்திரியர், வைசியர் எனும் மூவகையினரின் தொழில்களுக்கு உதவும் வகையில் ஏவலராகவும் வினைவலராகவும் இருந்த சூத்திரர் நான்காம் நிலையில் அமைந்தனர்.

வேத காலத்தில் தொழிலின் அடிப்படையில் தோன்றிய அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற குலப்பாகுபாடுகள் பிறப்பு அடிப்படையில் இறுக்கம் பெற்று, பின்னர் சாதிக் கட்டுமானங்களாக மாறின.

சாதிகளாக இறுகிய குலமரபுகள், ஒரு மரபினரோடு மற்றொரு மரபினர் திருமண உறவு, உணவு படைத்தல், பரிமாறல், வழிபாடு போன்றவற்றில் உறவில்லாத நிலையில் தடை ஏற்படுத்தப்பெற்றது.

தொழில், மேட்டிமை, சமய நம்பிக்கை, குருதி உறவு, பண்பாட்டுச் சிக்கல்கள், நிறம், பொருளாதாரம், நிலவியல் போன்றன சாதீயக் கட்டுமானத்திற்குக் காரணங்களாக விளங்குகின்றன.

தொல்காப்பியர் அந்தணர்க்குக் கூறிய அடையாளங்களுள் முதலாவதான நூல் (முப்புரிநூல்) அந்தணரின் இரு பிறப்பைச் சுட்டுவதாகவும், பிற மூன்றும் அவர்கள் செய்யும் வேள்விக்குப் பயன்படக்கூடியனவாகவும் உள்ளன.

ஓதல், வேட்டல் போன்ற தொழில்கள் அரசர்க்கும் வணிகர்க்கும் உரியனவாகத் தொல்காப்பிய உரையில் குறிப்பிட்டாலும் அதை அவர்கள் செய்ததாகக் குறிப்பு எதுவுமில்லை.

## அடிக்குறிப்புகள்

1. ச. பவானந்தம் பிள்ளை, தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி, பக்.166–167.
2. தேவநேயன், தமிழர் வரலாறு, ப.274.
3. மேலது, ப.279.
4. மேலது, பக்.189–190.
5. மேலது, ப.270.
6. மேலது.
7. மேலது, ப.276.
8. மேலது, ப.36.
9. பா. இறையரசன், தமிழர் நாகரிக வரலாறு, ப.189.
10. பொன். தங்கமணி, பழங்கால இந்தியா அரசியலும் பண்பாடும் கி.பி.1206 வரை, ப.46.
11. சி. பரமேஸ்வரி, தேவேந்திர குல வேளாளர் வரலாறும் சமூக அரசியல் எழுச்சியும், ப.10.
12. தேவநேயர், மேலது, பக்.271–272.
13. குணா, வகுப்பும் சாதியும், ப.14.
14. கலைக்களஞ்சியம், பக்.561–562.
15. சின். கோதில் மொழியன், பழந்தமிழ் இலக்கியங்களில் சாதி எதிர்ப்புக் கருத்துகள், முனைவர்பட்ட ஆய்வேடு, ப.261.
16. கலைக்களஞ்சியம், பக்.561–562.
17. சி.ஈ. இராமச்சந்திரன், சங்ககால வரலாறு (மேற்பட்டப்படிப்பிற்குரியது), ப.170.
18. அ. மார்க்ஸ், சிற்றிலக்கியங்கள் சில குறிப்புகள், முன்னுரை, ப.9.
19. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.62.
20. கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், பக்.54–55.

21. சிலம்பு நா. செல்வராசு, சங்க இலக்கிய மறுவாசிப்பு சமூகவியல் மானுடவியல் ஆய்வுகள், ப.194.
22. ப. அரங்கநாதன், ஒன்றே குலம், ப.18.
23. சி. பரமேஸ்வரி, மேலது, ப.34.
24. மு. சின்னப்பன், சங்க இலக்கியங்களில் வாழ்வியல் கோட்பாடுகள், முனைவர் பட்ட ஆய்வேடு, ப.227.
25. அ. முத்துசாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப.4.
26. இரா. மதிவாணன், சாதிகளின் பொய்த்தோற்றம், ப.9.
27. அன்பு பொன்னோவியம், உணவில் ஒளிந்திருக்கும் சாதி (சமூக, சமய வரலாற்றுக் கட்டுரைகள்), ப.196.
28. பொதிகைத் தமிழரசன், சமூகவியல் நோக்கில் நீதி இலக்கியம், ப.125.
29. சு. சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, ப.160.
30. நா. கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.256.
31. தமிழ்ப் பேரகராதி, தொகுதி –1, ப.370.
32. கவிஞர் குடந்தையான், சாதிகள் இல்லா சமுதாயம், ப.5.
33. தொல். மரபு. நூ. எண்.71.
34. மேலது, நூ.எண்.83.
35. தொல். புறத். நூ. எண்.16.
36. மேலது, இளம்பூரணர் உரை, ப.122.
37. சாமி. சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், ப.69.
38. தொல். மரபு. நூ. எண்.72.
39. தொல். புறத். நூ. எண்.16.
40. தொல். மரபு. நூ. எண்.73.
41. மேலது, நூ.எண்.78.

42. மேலது, நூ.எண்.79.

43. மேலது, நூ.எண்.80.

44. தொல். புறத். நூ. எண்.16.

45. மேலது, இளம்பூரணர் உரை, ப.126.

46. தொல். மரபு. நூ. எண்.81.

47. மேலது, நூ.எண்.82.

48. தொல். புறத். நூ. எண்.16.

49. மேலது, இளம்பூரணர் உரை, ப.126.

50. தொல். மரபு. நூ. எண்.77.

51. மேலது, நூ.எண்.84.

52. தொல். அகத். நூ. எண்.28.

53. மேலது, இளம்பூரணர் உரை, ப.42.

54. தொல். அகத். நூ. எண்.29.

55. சாமி. சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், ப.70.

56. அ.மு. பரமசிவானந்தம், தமிழக வரலாறு, பக்.113–114.

57. தொல். அகத். நூ. எண்.22.

58. மேலது, இளம்பூரணர், ப.31.

59. சின். கோதில்மொழியன், தொல்காப்பியத்தில் சாதி நெறி, ப.117.

60. தொல். மரபு. நூ. எண்.85.

61. Caste in India, P.170.

62. தொல். மெய்ப். நூ. எண்.25.

63. மேலது, இளம்பூரணர் உரை, ப.11.

64. தொல். கற்பு. நூ. எண்.5:15.

65. மேலது, இளம்பூரணர் உரை, ப.103.

66. மேலது, நச்சினார்க்கினியர் உரை, பக்.576–577.

67. அரங்க. மு. முருகையன், சாதீயம், ப.31.

68. மேலது, ப.33.

69. சி.ஈ. இராமச்சந்திரன், மேலது, ப.165.

70. ச. சோமசுந்தர பாரதியார், 'தமிழர் நாகரிகம்', செந்தமிழ்ச்செல்வி, சிலம்பு.12, ப.482.

71. சாமி. சிதம்பரனார், மேலது, ப.68.

72. தமிழ்நாடன், மனுதர்மம், ப.13.

73. மேலது, ப.4.

74. குரு. தேமொழி, நாடார் சமூக வரலாறு, ப.6.

# இயல் – 2

## சங்க இலக்கியத்தில் அந்தணர், அரசர்

2.0. முன்னுரை

2.1. அந்தணன்: சொல்லாட்சி – பொருள்

2.1.1. அந்தணன் இறைவன்

2.2. பார்ப்பான்: சொல்லாட்சி – பொருள்

2.3. அந்தணன் – பார்ப்பான் : ஒரே குலமரபினர்

2.4. அந்தணர்களும் வேதங்களும்

2.5. இருபிறப்பாளர்

2.6. அந்தணர் தோற்றப்புனைவுகள்

2.7. அந்தணர் இயல்பு

2.8. அந்தணர் தொழில்

2.8.1. ஓதல்

2.8.2. வேட்டல்

2.8.3. ஏற்றல்

2.9. சடங்குகள் செய்தல்

2.10. இருப்பிடம்

2.11. அந்தணர் உணவு

2.12. அரசியல் தொடர்பு

2.13. சமூகத் தகுதிநிலை

2.13.1. உயர்நிலை

2.13.2. தாழ்நிலை

2.14. இருவேறு அந்தணர்

2.15. சங்க இலக்கியத்தில் அரசர்

2.16. அரசமுறைத் தோற்றம்

# இயல் – 2

# சங்க இலக்கியத்தில் அந்தணர், அரசர்

## 2.0. முன்னுரை

மக்கள் தாங்கள் செய்யும் தொழிலின் தன்மைக்கு ஏற்ப அவர்களின் வாழ்க்கையும் இயல்பும் அமையும். அவ்வாறே நால்வகை வருணத்தாருள் அந்தணரும் அரசரும் அவர்கள் செய்யும் தொழிலுக்கேற்ப சமுதாயத்தில் உயர்ந்த மதிப்பைப் பெற்றிருந்தனர். அவ்வகையில் அந்தணரைப் பற்றி அந்தணன் என்னும் சொல்லாட்சி பொருள், பார்ப்பான் என்னும் சொல்லாட்சி பொருள், அந்தணன் பார்ப்பான் இருவரும் ஒரே குலமரபினர், அந்தணர்களும் வேதங்களும், இரு பிறப்பாளர், அந்தணர் தோற்றப் புனைவுகள், அந்தணர் தொழில்கள், சடங்குகள் செய்தல், அரசியல் தொடர்பு, சமூகத் தகுதிநிலை எனும் நிலைகளிலும் அரசரைப் பற்றி அரசமுறைத்தோற்றம், தாயமுறை, அரண்மனை, அரசர்க்குரிய அடையாளங்கள், அரசர் சமுதாயம் – உறவு நிலைகள், அரசவை, நாண்மகிழிருக்கை, அரசன் கடமைகள் போன்ற தலைப்புகளில் இவ்வியல் ஆய்கிறது.

## 2.1. அந்தணன்: சொல்லாட்சி – பொருள்

எல்லா உயிர்களிடத்திலும் அருளை மேற்கொண்டு ஒழுகும் அறவோரே அந்தணர் எனப்படுவர். அக்கருத்தை,

> ***“அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்***
> ***செந்தண்மை பூண்டொழுக லான்”***[1]

என்னும் திருக்குறள் புலப்படுத்துகிறது.

> **“சிந்தனைச் சிற்பிகளாய் எண்ணத் தெரிந்து அறிவைப் பெருக்கிக் கருத்து வகையில் உயர்ந்து, அருளற வாழ்க்கை மேற்கொண்டு தன்னலங்கருதாத தியாகிகளாகத் திகழ்ந் தவர்களே அந்தணர் எனப்பட்டனர்.”**[2]

என்பார் சாமி. சிதம்பரனார்.

அந்தணன் என்ற சொல்,

**"1. கடவுள் (சிவன்)**

**2. வியாழம் என்னும் கோள்**

**3. பார்ப்பனன்"[3]**

எனும் மூன்று பொருள்களில் காணப்பெறுகிறது.

### 2.1.1. அந்தணன் – இறைவன்

அந்தணன் என்னும் சொல் சங்க இலக்கியங்களில் இறைவனைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

***"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்" (கலித்.38:1)***

***"யாழ் கெழு மணிமிடற்று அந்தணன்" (அகம். க.வா.)***

என வரும் பாடலடிகளை அதற்குச் சான்றாக்கலாம்.

***"அறஆழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்***
***பிற ஆழி நீந்தல் அரிது"[4]***

எனும் திருக்குறள் சொல்லாட்சியும் அத்தகையதே.

**"அந்தணன் என்ற தமிழ்ச்சொல் முதலாவது கடவுளையும் பின் கடவுட்டன்மை அடைந்த பெரியோரையும் பின் ஆதிசைவ மறையவரையும் பின் ஆரிய மறையவரையும் குறிக்கத் தமிழ் நாட்டில் வழங்கப்பட்டு வந்தது."[5]**

என்னும் எம்.வி. நெல்லையப்ப பிள்ளை அவர்களின் கூற்றும் அந்தணன் என்பது முதலில் இறைவனைக் குறித்தமையை வலுச்செய்கின்றது.

### 2.2. பார்ப்பான்: சொல்லாட்சி – பொருள்

வேதாந்தத்தைப் பொருளெனப் பார்ப்போர் பார்ப்பார் எனப்பட்டனர். பார்ப்பார் என்ற சொல்லுக்கு,

**"வேதத்தையும் வேதாந்தத்தையும் பார்ப்பவர்கள் என்பது பொருள். பார்ப்பான் என்ற சொல் பிராமணன் என்ற சொல்லின் திரிபாகும்."[6]**

என்பார் ந. சுப்பிரமணியன்.

## 2.3. அந்தணன் – பார்ப்பான்: ஒரே குலமரபினர்

அந்தணர் பார்ப்பார் இருவரும் ஒரே குலமரபினர் ஆவர்.

**"வேதாந்தத்தையே பொருளெனப் பார்த்தலின் பார்ப்பானென்னும் பெயரும் அந்தணர்க்குரியதாயிற்று. அந்தணர் தமிழ் மக்களல்லாத பிறரெனச் சிலர் கருதுவது பிழையான கோட்பாடாகும்."[7]**

எனும் ந.சி. கந்தையா பிள்ளை அவர்களின் கூற்றிலிருந்து அந்தணர் பார்ப்பார் இருவரும் ஒரே குலமரபினர் என்பதை அறிய முடிகிறது.

தொல்காப்பியத்தில் அந்தணர்க்குரிய அடையாளங்களாகக் குறிப்பிடப்பெற்ற நூல், கரகம், முக்கோல் ஆகியவை சங்க இலக்கியத்தில் பார்ப்பாருக்கும் பொருந்தி வருகின்றன. இதைப் பின்வரும் அந்தணர் தோற்றப் புனைவுகள் என்னும் தலைப்பில் காணலாம்.

தொல்காப்பியத்தில் பார்ப்பாருக்குக் குறிப்பிடப்பெற்ற ஓதல் முதலிய தொழில்கள் சங்க இலக்கியத்தில் அந்தணருக்கும் பொருந்தி வருகின்றன. இதை அந்தணர் தொழில் என்னும் தலைப்பில் காணலாம்.

அகவொழுக்கத்தில் பார்ப்பார் மிகுதியும் இடம் பெற்றனர். அந்தணரும் அகவொழுக்கத்தில் ஈடுபட்டிருந்தனர் என்பதை,

***"அந்தணர் திறத்தும்"*[8]**

எனும் நூற்பாவில் தலைவன் கூற்று அந்தணரிடத்து நிகழ்வதாகத் தொல்காப்பியம் கூறுகிறது. அந்தணர் திறத்தும் என்பதற்கு இளம்பூரணர்,

**"பார்ப்பார் கண்ணும்"[9]**

எனவும்,

நச்சினார்க்கினியர்,

**"வேட்பித்த ஆசிரியனுங் கற்பித்த ஆசிரியனுமாகிய பார்ப்பார் கண்ணும்"[10]**

எனவும் விளக்குவர்.

இவ்விருவருடைய கூற்றில் இருந்தும் அந்தணர் அகவாழ்வில் பங்கு பெறுவதை ஏற்க மறுப்பது விளங்குகின்றது. ஆனால், தொல்காப்பியத்தில் கூறியபடி அந்தணரும் அகவொழுக்கத்தில் இடம் பெற்றிருந்தனர் என்பதை,

***"அறிவுடை அந்தணன் அவளைக்காட் டென்றானோ"***

**(கலித்.72:18)**

என்னும் கலித்தொகை பாடல் மூலம் அறிய முடிகிறது.

பார்ப்பாருக்கு உரிய தொழில்கள் அந்தணர்க்குப் பொருந்தி வருவதாலும், அந்தணர்க்குரிய அடையாளங்கள் பார்ப்பாருக்குப் பொருந்தி வருவதாலும், பார்ப்பார் அந்தணர் இருவரும் அகவொழுக்கத்தில் பங்கு பெற்றுள்ளமையாலும் இருவரும் ஒரு குலமரபினர் என்பதை அறியலாம்.

நாளடைவில் பார்ப்பனர் அறுவகைத் தொழிலினின்றும் வழுவி சங்கறுத்தல், தூது செல்லல் முதலிய தொழில்களை மேற்கொண்டதால் பார்ப்பார் வேறு, அந்தணர் வேறு என்ற கருத்து நிலவியிருக்கலாம்.

## 2.4. அந்தணர்களும் வேதங்களும்

அந்தணரே வேதத்தைக் கற்பித்த காரணம் பற்றி வேதத்தை அந்தணர் மறை என்பதை,

***"அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே"[11]***

எனும் தொல்காப்பிய நூற்பா உணர்த்தும்.

***"அந்தணர் முதுமொழி"*** **(கலித்.126:4)**

***“நாவல் அந்தணர் அருமறை”*** **(பரி.2:57)**

***“அந்தணர் அருமறை”*** **(பரி.3:14)**

என்னும் சங்க இலக்கியப் பாடலடிகளும் வேதத்தை அந்தணர்களோடு ஒப்பிட்டுக் கூறுவதை அறிய முடிகிறது.

அறத்தைச் சொல்லும் அரிய மறைகளைப் பலகாலும் ஓதிப் பயின்ற நாவினையும், அது கற்பித்த முறையினைப் பின்பற்றி மேற்கொள்ளத்தக்க நோன்பு வாழ்க்கையையும் உடையவர் அந்தணர். இதனை,

***“அறம்புரி அருமறை நவின்ற நாவின்***
***திறம்புரி கொள்கை அந்தணிர்!”*** **(ஐங்.387:1–2)**

என ஐங்குறுநூறு பாடலடிகள் விளக்கும்.

அந்தணர் வேதத்தினை மறவாமை இன்பத்தைத் தரும் என்பதை,

***“அந்தண ரோத்துடைமை யாற்ற மிகவினிதே”***[12]

எனப் பூதன் சேந்தனாரும் குறிப்பிடுவதைக் காணலாம்.

அந்தணர்கள் நான்கு மறைகளைக் கற்றவர் என்பதால் அவர்களை நான்மறை முதல்வர், நான்மறையாளர் என்று வேதத்தோடு சேர்த்து அழைப்பதைக் காணலாம்.

***“நான்மறை முதல்வர் சுற்ற மாக”*** **(புறம்.26:13)**

***“அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்”*** **(புறம்.93:7)**

***“மறை காப்பாளர்”*** **(பெரும்.39)**

***“ஊதை யூர்தர உறைசிறை வேதியர்”*** **(பரி.11:84)**

***“வாய்மொழிப் புலவீர் கேண்மின் சிறந்தது”*** **(பரி.9:13)**

என்னும் பகுதிகளால் அக்கருத்து புலப்படுகிறது.

## 2.5. இரு பிறப்பாளர்

அந்தணர்கள் இரு பிறப்பாளர்கள் எனப்பெறுகின்றனர். உபநயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இரண்டு பிறப்பினை உடையவர். அக்கருத்தை,

*"இருபிறப் பிருபெய ரீர நெஞ்சத்*

*தொருபெய ரந்தணர் அறனமர்ந் தோயே"* **(பரி.14:27–28)**

*"இருபிறப் பாளர் பொழு தறிந்து நுவல"* **(திருமுருகு.182)**

*"ஒன்றுபுரிந் தடங்கிய விருப் பிறப்பாளர்"* **(புறம்.367:12)**

எனும் பாடலடிகளில் காணமுடிகிறது.

உபநயனத்துக்குப் பின்பு அந்தணர் தம் கடமைகளைத் தவறாது செய்து ஒழுகுவர். அந்தணர் அந்திக்கடன் செலுத்துவதற்கு அந்திப்பொழுதை எதிர்பார்த்திருப்பர் என்பதை,

*"அந்தி அந்தணர் அயர"* **(குறிஞ்.225)**

*"அந்தி யந்தண ரெதிர்கொள அயர்ந்து"* **(கலித்.119:12)**

எனும் பாடலடிகளின் மூலம் அறியலாம்.

அந்தணர் அந்திக்காலத்தில் செய்தற்கரிய கடனாகிய ஆவுதி நிகழ்த்தும் முத்தீயின் விளக்கு அருகில் மான் பிணைகள் துயிலும் என்பதை, .

*"சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை*

*அந்தி அந்தணர் அருங்கட னிறுக்கும்*

*முத்தீ விளக்கிற் றுஞ்சும்"* **(புறம்.2:21–23)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

மேலும், அந்தணர்கள் மார்பில் பூணூல் அணிந்திருத்தலை,

*"புரிநூல் அந்தணர்"* **(பரி.11:79)**

என்னும் பரிபாடலடி உணர்த்தும்.

பார்ப்பனர் ஒரு கையில் தண்டையும்(முக்கோல்) மற்றொரு கையில் கமண்டலத்தையும் வைத்திருந்தனர். இதனை,

*"தண்டொடு பிடித்த தாழ் கமண்டலத்துப்*

*படிவ உண்டிப் பார்ப்பன மகனே!"* (குறுந்.156:1–4)

எனக் குறுந்தொகைப் பாடல் குறிப்பிடும். பார்ப்பார் முக்கோலை உடையவர் என்பதை முல்லைப்பாட்டும் விளக்கும்.[13]

*"அன்னாய், வாழி! வேண்டு, அன்னை! நம் ஊர்ப்*

*பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்*

*குடுமித் தலைய மன்ற"* (ஐங்.202:1–3)

என்னும் பாடலடிகளின் மூலம் பார்ப்பனர் முன்குடுமி வைத்திருப்பதை அறிய முடிகிறது. பார்ப்பார் வயலைக் கொடி போல வாடிய இடையும், வருத்தத்தால் ஊர்ந்து செல்வது போன்ற நடையும் உடையவர்கள். இதனை,

*"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்*

*உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்"* (புறம்.305:1–2)

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

## 2.6. அந்தணர் தோற்றப்புனைவுகள்

அந்தணர்கள் முக்கோலையும், கமண்டலத்தையும், குடையையும் உடையவர்கள் என்பதை,

*"முக்கோல் கொள் அந்தணர்"* (கலித்.126:4)

*"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்*

*உறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும்*

*நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்*

*குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணிர்"*

(கலித்.9:1–4)

என்னும் பாடல் அடிகளின் மூலம் அறியலாம். அந்தணர்க்குரிய அடையாளங்களாக முக்கோல், கமண்டலம், குடை போன்றவை முன்னியலில் தொல்காப்பியம் குறிப்பிட்டனவாகவே உள்ளன.

தொல்காப்பியர் அரசர்க்கு உரியனவாகக் குறிப்பிடும் குடை வெண்கொற்றக்குடை ஆகும். அந்தணர்க்கு உரியனவாகக் குறிப்பிடும் குடை நிழல் தாங்கும் குடை ஆகும்.

## 2.7. அந்தணர் இயல்பு

அந்தணர் நாவன்மை மிக்கவர்கள். வெற்றி மிகுந்த பெரும் புகழ் உடையவர்கள். இதனை,

***"நாவல் அந்தணர்"*** **(பரி. க.வா.13)**

***"விறல்மிகு விழுச்சீர் அந்தணர்"*** **(பரி.1:37)**

என்னும் அடிகள் தெரிவிக்கும்.

அந்தணர் வேதங்களில் கூறப்படும் சடங்குகளைத் தவறாது ஒழுகுவர். காலையில் குளிர்ந்த நீரில் நீராடுவார்கள். நாற்பத்தெட்டு ஆண்டுகள் பிரமசரிய வாழ்க்கை நடத்தும் இயல்பினர். இதனை,

***"அறுநான்கு இரட்டி இளமை நல்யாண்டு***
***ஆறினில் கழிப்பிய, அறன் நவில் கொள்கை"***

**(திருமுருகு.179–180)**

***"நாறுபு நிகழும் யாறுகண் டழிந்து***
***வேறுபடு புனலென னவிரைமண்ணுக் கலிழைப்***
***புலம்புரி அந்தணர் கலங்கினர் மருண்டு"*** **(பரி.6:43–45)**

என்னும் அடிகள் விளக்கும்.

அந்தணர் வேதங்களை அவற்றின் பொருள் விளங்குமாறு ஓதி, அவை கூறிய ஒழுக்கங்களை மேற்கொண்டு, அறத்தினின்றும் ஒரு காலும் தப்பாது எல்லா

உயிர்களிடத்தும் அருள் நிரம்பிய நெஞ்சினை உடையவராய் திகழ்வர் என்பதை மதுரைக்காஞ்சி, பரிபாடல் மூலம் அறியலாம்.[14]

## 2.8. அந்தணர் தொழில்

அந்தணர் மறை ஓதுதல், வேள்வி வேட்டல், ஓதுவித்தல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் எனும் ஆறு தொழில்களை உடையவர் எனத் தொல்காப்பிய உரை குறிப்பிட்டவாறே.

***"அறுதொழில் அந்தணர்"*** **(புறம்.397:20)**

***"ஓதல் வேட்ட லவைப்பிறர்ச் செய்தல்***
***ஈத லேற்றலென் றாறுபுரிந் தொழுகும்***
***அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி"*** **(பதிற்.24:6–8)**

எனச் சங்கப் பாடலடிகளும் குறிப்பிடுகின்றன.

### 2.8.1. ஓதல்

அந்தணரின் தொழில்களுள் முதன்மையானது வேதம் ஓதுதல் ஆகும். அதனால் அவர்களை,

***"மறைநவி லந்தணர்"*** **(புறம். க.வா:6)**
***"கேள்வி யந்தணர்"*** **(பெரும்.315)**
***"அருமறை நாவின் அந்தணர்"*** **(சிறு.204)**
***"ஓதுடை யந்தணன்"*** **(கலித்.69:5)**
***"பார்ப்பார் ஓதுக"*** **(ஐங்.4:2)**

எனப் பலவாறாகக் குறிப்பிடுகின்றனர்.

அந்தணர் காலைப் பொழுதில் வேதம் ஓதுவர். அவர் எழுப்புகின்ற ஓசை தாதுண் தும்பி போதைச் சுற்றிச் செய்யும் ரீங்காரத்தை ஒத்திருக்கும் என்பதை,

*"போதுபிணி விட்ட கமழ்நறும் பொய்கைத்*
*தாதுண் தும்பி போதுமுரன் றாங்கு*
*ஓதல் அந்தணர் வேதம் பாட"* **(மது.654–656)**

என மதுரைக்காஞ்சி தெளிவுறுத்தும்.

## 2.8.2. வேட்டல்

அந்தணர் தொழில்களுள் சிறப்பானவை வேள்வி செய்தல் ஆகும். அந்தணர் மந்திரத்தினால் மெய்ந்நூல் உரைத்த முறைமையில் தப்பாது வேள்வி நிகழ்த்துவர். இதனை,

*"மந்திர விதியின் மரபுளி வழா*
*அந்தணர் வேள்வி"* **(திருமுருகு.95–96)**
*"கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்"* **(புறம்.361:4)**
*"உரைசால் வேள்வி முடித்த கேள்வி.*
*அந்தணர்....."* **(பதிற்.64:3–5)**

என்னும் பாடலடிகள் குறிப்பிடும்.

அந்தணர் செய்யும் வேள்விகளை,

**"கன்ம வேள்வி, தவ வேள்வி, செப வேள்வி, தியான வேள்வி, ஞான வேள்வி என ஐவகைப்படும். இவை ஒன்றற்–கொன்று முறையே உயர்ந்த வேள்விகளாகும்."[15]**

என்பார் பொ.வே. சோமசுந்தரனார்.

அந்தணர் வேள்வித் தீயை முறையாக மூட்டிச் சுடரை உண்டாக்கி வேள்வி செய்தனர்.[16]

## 2.8.3. ஏற்றல்

வேள்வி நிகழ்த்தும் அந்தணருக்கு அரசர் அருங்கலங்களை நீர் வார்த்துக் கொடுப்பர். கடுங்கோ வாழியாதனின் முற்றம் அந்தணர்க்கு வழங்கும் போது வார்த்த நீரால் சேறாயிற்றாம். இதனை,

*“அறம் கரைந்து வயங்கிய நாவிற் பிறங்கிய*
*உரைசால் வேள்வி முடித்த கேள்வி*
*அந்தண ரருங்கல மேற்ப நீர்பட்*
*டிருஞ்சே றாடிய மணன்மலி முற்றத்து”* **(பதிற்.64:3–6)**

எனப் பதிற்றுப்பத்து தெளிவுறுத்தும்.

அந்தணர்களுக்குத் தானம் வழங்கப்பெறும் பொருள்களை நீர்வார்த்துக் கொடுப்பார். இதனை,

*“நின்வர வஞ்சலன் மாதோ நன்பல*
*கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்க்*
*கருங்கல நீரொடு சிதறிப் பெருந்தகை”* **(புறம்.361:3–5)**

*“..... .... ...... உயர்ந்தோர்க்கு*
*நீரொடு சொரிந்த மிச்சில்”* **(குறுந்.233:4–5)**

*“கைப்பெய்த நீர் கடற்பரப்ப*
*ஆமிருந்த வடைநல்கிச்*
*சோறு கொடுத்து”* **(புறம்.362:12–14)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

பொருள் வேண்டி நின்ற பார்ப்பனருக்கு அவரது நனைந்த கை நிறையப் பொற்பூவும் பொற்காசும் கொடுத்தலை,

*“ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்*
*பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து”* **(புறம்.367:4–5)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

## 2.9. சடங்குகள் செய்தல்

அந்தணர்கள் பசிய தருப்பைப் புல்லைப் பரப்பி அதில் இறந்தவரைக் கிடத்தி இறுதிச் சடங்கு செய்வர். இதனை,

*"அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்*

*திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி*

*மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த*

*நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென*

*வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ"* (புறம்.93:7–11)

எனப் புறப்பாடல் தெரிவிக்கும்.

## 2.10. இருப்பிடம்

அந்தணர் வாழ்கின்ற தெரு குற்றமற்றது. அங்கு நாயின் ஒலி கேளாது. செந்நெற் சோற்று உருண்டையும், மிக வெள்ளிய நெய்யும் கிடைக்கும். இதனை,

*"ஆசுஇல் தெருவின் நாய்இல் வியன்கடைச்*

*செந்நெல் அமலை வெண்மை வெள்இழுது*

*ஓர்இல் பிச்சை ஆர மாந்தி"* (குறுந்.277:1–3)

எனக் குறுந்தொகைப் பாடலடிகள் உணர்த்தும்.

மதுரையில் இருந்த அந்தணர் இருப்பிடம் மலையை உள்வெளியாக வாங்கினாற் போன்ற அமைப்புடையதாகும். இதனை,

*"குன்றுகுயின் றன்ன அந்தணர் பள்ளி"* (மது.474)

எனும் பாடலடியின் மூலம் அறியலாம்.

அந்தணர் இல்லம் சாணத்தால் மெழுகப்பட்டிருக்கும். வழிபடு தெய்வங்களும் அங்கு உண்டு. கன்றுகளால் கட்டப்பட்ட சிறிய கால்களை உடைய பந்தரைக் கொண்டது. கோழிகளும் நாயும் இவர்களுடைய இல்லத்தில் சேர்வதில்லை. அவர்கள் இல்லத்துக் கிளிகள் வேதத்தை ஒலித்துக் கொண்டிருக்கும். இதனை,

*"செழுங்கன் றியாத்த சிறுதாட் பந்தர்ப்*

*பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்*

*மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது*

***வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்***

***மறைகாப் பாளர் உறைபதி"*** **(பெரும். 297–301)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

அந்தணர்களின் இருப்பிடம் அமைதியாகவும் தூய்மையானதாகவும் இருத்தலோடு, அவர்களின் இல்லத்தில் மறை ஓதல் ஒலியும் கேட்க முடிகிறது.

## 2.11. அந்தணர் உணவு

அந்தணர் மாதுளையின் பசுங்காயோடு மிளகுப் பொடியும், கறிவேப்பிலையும் கலந்து, சிவந்த வாசனையோடு கூடிய பசுவின் மோரை உணவாகக் கொள்வர். இக்கருத்தை,

***"பெருநல் வானத்து வடவயின் விளங்கும்***
***சிறுமீன் புரையும் கற்பின், நறு நுதல்,***
***வளைக்கை மகடூஉ வயின் அறிந்து அட்ட***
***சுடர்க்கடை, பறவைப் பெயர்ப் படுவத்தம்***
***சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்து***
***உருப்புறு பசுங் காய்ப் போழொடு கறி கலந்து***
***கஞ்சக நறு முறி அளைஇ, பைந்துணர்***
***நெடுமரக் கொக்கின் நறுவடி விதிர்த்த***
***தகைமாண் காடியின் வகைபடப் பெறுகுவிர்"*** **(பெரும்.302–310)**

எனப் பெரும்பாணாற்றுப்படை தெளிவாக்கும்.

## 2.12. அரசியல் தொடர்பு

பார்ப்பனர் தலைவனுக்குத் தோழனாய் தூது சென்றதோடு, போர்க்காலத்தில் இருபெரு வேந்தர்க்கிடையே தூது சென்று போரையும் நிறுத்தியுள்ளனர். பார்ப்பான் தலைவனுக்குத் தோழனாய் தூது சென்றுள்ளான். அதை,

***தூதுஒய் பார்ப்பான் மடிவெள் ஓலை"*** **(அகம். 337:7)**

என்னும் பாடலடி குறிப்பிடுகின்றது.

இருபெருவேந்தர்க்கிடையே மூளவிருந்த போர்க்காலத்தில் பார்ப்பான் ஒருவன் தூதனாகச் சென்று சந்து செய்வித்தான். இதை,

*"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்*
*உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்*
*எல்லி வந்து நில்லாது புக்குச்*
*சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே*
*ஏணியுஞ் சீப்பு மாற்றி*
*மாண்வினை யானையு மணிகளைந் தனவே"* **(புறம்.305:1–6)**

எனும் புறப்பாடல் மூலம் அறியலாம்.

## 2.13. சமூகத் தகுதிநிலை

அந்தணர்கள் சிலர் அரசர்கள் பணிந்து ஒழுகும் அளவிற்கு உயர்நிலையிலும், ஒழுக்கத்தில் இருந்து வழுவிய அந்தணர்கள் சிலர் தாழ்நிலையிலும் இருந்தனர்.

### 2.13.1. உயர்நிலை

அந்தணர்கள் சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்தனர். அரசர்கள் அந்தணரை வழி மொழிந்தொழுகினர். இதனை,

*"அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி"* **(பதிற்.24:8)**

எனப் பதிற்றுப்பத்து பாடலடி குறிப்பிடுகின்றது. அரசர்கள் பார்ப்பார்க்கு பணிந்து ஒழுகுவர். பார்ப்பார் நோவனவற்றை அரசர் செய்யார். இதனை,

*"பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே"* **(பதிற்.63:1)**

*"தேர்வண் கிளவி தம்பி வார்கோற்*
*கொடுமர மறவர் பெரும் கடுமான்*
*கைவண் டோன்ற லைய முடையேன்*
*ஆர்புனை தெரியனின் முன்னோரெல்லாம்*
*பார்ப்பார் நோவன செய்யார்"* **(புறம்.43:10–15)**

என்னும் சங்கப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

அறநெறிகளை அந்தணர் உணர்த்துவோராதலின் அரசர்கள் அவர்களின் அறிவுரைகளைக் கேட்டும் அவர்களைப் பணிந்தும் நடந்துள்ளனர்.

### 2.13.2. தாழ்நிலை

பார்ப்பார் சிலர் ஒழுக்கத்தில் இருந்து வழுவி சமூகத்தில் தாழ்நிலை அடைந்துள்ளனர். அத்தகைய தாழ்நிலையில் உள்ள பார்ப்பாரின் தோற்றத்தைப் பற்றி,

*“தீரத் தறைந்த தலையுந்தன் கம்பலுங்*

*காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநஞ்*

*சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானை”* **(கலித்.65:6–8)**

எனக் கலித்தொகை குறிப்பிடுகின்றது.

வேதம் ஓதாதான் கருத்துகள் இன்னாதன என்பதை,

*“. . . . . இன்னா*

*ஒத்திலாப் பார்ப்பா னுரை”*[17]

என்பார் கபிலர். பார்ப்பார் சிலர் சங்கறுத்து வளையல் செய்வதைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். அவர்களை ‘வேளாப்பார்ப்பான்’ என்றழைத்தனர். இதனை,

*“வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த*

*வளை களைந்து ஒழிந்த”* **(அகம்.24:1–2)**

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

> **“வேள்வி செய்யாமையான் தாழ்நிலை யடைந்த பார்ப்பனர்க்குச் சங்கறுக்கை முதலிய தொழில்கள் உளவென்பது பெறப்பட்டது.”[18]**

என்பார் ந.மு. வேங்கடசாமி நாட்டார்.

ஒழுக்கத்தில் வழுவிய அந்தணனின் உணவு முறையும் மாறுபட்டுள்ளன.

*“மட்டுவாய் திறப்பவு மைவிடை வீழ்ப்பவும்*

*அட்டான் றானாக் கொழுந்துவை யூன்சோறும்*

*பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி*

*நட்டனை மன்னோ முன்னே யினியே"* (புறம்.113:1–4)

என்னும் பாடலடிகளின் மூலம் அந்தணப் புலவராகிய கபிலர் கள்ளும் ஊனும் பாரி வள்ளல் தரத் தாம் உண்டு இனிது இருந்தமையை அறிய முடிகிறது.

## 2.14. இருவேறு அந்தணர்

முன்பனியையுடைய மார்கழித் திங்களில் விரிநூல் அந்தணர் திருவாதிரை நாளுக்குரிய சிவபெருமானுக்கு விழாச் செய்யத் தொடங்கினர். வேறு சில அந்தணர் பொற்கலம் ஏந்தி நின்றனர். இதனை,

*"ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து*

*மாயிருந்திங்கள் மறுநிறை ஆதிரை*

*விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்*

*புரிநூல் அந்தணர் பொலங்கல மேற்ப"* (பரி.11:76–79)

எனும் பரிபாடலடிகள் குறிப்பிடுகின்றன.

இப்பாடலில் விரிநூல் அந்தணர், புரிநூல் அந்தணர் என்றது தலைமை நிலையில் உள்ள அந்தணரையும், அவருக்கு உதவி செய்யும் அந்தணரையும் குறித்தது எனலாம். இருவேறு அந்தணர் தனித்தனி இல்லை என்பதை அறியலாம்.

## 2.15. சங்க இலக்கியத்தில் அரசர்

சங்ககாலம் முடிமன்னர்களின் ஆட்சிக்காலமாக விளங்கியது. அது போழ்து சேர, சோழ, பாண்டியர்களாகிய மூவேந்தர்களும் பாரி, ஓரி போன்ற குறுநில மன்னர்களும் பண்ணன் போன்ற சீறூர் மன்னர்களும் ஆட்சி புரிந்துள்ளனர். மலர்தலை உலகம் மன்னர்களை உயிராகவும் மக்களை உடம்பாகவும் கொண்டு இயங்கியது. மன்னர் வழிக்குடிகள் எனும் கோட்பாடு விளங்கியது. புலவர் பெருமக்கள் ஆட்சியாளரை மன்னன், இறை, இறைவன், அரசு, அரசன், வேந்து, வேந்தன், கோ, கோன், காவலன், புரவலன், கிழவன், பொருநன் (புறம்.65:10, 171:6,

18:26, 31:17, குறுந்.276:5, புறம்.18:12, 11:7, 17:40, 17:9) எனப் பல பெயர்களால் குறிப்பிடுகின்றனர்.

## 2.16. அரசமுறைத் தோற்றம்

ஐவகை நிலங்களில் முல்லை நிலத்து வாழ் மக்கள் தமக்கு ஒரு தலைவனை அமைத்து அவனைக் 'கோ' என்னும் பெயரால் அழைத்தனர். முல்லை நில மக்கள் ஆடு, மாடுகளை வளர்த்து, அவற்றில் இருந்து வரும் பால், தயிர், வெண்ணெய் முதலியவற்றை விற்றுப் பொருள் ஈட்டினர். ஆடு, மாடுகள் அதிகமாக வைத்திருந்த குடும்பத்தவரின் தந்தை செல்வ மிகுதியால் முதன்மை பெற்று, பல குடும்பங்களுக்கு அவன் தலைவனான். இவ்வகையிலே குடும்பத்தலைமை நிலத்தலைமையாகி, பின்னர் நாட்டுத் தலைமையாகி அரசமுறைத் தோற்றம் உருவானது.

> **"கோன் என்னும் இடையரைக் குறிக்கும் சொல்லே அரசனையும் குறித்தது. எனவே நாட்டிற்குத் தலைவனாயிருக்கும் அரசனின் தலைமை முல்லை நிலத் தலைவனிடமே தோன்றியிருத்தல் வேண்டும். ஈற்றில், பொருளாதாரத்திலும் தொகையிலும் சிறந்த உழவர் (மருதநிலத்) தலைவனே தமிழ்நாட்டு அரசியலில் வலிமை சிறந்து விளங்கினான். அதன் மேல் ஆயர், குறவர், பரதவர், எயினர் முதலிய ஏனைய பிரிவினர் அவனுக்கு அடிபணிந்து வாழ்ந்தனர்."[19]**

என்ற கருத்து அதை வலியுறுத்தக் காணலாம்.

> **"முல்லை நிலத்தைச் சார்ந்த ஆற்றல் வாய்ந்த முதன்மையான இடையன் தன் நண்பர்களை அருகிலிருந்த பண்ணையில் இருந்து, விலங்குகளைக் கவரத் தூண்டியதும், அதற்குத் தானே போதிய தலைமையை அளித்ததும் போருக்கு வழி வகுத்திருக்கக்கூடும். போரின் விளைவாய் இருதரப்பினரும் தங்கள் தலைவர்களைத் தேர்ந்தெடுத்தனர் எனலாம். வெற்றி**

**பெற்ற தரப்பின் தலைவன் 'கோன்' அதாவது எண்ணிறந்த இடையர்களின் பிரச்சனைக்கு இடமில்லாத தலைவனாகி இருக்கிறான்."[20]**

என்பார் ந. சுப்பிரமணியம்.

**"மக்கள் தாம் செய்த பயிர்களை அழிப்பதற்கு வரும் விலங்குகளை விரட்டியடிக்கக் காவலர்களை ஏற்படுத்தினர். இக்காவலர்கள் நல்ல பலசாளிகளாகவும் முரடர்களாகவும் பார்த்துத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இக்காவலர்களுக்குத் தாங்கள் பயிரிட்டு அறுக்கும் தானியங்களிலே பங்கு கொடுத்து வந்தனர். இந்தக் காவலர்கள் தாம் பின்னால் அரசர்களானார்கள். அரசர்களுக்குக் காவலர் என்று பெயர் அமைந்திருப்பதே இவ்வுண்மையைக் குறிக்கும்."[21]**

என்பார் சாமி. சிதம்பரனார்.

**"முல்லை நிலத்து ஆயர் தமக்குரிய தலைவனைத் தேர்ந்தெடுத்து அவனைக் கோ என்று அழைத்தனர். கோன் என்றும் அழைத்தனர். பண்டைத் தமிழ் மன்னர் கையில் கோல் எய்தி இருந்ததால் கோலர், செங்கோலர், கொடுங்கோலர் என அழைக்கப் பெற்றனர். கால்நடை நாகரிகக் காலத்தில் அரசத் தலைமை முதலில் உருவாகி இருக்கலாம்."[22]**

என்பார் க.ப. அறவாணன்.

**"கோ என அரசனைக் குறிப்பிடுவது கோன் என்பதன் சுருக்கமான வடிவமாகும். இடையனின் பணிக்கும், அரசனின் பணிக்கும் இடையே ஒத்த உறவு உள்ளது என்பது தெளிவு. இரண்டு எண்ணங்களையும் வெளிப்படுத்த ஒரே சொல்**

**ஆளப்பட்டதிலிருந்து அரசபதவி, முல்லை நிலத்திலிருந்து தோன்றி யிருக்க வேண்டுமென்று பொருளாகிறது."[23]**

எனப் பி.டி. சீனிவாச அய்யங்காரும் தமிழகத்தில் அரசபதவி முல்லை நிலத்தில் இருந்து தோன்றியிருக்க வேண்டும் என்பார்.

**"பண்டைக்காலத்தில், சமுதாயம் என்பது மக்கள் வாழ்ந்து வந்த குல அமைப்பின் அடிப்படையிலும் அவர்கள் புரிந்து வந்த தொழில்களின் அடிப்படையிலும் பல குழுக்களாகப் பிரிந்து நின்றது. இத்தகைய குழுக்கள் உலகின்கண் நிலவிய எல்லா நாட்டுப் பழைய சமுதாய அமைப்புகளிலும் காணப்பட்டன. இதன் அடிப்படையில் தமிழகமும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்கு பிரிவுகளாகப் பிரிந்திருந்தது. இதனால் நானிலம் என்னும் வழக்குண்டாயிற்று. மக்கள் பல காரணங்களால் அயலே அமைந்த நில மக்களோடு போரிட வேண்டிய நிலைமை எழுந்தது. அதனால் அவ்வந்நிலத்து மக்கள் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளத் தம்முள் அறிவாலும், ஆற்றலாலும் சிறந்த ஒருவனைத் தலைவனாகத் தேர்ந்தெடுக்க வேண்டியதாயிற்று."[24]**

என்பார் ஜெ. பொன்முரளி.

முல்லை நிலத் தலைவன் முற்காலத்தில் முதல் அரசனாகி இருத்தல் வேண்டும். வேளாண்மை தொடங்கிய பிறகு படிப்படியே வளர்ந்த மருத நிலத்தலைவன் பின் அரசனாகக் கருதப்பட்டிருத்தல் வேண்டும். உற்பத்தியும் உடைமையும் பெருகப் பெருக ஏனைய குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை தலைமைகள் வலிமை குன்றியிருக்கலாம்.

**"அரசு உருவான சூழலில் நில எல்லைப் பெருக்கமே அரசின் அடிப்படை நோக்கமாகின்றது. நால்வகை நிலங்களும் அரசில் இணைகின்றன. அந்நால்வகை நிலங்களில் மருதம்**

**வேளாண் பொருளாதாரத்திற்கும், நெய்தல் வணிகப் பொருளாதாரத்திற்கும் அடிப்படைகளாய் அமைகின்றன."[25]**

எனப் பெ. மாதையன் அவர்கள் நில எல்லையை விரிவுபடுத்துவது அரசின் நோக்கம் என்பார்.

## 2.17. தாயமுறை

அரசுரிமை வாரிசு அடிப்படையில் அமையும். தந்தைக்குப் பின்னர் மகன் பட்டத்துக்கு வருவது முறைமை. அதிலும் மூத்தோர்க்கே உரிமை உண்டு என்பதை,

***"மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்***
***பால்தர வந்த பழவிறற் றாயம்"*** **(புறம்.75:1–2)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

***"உயர்ந்தோ ருலக மெய்திப் பின்னும்***
***ஒழித்த தாய மவர்க்குரித் தன்றே"*** **(புறம்.213:10–11)**
***"முரசுடைத் தாயத் தரசுபல வோட்டி"*** **(பதிற்.44:20)**

என வரும் பாடலடிகளின் மூலமும் அரசபதவியானது தந்தையிடத்திலிருந்து தலைமகனுக்கிறங்கி தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வந்ததை அறியலாம்.

இந்நிலவுலகத்து வாழ்வார் பொருட்டுச் சால்பும் நடுநிலையும் உட்பட பிற நற்பண்புகளும், நாடு காத்தற்கு வேண்டும் அரசியலறிவும் பெற்ற நன்மைகளைப் பெற்றுள்ளாய் எனத் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும் பொறையை அரிசில் கிழார் பாராட்டுவார். இதனை,

***"நலம்பெறு திருமணி கூட்டு நற்றோள்***
***ஒடுங்கீ ரோதி யொண்ணுதல் கருவில்***
***எண்ணியன் முற்றி யீரறிவு புரிந்து***
***சால்புஞ் செம்மையு முளப்படப் பிறவும்***

*காவற் கமைந்த வரசுதுறை போகிய*

*வீறுசால் புதல்வற் பெற்றனை . . . .”* (பதிற்.74:16–21)

என்னும் அடிகளின் மூலம் தந்தைக்குப்பின் மகன் ஆட்சியுரிமை பெறுதலை அறியலாம்.

**“அரசாள்வோன் மகன் அரசனாக அமரும் வழிமுறைக் கொள்கை பிற்காலத்தே நிலைத்து விட்ட போதிலும் பண்டைத் தமிழகத்தில் அரசமரபு என ஒரு மரபு இருந்திலது. அரசாள்வோர் அரசர் எனப்பட்டனரேயன்றி அரசாளும் மரபிற் பிறந்தோர்க்குத் தான் அரசு உரியது என கருதினாரிலர். வடநாட்டில் இராசனுக்குரியது இராச்சியம் எனக் கருதப்பட்டதேயன்றி ‘இராச்சியம்’ புரிவோன் ‘இராசன்’ என்று கொள்ளப்பட்டிலது. அங்கு அரசாள்வதற்குரிய மரபு எனச் சத்திரியர் மரபு தோன்றியது போல் தமிழகத்தில் தோன்றிலது. தமிழ்ச் சொல்லாம் ‘அரசன்’ என்பதே வடமொழியில் ‘இராஜன்’ ஆக உருப்பெற்றது. சிலர் கருதுவது போல் ‘இராஜன்’ ‘அரசன்’ ஆகவில்லை.”[26]**

என்பார் சி. இலக்குவனார்.

பண்டைத்தமிழகத்தில் அரசாள்வோர் அரசர் எனப்பட்டனர். அரசமரபில் பிறந்தோர்க்குத் தான் அரசாட்சி என்ற கொள்கை இல்லை. சங்க இலக்கியத்தில் தான் அரச மரபில் பிறந்தோர்க்குத் தான் அரசுரிமை என்ற கொள்கை வலுப்பெற்றது.

## 2.18. அரண்மனை

அரசர்கள் வாழ்ந்த இருப்பிடம் அரண்மனை எனப்பெற்றது. காவலர்களைக் கொண்ட மனையாதலின் அரண்மனை என அழைக்கப்பட்டது. அரண்மனை கோயில் என்றும் அழைக்கப்பட்டது.

தொடக்ககாலத்தில் அரண்மனைகளில் அரசர்களின் உறவினர் மட்டுமல்லாமல் அவர்களுக்குத் தேவையான பொருள்களை விற்பனை செய்யும்

மக்களும் கலந்து நகர் போல் பரந்து விரிந்து காணப்பட்டதால் அரண்மனை நகர் என்றும் அழைக்கப்பட்டது.

அரண்மனை பெரியதாகவும், கலைச்சிறப்பு மிக்கதாகவும், மாடங்களோடு காவல் மிக்கதாகவும் விளங்கின. இதனை,

*"நற்றார்க் கள்ளின் சோழன் கோயில்"* **(புறம்.378:5)**

*"ஓவத் தன்ன விடனுடை வரைப்பின்"* **(புறம். 251:1)**

*"ஓவத் தன்ன வுருகெழு நெடுநகர்"* **(பதிற்.88:28)**

*"இடஞ்சிறந் துயரிய எழுநிலை மாடத்து"* **(முல்லைப்.86)**

*"பருந்துபடக் கடக்கும் ஒள்வாண் மறவர்*
*கருங்கடை எஃகஞ் சாத்திய புதவின்*
*அருங்கடி வாயில் அயிராது புகுமின்"* **(மலை.489–491)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 2.18.1. துயிலெடை

அரண்மனைகளில் அரசர் தாலையில் சூதர் இன்னிசை பாடத் துயிலெழுவர். இதனைத் தொல்காப்பியர்,

*"தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்*
*சூதர் ஏத்திய துயில்எடை நிலை"*[27]

என்பார்.

> **"கிடந்தோர்க்கு எனப் பன்மை கூறவே, அவர் துயிலெழுப்புத் தொன்று தொட்டு வரும் என்பதூஉம், சூதர், மாகதர், வேதாளிகர், வந்திகர் முதலாயினோருட் சூதரே இங்ஙனம் வீரத்தால் துயின்றாரைத் துயில் எழுப்புவர் என்பதூஉம், யாண்டும் முன்னுள்ளோரையும் பிறரையும் கூறப்படும் என்பதூஉம் கொள்க."[28]**

என்பார் நச்சினார்க்கினியர்.

பள்ளியெழுச்சிக் காலத்தில் அரண்மனையில் வலம்புரிச் சங்கம் முழங்குவதை,

*“. . . . . திரிவாய் வலம்புரி*
*ஞாலங் காவலர் கடைத்தலைக்*
*காலைத் தோன்றினும்”* **(புறம்.225:12–14)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

*“சூதர் வாழ்த்த மாகதர் நுவல*
*வேதா ளிகரொடு நாழிகை இசைப்ப*
*இமிழ்முர சிரங்க ஏறுமாறு சிலைப்பப்*
*பொறிமயிர் வாரணம் வைகறை இயம்ப”* **(மது.670–673)**

என்னும் அடிகளின் மூலம் சூதர் வாழ்த்த, மாகதர் புகழ, வைதாளிகர் தத்தம் துறைக்குரியவற்றை இசைப்ப, நாழிகை சொல்வார் நாழிகையைச் சொல்ல, பள்ளி எழுச்சி முரசும் முழங்க அரசர் துயிலெழுவர் என்பதை அறியலாம்.

அரண்மனைகளில் மட்டுமல்லாமல் அரசர்கள் பாசறைகளில் இருக்கும் பொழுதும் வலம்புரியுடன் முரசம் ஒலிக்கத் துயில் எழுவர் என்பதை,

*“இரங்குரன் முரசமொடு வலம்புரி யார்ப்ப*
*இரவுப் புறங்கண்ட காலைத் தோன்றி*
*எஃகிரு ளகற்று மேமப் பாசறை”* **(புறம்.397:5–7)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

**“அரசர்களுக்கு இருந்த இந்நடைமுறை பக்தி இயக்க காலத்தில் திருப்பாவை, திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி ஆகிய சிற்றிலக்கியங்கள் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்துள்ளது.”[29]**

என்பார் சு. இராசாராம்.

## 2.19. அரசர்க்குரிய அடையாளங்கள்

அரசர் பயன்படுத்தியவற்றுள் குறிப்பிடத்தக்க அடையாளங்களாக அவன் கைக்கொண்டிருந்த வெண்கொற்றக்குடை, செங்கோல், முரசு ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

*"படையுங் கொடியுங் குடையும் முரசும்*
*நடைநவில் புரவியுங் களிறுந் தேரும்*
*தாரும் முடியும் நேர்வன பிறவும்*
*தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய"*[30]

எனத் தொல்காப்பியர் அரசர்க்குரிய அடையாளங்களாகப் பத்தைக் குறிப்பிடுவார்.

### 2.19.1. வெண்கொற்றக்குடை

அரசனின் வெண்கொற்றக்குடை வெயிலை மறைத்தற்குக் கொண்டது அன்று. குடிகட்கு அருள் செய்தற் பொருட்டு கொண்டது. இதனை,

*"கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை*
*வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய*
*குடிமறைப் பதுவே . . . . . ."* **(புறம்.35:19–21)**

என்பார் வெள்ளைக்குடி நாகனார்.

அரசன் தன் குடிமக்களைத் துன்பம் வராமல் பாதுகாப்பேன் என்பதைச் சுட்டுவதற்குரிய அடையாளமாக இது அமையும். இதனை,

*"நடைமிகுத்து ஏத்திய குடைநிழல் மரபும்"*[31]

என்பார் தொல்காப்பியர்.

போர் செய்யப் புறப்படுவதற்கு முன் நல்ல நாள் பார்த்து அந்நாளில் அரசன் தன் குடையைப் புறப்படச் செய்வது வழக்கமாகும். இதனை,

*"குடையும் வாளும் நாள்கோள் அன்றி"*[32]

என்கிறது தொல்காப்பியம்.

*"சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்*
*அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல*
*இருகுடை பின்பட வோங்கிய வொருகுடை*
*உருகெழு மதியி னிவந்துசேண் விளங்க"* (புறம்.31:1–4)
*"உரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்*
*வலனிரங்கு முரசின் வாய்வாள் வளவன்*
*வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின்*
*மாலை வெண்குடை யொக்குமா லெனவே"* (புறம்.60:9–12)

என்னும் அடிகளின் மூலம் வெண்கொற்றக் குடையின் சிறப்பினை அறியலாம்.

அரசனது வெண்கொற்றக்குடை கோயிலை வலம் வரும் போது மட்டுமே தாழ்ந்து செல்லும். இதனை,

*"பணியிய ரத்தைநின் குடையே முனிவர்*
*முக்கட் செல்வம் நகர்வலம் செயற்கே"* (புறம்.6:17–18)

என்பார் காரிகிழார்.

இக்குடைக்குத் தீங்கு ஏற்படுவது மன்னனின் வீழ்ச்சிக்கு அடையாளமாகக் கருதப்பட்டது என்பதை,

*"காவல் வெண்குடை கால்பரிந் துலறவும்"* (புறம்.229:20)

எனப் புறப்பாடலடி உணர்த்தும்.

### 2.19.2. செங்கோல்

நன்மை, தீமை ஆராய்ந்து அதற்குத் தக்க தண்டனை விதிப்பதற்கு உரியதாகச் செங்கோல் விளங்கியது.

> **"மன்னர்கள் உயர்ந்த கல்வியறிவு அமையப் பெற்றிருந் தார்கள். எந்தச் சமயத்தில் எது செய்ய வேண்டும் எதைத் தவிர்க்க வேண்டும் என்பது அவர்களுக்குத் தெரிந்திருந்தது.**

**அறம் எது என்று ஆராய்ந்தறியும் தகுதி அவர்களிடம் இருந்தது.”[33]**

என ஏ.வி. சுப்பிரமணி கூறுவதன் மூலம் அரசர்கள் முறையான செங்கோல் ஆட்சி நடத்தி வாழ்ந்தனர் என்பதை அறியலாம்.

**“சங்ககால அரசியல் மன்னனை உயிராக உடையதாயினும் அறநெறி அடிப்படையிலான செங்கோல் நாட்டம் விளங்கியது. மன்னன் வாழ்த்தும் வரையும் பெறுதல் எளிதாக இருந்தது. ஆட்சிச் சிறப்பில் நாடும் ஊரும் அமைதியில் திளைத்தன. மக்கள் தம்முள் கலகமற்று வாழ்ந்தனர். ஆட்சியில் அவ்வப்போது பிழைகள் நேரினும் அவற்றைத் தடுக்க சான்றோர் முயன்றனர். பிழைகளைத் திருத்திக் கொள்ளும் மனப்பான்மை மன்னனிடம் நிலவியது.”[34]**

என்பார் து. சிவராசன்.

அரசர்கள் அறவழியில் நின்று செங்கோல் ஆட்சி நடத்தினர். இதனை,

***“அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்”*** **(பொரு.230)**

***“அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்”*** **(பெரும்.36)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

அரசர்கள் தம் முன்னோர் சென்ற சீரிய வழியைப் பின்பற்றிக் குடிமக்களுக்காக அரசாண்டனர் என்பதை,

***“யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனும்***
***அல்லவை செய்யான் . . . . .”*** **(புறம்.191:4–5)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 2.19.3. முரசு

செய்திகளை அறிவிப்பதற்கு அடிக்கப்படும் பெரும்பறை ‘முரசு’ எனப்படும். அது போர் முரசு, காவல் முரசு என இருவகைப்படும்.

காவல் முரசின் சிறப்பினை,

*"மாசற விசித்த வார்புறு வள்பின்*
*மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை*
*ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்*
*பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்*
*குருதி வேட்டை யுருகெழு முரசம்"* **(புறம்.50:1–5)**

எனப் புறப்பாடலடிகள் உணர்த்தும்.

முரசுக்குத் தோலை மயிர் சீவாது போர்த்தல் மரபு. இதனை,

*"வென்றதன் பச்சை சீவாது போர்த்த*
*திண்பிணி முரச மிடைப்புலத் திரங்க"* **(புறம். 288:3–4)**

*"கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த*
*மாக்கண் முரசம் . . . . . "* **(மது. 732–733)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

*"இமிழ்குரன் முரசி னெழுவரொடு முரணி"* **(புறம். 99:9)**

என்னும் அடியின் மூலம் போர் முரசினைப் பற்றி அறியலாம்.

### 2.19.3.1. முரசின் சிதைவு – குறியீடு

முரசுக்குத் தீங்கு ஏற்படின் மன்னனுக்குத் துன்பம் தொடரும் என்பது அன்றைய நம்பிக்கையாகும்.

*"திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவும்"* **(புறம். 229:19)**

என்னும் அடியின் மூலம் முரசு கண் கிழிந்து உருளுதல் தீமையின் அறிகுறி என்பதை அறியலாம்.

### 2.19.3.2. முரசைக் கைப்பற்றல் – குறியீடு

பகைவரின் போர் முரசினைக் கவர்ந்து வரும் செயல் வீரமிக்க செயலாகக் கருதப்பட்டது. இதனை,

*"மோகூர் மன்னன் முரசங் கொண்டு"* (பதிற்.44:14)

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

### 2.19.4. முடி

அரசர் தலையில் அணியக்கூடியது பொன்னாலும் மணியாலும் ஆன அணிகலன். ஆனால், அது அரசன் எனும் தலைமையை அடையாளம் காட்டும் குறியீடாக விளங்குகிறது. அரசர்கள் பலருள் சேர, சோழ, பாண்டியருக்கே முடி அணியும் உரிமை இருந்ததெனத் தெரிகிறது. அதனால் அவர்கள் 'முடியுடை மூவேந்தர்' எனச் சிறப்பாகப் போற்றப்பெற்றனர். அரசர்கள் முடி புனைந்த நாளைச் சிறப்பாகக் கருதி விழாக் கொண்டாடினர். இதனைத் தொல்காப்பியர்,

*"சிறந்த சீர்த்தி மண்ணுமங்கலமும்"*[35]

என்பார்.

### 2.19.4.1. பகைவர் மணிமுடியைக் கைப்பற்றி அணிதல்

அரசர்கள் பகைவரின் முடியினைக் கவர்தல் வீரமாகக் கருதினர். இதனை,

*"நீயே பிறரோம்புறு மறமன் னெயில்*
*ஓம்பாது கடந்தட்டவர்*
*முடிபுனைந்த பசும்பொன்னின்*
*அடிபொலியக் கழறைஇய*
*வல்லாளனை வய வேந்தே"* (புறம்.40:1–5)

என்பார் ஆவூர் மூலங்கிழார்.

## 2.20. அரசர் – சமுதாயம் – உறவு நிலைகள்

அரசன் உலகத்து உயிராக இருந்தான். நெல்லும் நீரும் இப்பெருமையைப் பெறவில்லை. இதனை,

*"நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே*
*மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்"* (புறம்.186:1–2)

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

பெற்ற தாய் குழந்தையைப் பேணுவது போல் நாட்டைக் காப்பாயாக எனப் புலவர்கள் அரசனுக்கு அறிவுறுத்துவதை,

*"நிரயங் கொள்பவரோ டொன்றாது காவல்*
*குழவி கொள்பவரின் ஓம்புமதி"* (புறம்.5:6–7)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

உலகத்தின் கண்ணே நிலை பெற்று வாழ்கின்ற உயிர்களெல்லாம் தத்தம் அரசனிடத்து வைத்த காதலால் அவனுக்கு ஏதேனும் துன்பம் வருமோ என்று அஞ்சுகின்றனர். இதனை,

*"மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே"* (புறம்.20:21)

எனப் புறப்பாடலடி தெளிவுறுத்தும்.

## 2.20.1. அரசர் அந்தணர் உறவு நிலை

அரசர்கள் அந்தணர்களிடம் பணிந்து நடந்துள்ளனர்.

> **"பிராமணத் தன்மைத்தான் க்ஷத்திரியத் தன்மைக்கு உற்பத்தி ஸ்தானம் என்பது; ஆதலால் க்ஷத்திரியன் அனைத்திற்கும் மேலான பதவியை அடைந்த போதிலும் கடைசியாக அவன் பிராமணத் தன்மையின் மேல் தான் இருக்கிறான்."[36]**

என்பார் தேவிபிரசாத் சட்டோபாத்யாயா.

அரசர்கள் யாவரும் பார்ப்பார் வெறுக்கத் தக்கனவற்றைச் செய்யார். இதனை,

*"ஆர்புனை தெரியனின் முன்னோ ரெல்லாம்*
*பார்ப்பார் நோவன செய்யார்"* (புறம்.43:13–14)

எனப் புறப்பாடலடிகள் உணர்த்தும்.

அரசர்கள் நான்மறை முதல்வர்களைச் சுற்றமாகக் கொண்டு வேள்வி செய்தமையை,

*“ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை*
*நான்மறை முதல்வர் சுற்றமாக”* **(புறம்.26:12–13)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

அரசர்கள் பார்ப்பனரை அன்றிப் பிறரைப் பணிதல் இல்லை. இதனை,

*“பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே”* **(பதிற்.63:1)**

எனப் பதிற்றுப்பத்து உணர்த்தும்.

*“இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த*
*நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே”* **(புறம்.6:19–20)**

எனக் காரிகிழாரும் வேந்தர்களிடம் பார்ப்பனப் பணிவை வலியுறுத்தியுள்ளார்.

## 2.20.1.1. வேள்வி செய்தல்

அரசர்கள் அந்தணர்களைக் கொண்டு பல வேள்விகள் செய்தனர். முதுகுடுமிப் பெருவழுதி என்னும் அரசன் பல வேள்விகளைச் செய்தமையால் ‘பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி’ என்று அழைக்கப்பட்டான். இவன் ஆற்றிய பல யாகசாலைகளை,

*“பல்சாலை முதுகுடுமியின்*
*நல்வேள்வித் துறைபோகிய*
*தொல்லாணை நல்லாசிரியர்*
*புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்*
*நிலந்தரு திருவி னெடியோன் போல”* **(மது.759–763)**

என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

*“வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி*
*யூப நட்ட வியன்களம் பலகொல்”* **(புறம்.15:20–21)**

என முதுகுடுமிப் பெருவழுதி செய்த வேள்வியைப் புறப்பாடலும் உணர்த்தும்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் செய்த வேள்வியை,

*“ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை*
*நான்மறை முதல்வர் சுற்ற மாக*
*மன்ன ரேவல் செய்ய மன்னிய*
*வேள்வி முத்திய வாய்வாள் வேந்தே”* (புறம்.26:12–15)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

*“வேத வேள்வித் தொழின்முடித் ததூஉம்*
*அறிந்தோன் மன்ற வறிவுடை யாளன்”* (புறம்.224:9–10)

என்னும் அடிகளின் மூலம் சோழன் கரிகாற் பெருவளத்தான் செய்த வேள்வியை அறியலாம்.

## 2.20.2. அரசர் – அமைச்சர் உறவு நிலை

அரசன் நாட்டில் அமைதியும் அறமும் நிலவுவதற்குச் செய்ய வேண்டியவற்றை ஒரு குழுவுடன் எண்ணியே செய்வான். அக்குழுவினரின் அறிவுரையைக் கேட்ட பின்பே நீதியை வழங்குவான். சங்க இலக்கியம் இக்குழுவினைச் சுற்றம் என்றும் கூறும். அரசனுக்கு அறிவுரை கூறுவதில் முதன்மை பெறுபவர் அமைச்சர் ஆவர்.

**“சங்க காலத்து மன்னர்களுக்கு நல்லாட்சி புரிய உதவும் வகையில் அமைச்சர்கள் இருந்தார்கள். அவர்களைப் ‘பெரியோர்’ எனவும் ‘சான்றோர்’ எனவும் சுட்டுவது பழைய வழக்கம். சங்ககாலத்து மன்னர்களான பெருஞ்சேரலிரும் பொறைக்கு அரிசில் கிழார் அமைச்சராக அமைந்தார் என்றும், இளஞ்சேரல் இரும்பொறைக்கு மையூர் கிழான் அமைச்சராக விளங்கினார் என்றும் பதிற்றுப்பத்துப் பதிகங்கள் குறிப்பிடுகின்றன. சிலப்பதிகாரத்தில் அறைபோகு அமைச்சனைக் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்த பூதம் புடைத்துண்ணும் என்றும் செய்தி**

**குறிப்பிடப்பட்டுள்ளது. கச்சிமாநகரில் அமைச்சர்களுக்கென்று தனித்தெரு இருந்ததாகக் கூறப்படுகிறது."[37]**

என்பார் சி.ஈ. இராமச்சந்திரன்.

கொள்கைச் சான்றவரையே அமைச்சராகத் தெரிந்து கொள்ளும் வழக்கம் புலனாகின்றது.

***"திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி"* (புறம்.2:19)**

என்னும் புறப்பாடலடியில் திரியாச் சுற்றம் என்பதற்கு **"மந்திரிச் சுற்றம்"[38]** என்று பொருள் கூறியுள்ளார் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை.

**"நீதி வழங்குவதற்கென்று இயங்கிய ஓர் அமைப்பே அறங்கூறவையமாகும். இது இக்கால நீதிமன்றத்தைப் போன்று அக்காலத்து நீதி வழங்கும் இடமாய்த் திகழ்ந்தது. இந்த அவையம் பேரூர்களில் செயல்பட்டதெனத் தெரிய வருகின்றது."[39]**

என்பார் அரங்க. இராமலிங்கம்.

அறங்கூறும் அவையத்தில் அரசனுக்கு ஆலோசனை கூறச் சிறந்த கொள்கையாளர் இருப்பர். இவ்வியல்பை,

***"அச்சமும் அவலமும் ஆர்வமு நீங்கிச்***
***செற்றமும் உவகையுஞ் செய்யாது காத்து***
***ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்***
***சிறந்த கொள்கை அறங்கூ றவையமும்"* (மது.488–492)**

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

உறையூர் அவையத்தில் அறம் நின்று நிலை கொண்டிருந்ததை,

***"மறங்கெழு சோழ ருறந்தை யவையத்***
***தறநின்று நிலையிற்று . . . ."* (புறம்.39:8–4)**

எனப் புறநானூறு உணர்த்தும்.

அரசர்க்கு அவ்வப்போது நுண்மையான அறிவுத் திட்டங்கள் கூறும் அமைச்சர்களைப் போன்று நுண்ணறிவுடன் புலவர்கள் விளங்கினர். இதனை,

***"பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளஞ் செல்வர்க்கு***
***மதிமொழி யிடன்மாலை வினைவர்போல் வல்லவர்"*** **(கலித்.68:1–2)**
***"கொலையஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழ்"*** **(கலித்.10:16)**

என வரும் அடிகளின் மூலம் அமைச்சரை வினைவர் என்று அழைப்பதைக் காணலாம்.

வீண்மீன்களுக்கிடையே தோன்றும் திங்களைப் போல அரசனும் சுற்றத்தாரிடை விளக்கமுற்றுத் தோன்றினான் என்பதை,

***"பன்மீ னாப்பட் டிங்கள் போலப்***
***பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை"*** **(பதிற்.90:17–18)**

எனப் பதிற்றுப்பத்து விளக்கும்.

## 2.21. அரசவை

அரசர்கள் அரசவையில் இருந்து மக்களின் குறை தீர்த்துச் செங்கோல் ஆட்சி செலுத்துவர்.

**"அரசனது ஆட்சிக்குழு கூடும் இடம் அவை எனப்பெயர் பெற்றது. அரசனைச் சார்ந்த சான்றோர், பெரியோர் கூடும் இடம் அரசவையாகும்."[40]**

என்பார் அ. ஆறுமுகம்.

அரசர்களது அவையின் தன்மையைத் தொல்காப்பியர்,

***"எட்டுவகை நுதலிய அவையகம்"[41]***

என்பார். எட்டுவகை என்பதற்கு இளம்பூரணர்,

**"குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறாமை, அவாவின்மை."[42]**

என எட்டு வகையால் அமைவது என விளக்குவர்.

மக்கள் குறை தீர்த்தல், முறை வழங்கல், கொடைக்கடன் இறுத்தல் என்பன இளந்திரையன் அரசவையில் வீற்றிருந்து ஆற்றிய செயலாகும். இதனை,

*"முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்*
*வேண்டுப வேண்டுப வேண்டுநர்க் கருளி*
*இடைதெரிந் துணரும் இருடீர் காட்சிக்*
*கொடைக்கட னிறுத்த கடம்பா வுள்ளத்து*
*உரும்பில் சுற்றமோ டிருந்தோன்"* **(பெரும்.443–447)**

அரசர்களின் அவைக்களம் அறத்தைத் தெளிய உணர்ந்த சான்றோர்களை உடையது. இதனை,

*"அளமறக் கண்ட நெறிமா ணவையம்"* **(புறம்.224:4)**
*"சான்றோ ரிருந்த அவை"* **(புறம்.226:8)**
*"நல்லோர் குழீஇய நாநவில் அவையம்"* **(மலை.77)**
*"அறம் செழு நல்அவை"* **(அகம்.93:5)**
*"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து*
*அறங்கெடல் அறியாது"* **(நற்.400:8–9)**
*"பொற்புவிளங்கு புகழவை"* **(மது.778)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

மூவேந்தரும் அரசவையில் ஒருங்கு கூடி இருக்கும் அரசவை எவ்வளவு சிறப்புடையது என்பதை,

*"முரசுமுழங்கு தானை மூவருங்கூடி*
*அரசவை யிருந்த தோற்றம் போல"* **(பொரு.54–55)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

அரசர்கள் நாள்தோறும் அரசவையில் இருந்து செங்கோல் செலுத்தி முறை செய்தலை,

*"முறையுடை யரசன் செங்கோ லவையத்து"* (குறுந்.276:5)

எனக் குறுந்தொகை குறிப்பிடும்.

குறுநில மன்னருக்கும் தனி அவை உண்டு. கோசர் அரசவையினை,

*"வலம்புரி கோச ரவைக்களத் தானும்"* (புறம்.283:6)

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

பழையன் என்னும் குறுநில மன்னனுக்கு மோகூரில் அரசவை இருந்ததை,

*"மழையொழுக் கறாஅப் பிழையா விளையுட்*
*பழையன் மோகூர் அவையகம்"* (மது.507–508)

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

## 2.22. நாண்மகிழிருக்கை

அரசர் நாள்தோறும் மகிழ்ந்திருக்கக்கூடிய இருக்கை நாண்மகிழிருக்கை எனப்பெறும்.

> **"குடிகளின் குறையைக் கேட்பதற்கும் கேட்டு முறை செய்வதற்கும் தன்னைநாடி வரும் புலவர்க்கும் வறியவர்க்கும் பரிசில் நல்குவதற்கும் வேந்தன் வீற்றிருக்கும் அவையை நாள்மகிழிருக்கை எனவும் நாளவை எனவும் வழங்குவர்."[43]**

என்பார் அரங்க. இராமலிங்கம்.

> **"ஒவ்வொரு நாளும் தன் உடன் பணியாற்றுவோருடன் தலைவன் கூடி உரையாடி மகிழ்தல் உண்டு. இவ்வாறு கூடும் அவை நாளவை, நாண்மகிழிருக்கை எனப் பெயர்பெற்றது."[44]**

என்பார் அ. ஆறுமுகம்.

அரசன் அனைவரோடும் கலந்து அளவளாயிருக்கும் இருக்கையை,

*"சூடா நறவி னாண்மகி ழிருக்கை"* (பதிற்.85:8)
*"பாண்முற் றுகநின் னாண்மகி ழிருக்கை"* (புறம்.29:5)
*"வீயாது சுரக்குமவ னாண்மகி ழிருக்கை"* (மலை.76)

*"வருநர் வரையாப் பெருநா ளிருக்கை"* **(அகம்.227:15)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

அரசன் பாணருடன் நாளோலக்கத்தில் இருந்து இசை இன்பம் துய்ப்பான். இதனை,

*". . . . . பாணர் நாளவை*
*வாணுதல் கணவ"* **(பதிற்.38:9–10)**

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

சேரமான் குட்டுவன் நாளவையில் இரவலர் புகுதல் எளிது என்பதை,

*"செம்ம னாளவை யண்ணாந்து புகுதல்*
*எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே"* **(புறம்.54:3–4)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

செல்வக்கடுங்கோ வாழியாதனின் நாண்மகிழிருக்கையினை விழாக்களத்தின் செல்வத் தோற்றமுடையதாகவும், அவ்விருக்கையின்கண் அரசன் மகிழ்வுடன் இருந்தமை கண்டு தானும் மகிழ்வதாகவும்,

*"பூணணிந்து விளங்கிய புகழ்சான் மார்பநின்*
*நாண்மகி ழிருக்கை யினிதுகண் டிகுமே*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*சாறுபடு திருவி னனை மகி ழானே"* **(பதிற்.65:12–17)**

எனக் கபிலர் குறிப்பிடுவார்.

திதியன் தன்னை நாடிப் பாடி வரும் பாணர்க்குப் பல அணிகலன்களையும் நாளவையில் கொடுத்தான். இதனை,

*". . . . . பலகலம் உதவி*
*நாளவை யிருந்த நனைமகிழ் திதியன்"* **(அகம்.331:11–12)**

என அகப்பாடல் உணர்த்தும்.

அஃதை என்னும் அரசன் யானைகளையும், அணிகலன்களையும் பரிசிலர்க்கு நாளோலக்கத்தில் வழங்கினான் என்பதை,

*“இன் கடுங் கள்ளின் அஃதை களிற்றொடு*
*நன் கலன் ஈயும் நாள் மகிழ் இருக்கை*
*அவைபுகு பொருநர் பறையின்”* (அகம்.76:3–5)

என்னும் அடிகள் குறிப்பிடும்.

சோழன் நலங்கிள்ளி நாண்மகிழிருக்கையில் பொன்னரிமாலையைப் பாணர் தலையில் சூட்டுவதை,

*“அழல் புரிந்த வடர்தாமரை*
*ஐதடர்ந்த நூற்பெய்து*
*புனைவினைப் பொலிந்த பொலனறுந் தெரியல்*
*பாறுமயி ரிருந்தலை பொலியச் சூடிப்*
*பாண்முற் றுகநின் னாண்மகிழிருக்கை”* (புறம்.29:1–5)

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

## 2.23. அரசன் கடமைகள்

அரசனின் கடமைகளை மக்களைப் பாதுகாத்தல், நடுநிலைமையோடு கூடிய முறைமை, வரி வசூலித்தல், வாய்மை காத்தல், கொடுங்கோன்மைக்கு அஞ்சல், பரிசிலரைப் போற்றுதல், சமுதாய மேம்பாட்டுக் கடமைகள், போர்க்கடமைகள் போன்ற தலைப்புகளில் கீழ்வருமாறு காணலாம்.

### 2.23.1. மக்களைப் பாதுகாத்தல்

மக்களைப் பலவகைத் தீங்குகளிலிருந்து காத்தல் அரசன் கடமையாகும். புலி தன் குருளையைக் காப்பது போல் அரசன் மக்களைப் பேணி நடந்தான் என்பதை,

*“புலிபுறங் காக்குங் குருளை போல*
*மெலிவில் செங்கோ னீபுறங் காப்ப”* (புறம்.42:10–11)

என்னும் அடிகள் விளக்கும்.

கள்ளர், கொள்ளைக்காரர் முதலியோரிடமிருந்து நாட்டைப் பாதுகாக்க அரசன் காவற்படைகளை அமைத்தான்.

*“யாமங்கொள்பவர் சுடர்நிழற் கதூஉம்”* (புறம்.37.9)

*“நெடுநா வொண்மணி கடிமனை இரட்ட”* (நற்.40:1)

*“காப்புடை வாயில் போற்றோ என்னும்*
*யாமங்கொள்பவர் நெடுநா ஒண்மணி”* (நற்.132:8–9)

*“நெடுநா வொண்மணி நிகழ்த்திய நடுநாள்”* (முல்லைப்.50)

*“வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்*
*துஞ்சாக் கண்ணர் அஞ்சாக் கொள்கையர்*
*அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர்”* (மது.643–645)

என வரும் பாடல் அடிகளின் மூலம் ஊர்க்காவலர், நகர்க்காவலர் பற்றி அறிய முடிகிறது.

*“கல்லா மழவர் வில்லுடை விலங்கிய*
*துன்னரும் கவலை அருஞ்சுரம் இறந்தோர்”* (நற்.387:4–5)

*“இலைவேய் குரம்பை உழையதட் பள்ளி*
*உவலைக் கண்ணி வன்சொல் இளைஞர்*
*சிலையுடைக் கையிர் கவலை கரப்ப”* (மது.310–312)

என்னும் அடிகளின் மூலம் தெருக்காவலரைப் பற்றி அறிய முடிகிறது. அவர்கள் கையில் வில்லும் அம்பும் வைத்திருந்தனர் என்பதையும் அறிய முடிகிறது.

### 2.23.1.1. வணிகர், வேளாண் மக்களைப் பாதுகாத்தல்

வணிகம் வேளாண்மை போன்ற தொழில்கள் நாட்டின் வளர்ச்சிக்கு இன்றியமையாத தொழில்கள் ஆகும். ஆதலால், அவ்வத்தொழில் செய்யும் மக்களைப் பேணிக் காப்பதும் அரசனின் கடமையாகும்.

*“கூலம் பகர்நர் குடிபுறந் தராஅ”* (பதிற்.3:23)

*"பகடுபுறந் தருநர் பார மோம்பிக்*

*குடிபுறந் தருகுவை யாயினின்*

*அடிபுறந் தருகுவ ரடங்கா தோரே"* (புறம்.35:32–34)

என்னும் அடிகளின் மூலம் வணிகர், வேளாண் மக்களை அரசர் பேணினர் என்பதை அறியலாம்.

## 2.23.2. நடுநிலைமையோடு கூடிய முறைமை

அரசன் குடிமக்களுக்கு நடுநிலைமையோடு முறையான நீதி வழங்கி காப்பாற்றினான்.

அரசன் தனக்கு வேண்டியவர் என்று ஒருவன் செய்த கொடுந்தொழிலைப் பொறுத்துக் கோல் வளைதல் கூடாது. இவர் தனக்கு அயலோர் என்று அவர் நற்குணங்களை மறத்தல் கூடாது என்று புலவர் அரசனுக்கு அறிவுறுத்துகிறார். இதனை,

*"அறநெறி முதற்றே யரசின் கொற்றம்*

*அதனால் நமரெனக் கோல்கோ டாது*

*பிறரெனக் குணங்கொல் லாது*

. . . . . . . . . . . . . . . . . . . ..

*நீ நீடு வாழிய"* (புறம்.55:10–17)

எனப் புறப்பாடல் தெளிவுறுத்தும்.

கதிரவன் கதிர்களைச் சொரிவது போல நீதி தவறாது முறையிரந்தார்க்கும், குறையிரந்தார்க்கும் வேண்டியவற்றை, வேண்டினார்க்குச் செய்யும் தொண்டைமான் இளந்திரையனின் அருள் திறத்தை,

*"குணகடல் வரப்பின் முந்நீர் நாப்பண்*

*பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு*

*முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும்*

*வேண்டுப வேண்டுப வேண்டுநர்க் கருளி"* **(பெரும்.441–444)**

எனப் பெரும்பாணாற்றுப்படை உணர்த்தும்.

சோழன் இளஞ்சேட் சென்னி ஆராய்ந்து அறுதியிடப்பட்ட கொடுமையை ஒருவனிடம் காணின் அத்தீமைக்குத் தக்க தண்டனை வழங்குவான் என்பதை,

*"நீமெய் கண்ட தீமை காணின்*

*ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி"* **(புறம்.10:3–4)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம். சோழன் நலங்கிள்ளி அரண்மனையில் முரசு இனிதாக ஒலிக்கத் தீயோரைத் தண்டித்தலும் நடுவு நிலைமையுடையோர்க்கு அருள் பண்ணுதலுமாகிய முறைமையில் சோம்புதல் இல்லாதவனாக இருப்பான். இதனை,

*"கொடியோர்த் தெறுதலுஞ் செவ்வியோர்க் களித்தலும்*

*ஒடியா முறையின் மடிவிலை யாகி"* **(புறம்.29:9–10)**

எனப் புறப்பாடல் குறிப்பிடும். ஆட்சியில் அரசர்களுக்கு இருவேறு பொறுப்புகள் இருந்தன. பரிசில் மக்கட்கு மதியம் போலவும், பகைவருக்கு ஞாயிறு போலவும் நீதியைப் பேணி வாழ்ந்தனர். இதனை,

*"தண்கதிர் மதியம் போலவுந் தெறுசுடர்*

*ஒண்கதிர் ஞாயிறு போலவும்*

*மன்னிய பெருமநீ நிலமிசையானே"* **(புறம்.6:27–29)**

என்னும் அடிகள் விளக்கும்.

அரசன் மக்களிடத்துக் காணும் குற்றங்களை அதன் உண்மைத் தன்மை அறிந்து குற்றவாளிகளைத் தண்டித்தான். தண்டிக்கப்பட்டவன் தனது தவறு உணர்ந்தால் அவனுக்கு மனம் இரங்கி தண்டனையைக் குறைத்தான். இதனை,

*"வழிபடு வோரை வல்லறி தீயே*

*பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே*

*நீமெய் கண்ட தீமை காணின்*

*ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி*

*வந்தடி பொருந்தி முந்தை நிற்பிற்*

*றண்டமுந் தணிதிநீ பண்டையிற் பெரிதே"* **(புறம்.10:1–6)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

தன்னிடம் நீதி கேட்டு வந்த இரு முதியவர்களுக்கு முதியவன் வேடத்தில் கரிகாற்சோழன் நீதி வழங்கியதை,

*". . . . . முதியோர்*

*அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவும்"*

**(பொரு.187–188)**

எனப் பொருநராற்றுப்படை குறிப்பிடும். இக்கருத்தை,

***"உரைமுடிவு காணான் இளமையோன் என்ற***

***நரைமுது மக்கள் உவப்ப நரைமுடித்துச்***

***சொல்லான் முறைசெய்தான் சோழன், குலவிச்சை***

***கல்லாமற் பாகம் படும்"[45]***

எனப் பழமொழியும் உணர்த்துவதைக் காணலாம்.

## 2.23.3. வரி வாங்குதல்

அரசன் குடிமக்களைப் பாதுகாப்பதற்கு வரி, திறை போன்றவற்றைப் பெற்றான். வரி மக்களிடம் அவரவர் வருவாய்க்கு ஏற்பப் பெறுவது. அரசன் மக்களிடம் மிகுதியான வரி வாங்கினால் புலவர்கள் எடுத்துச் சொல்லித் திருத்தினர்.

**"அரசு இயங்கப் பொருள் தேவை. அரசிற்கு வருவாய் பல வழிகளில் கிடைத்தது. பொருளின் இன்றியமையாமையை உணர்ந்த வேந்தர் அதனைத் தம் குடிமக்களிடமிருந்து பெற்றனர். நிலவரி, சுங்கவரி முதலான வரிகளின் வாயிலாகப் பொருள் வசூலிக்கப் பட்டது."[46]**

என்பார் அரங்க. இராமலிங்கம்.

அரசன் குடிமக்கள் தாங்கும் அளவிற்கு வரி விதித்தால் அவன் நாடு தழைக்கும். இதனை,

*"அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே*
*கோடியாத்து நாடுபெரிது நந்தும்"* (புறம்.184:5–6)

என்னும் அடிகள் விளக்கும்.

அரசர் தம்முடைய குடிகளின் செல்வம் எல்லாம் குறைபடுவண்ணம் அவரிடத்து வரி வாங்குபவர் இல்லை என்பதை,

*". . . . . . . . . . . . . வளங்கெடப்*
*பொன்னும் கொள்ளார் மன்னர்"* (நற்.226:2–3)

என நற்றிணை உணர்த்தும்.

அரசன் முறைப்படி நெறியறிந்து வரி வாங்காவிடில் அவர்க்கு அரசுமுறை பொறுத்தற்கரிய சுமையாம் என்பதை,

*"குடிபுர விரக்குங் கூரி லாண்மைச்*
*சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே"* (புறம்.75:4–5)

எனப் புறப்பாடல் தெளிவாக்கும்.

நெல்லை அறுத்து யானைக்கு இட்டால் அது வீணாகாது. மாறாக நெல் வயலினுள் யானையை இறக்கிவிடின் அது தானும் உண்ணாமல் பயிரையும் வீணாக்கிவிடும். அதுபோல அரசன் மக்களிடம் வரி பெறும்போது நெறியறிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் நாடு நன்மை பெறும் எனப் பிசிராந்தையார் அறிவுடை நம்பி என்னும் அரசனுக்கு அறிவுறுத்துவதை,

*"காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே*
*மாநிறை வில்லதும் பன்னாட் காகும்*
*நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே*
*வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்*

*அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே*

*கோடி யாத்து நாடுபெரிது நந்தும்"* **(புறம்.184:1–6)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

சுங்க வரியும் ஒரு வருவாயாக அமைந்தது. இது உலகு என்றும் அழைக்கப்பட்டது. ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் பொருள்களைக் கொண்டு செல்லவும் வெளிநாட்டு, உள்நாட்டுப் பொருள்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்யவும் இவ்வரி விதிக்கப்பட்டது.

அரசனால் அமர்த்தப்பட்ட காவலர் நாள்தோறும் சுங்க வரி கொண்டனர் என்பதை,

*"வாலிணர் மடற்றாழை*
*நல்லிறைவன் பொருள்காக்கும்*
*தொல்லிசைத் தொழில்மாக்கள்*
*காய்சினத்த கதிர்ச்செல்வன்*
*தேர்பூண்ட மாஅபோல*
*வைகல்தொறும் அசைவின்றி*
*உல்குசெய . . . . ."* **(பட்.118–124)**

எனப் பட்டினப்பாலை குறிப்பிடும்.

மிளகு மூட்டைகளை ஏற்றிச் செல்ல உல்குவரி விதிக்கப்பட்டதை,

*". . . . . . கழுதைச் சாத்தொடு வழங்கும்*
*உல்குடைப் பெருவழி கவலை காக்கும்"* **(பெரும்.80–81)**

என்னும் அடிகள் விளக்கும்.

### 2.23.3.1. திறை பெறுதல்

அரசன் தோற்ற மன்னர்களிடம் இருந்து பெறுவது திறை.

**"போரில் ஈடுபட்டு இழப்பு ஏற்படுவதை விரும்பாதவர்கள் அருங்கலங்களைத் தந்து பகைமையைக் குறைத்துக் கொள்வர். இவ்வாறு பெறப்படுவது திறை எனப்படும்."[47]**

என்பார் அ. ஆறுமுகம்.

பகை அரசர் தமக்கு விதிக்கப்பட்ட திறைப் பொருளைக் கொடுத்து அரசனுக்குச் சுற்றத்தார் ஆயினர். இதனை,

*". . . . . . . . . . பகைவரும்*
*தந்திறை கொடுத்துத் தமரா யினர்"* **(அகம்.44:1–2)**

என்பார் குடவாயிற் கீரத்தனார்.

சேரலாதன் என்னும் அரசன் பகைவர் பணிந்துகொடுத்த நல்ல அணிகலன்களையும், பொன்னாலாகிய பாவையினையும், வயிரங்களையும் மாந்தை என்னும் ஊரிலுள்ள தன் மனைக்கண் முற்றத்திடமெல்லாம் நிறையும்படி வந்து குவித்தான். இதனை,

*"வலம்படு முரசிற் சேரலாதன்*
*. . . . . . . . . . . . . . . . .*
*நிலம்தினத் துறந்த நிதியத்து அன்ன"* **(அகம்.127:3–10)**

என அகப்பாடல் உணர்த்தும். பாண்டிய நெடுஞ்செழியனுக்குச் சிற்றரசர்கள் நாள்தோறும் செல்வம் மிகும்படி அவனைக் கையால் தொழுது வாழ்த்தி சீரிய கலன்களைத் திறையாகக் கொடுப்பர் என்பதை,

*"நாடொறும் விளங்கக் கைதொழுஉப் பழிச்சி*
*நாடர வந்த விழுக்கலம்"* **(மது.694–695)**

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

அரசனுக்குத் திறை கொடுத்தால் அவன் போர் தொடுக்க மாட்டான் என்பதும் திறைப் பொருளாக அணிகலன்களும் களிறும் கொடுத்தனர். இதனை,

*“நன்கலம் களிற்றொடு நண்ணார் ஏந்தி*
*வந்துதிறை கொடுத்து வணங்கினர் வழிமொழிந்து*
*சென்றீக என்ப ஆயின் வேந்தனும்*
*நிலம்வகுந் துறாஅ ஈண்டிய தானையொடு*
*இன்றே புகுதல் வாய்வது”* **(அகம்.124:1–5)**

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

அரசன் தன் ஆளுமையின் கீழ் எல்லோரையும் கொண்டு வரவும், தான் தலைமைத் தன்மை பெற வேண்டும் எனும் நோக்கத்தில் திறைப்பொருள் பெற்றுள்ளான்.

## 2.23.4. வாய்மை காத்தல்

அரசர்கள் தான் சொன்ன சொல் மாறாமல் வாய்மையாளராக விளங்கியுள்ளனர். நீதி தவறாது ஆட்சி செலுத்திய அரசர்கள் நிலம் தன் இயல்பில் திரிந்து வறட்சியுற்றாலும் சொன்ன சொல் தவறாத வாய்மையாளராக விளங்கினர் என்பதை,

*“நிலம் பெயரினும் நின்சொற் பெயரல்”* **(புறம்.3:14)**

*“நிலந்திறம் பெயருங் காலை யாயினும்*
*கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே”* **(பதிற்.63:6–7)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

மழை பொய்த்தாலும் மன்னர்கள் வாய்மை தவறவில்லை என்பதை,

*“மாரி பொய்க்குவ தாயினும்*
*சேர லாதன் பொய்யல னசையே”* **(பதிற்.18:11–12)**

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

### 2.23.5. கொடுங்கோன்மைக்கு அஞ்சல்

அரசர்கள் கொடுங்கோன்மைக்கு அஞ்சி வாழ்ந்துள்ளனர். அரசவையில் அறம் நிலை கலங்க அறத்திறப் பாட்டில்லாத ஒருவனை வைத்து முறை கலங்கிக் கொடுங்கோல் செய்தல் இகழ்தற்குரிய செயலாக அரசர்கள் கருதினர். இதனை,

*“அறநிலை திரியா வன்பி னவையத்துத்*
*திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து*
*மெலிகோல் செய்தே னாகுக”* (புறம்.71:7–9)

எனப் புறப்பாடல் தெளிவாக்கும்.

*“குடிபழி தூற்றுங் கோலே னாகுக*
. . . . . . . . . . . . . . . . . . . . . .
*இரப்போர்க் கீயா வின்மையா னுறவே”* (புறம்.72:12–18)

என்னும் பாடலடிகளின் மூலம் குடிபழி தூற்றும் கொடுங்கோன்மையும், புலவர் பாடும் புகழ் பெறாமையும், இரவலர்க்கீயாமையும் ஓர் அரசனைக் கீழ்மைப்படுத்துவன என்பதை அறியலாம்.

### 2.23.6. பரிசிலரைப் போற்றுதல்

அரசர்கள் அரசவைக்கு வரும் புலவர்களையும் பாணர், பொருநர் முதலிய கலைஞர்களையும் பரிசில் கொடுத்து போற்றியுள்ளனர்.

#### 2.23.6.1. புலவர் போற்றுதல்

அரசன் தன் ஆதரவு தேடிவந்த புலவரைத் தன் அவைக்களத்துக்கு வரவேற்று வேண்டும் சிறப்புக்களை எல்லாம் செய்தான்.

*“தொழுதுமுன் னிற்குவி ராயிற் பழுதின்*
*றீற்றா விருப்பிற் போற்றுபு நோக்கி”* (பொரு.150–151)

என்னும் பாடலடிகளின் மூலம் அரசன் புலவரைப் பேணும் முறையை அறியலாம்.

அரசர்கள் புலவர்கள் தன்னைப் பாடாது விடுதல் இகழ்ச்சி எனக் கருதினார்கள். இதனை,

*“ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி*
*மாங்குடி மருதன் றலைவ னாக*
*உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்*
*புலவர் பாடாது வரைகவென் னிலவரை”* (புறம்.72:13–16)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

அரசர்கள் புலவர்களைத் தன் நெருங்கிய நண்பராகக் கருதி அவரோடு நெருங்கிப் பழகினர். இதனைக் கோப்பெருஞ்சோழன் – பிசிராந்தையர், பாரி – கபிலர், அதியமான் – ஔவையார் நட்பின் மூலம் அறியலாம்.

### 2.23.6.2. புலவர் தவிர்த்த பிறர்

அரசர்கள் புலவர் தவிர்த்த பாணர், பொருநர், விறலியர் முதலான கலைஞர்களையும் போற்றியுள்ளனர். தொண்டைமான் இளந்திரையன் தன்னை நாடி வரும் பாணனுக்கு ஆடைகளைக் கொடுத்து உடுக்கச் செய்தான். செந்நெல்லின் அரிசியால் ஆக்கிய சோற்றை வெள்ளிக்கலங்களில் பரப்பி உண்பிப்பான் என்பதை,

*“பாசி யன்ன சிதர்வை நீக்கி*
*ஆவி யன்ன அவிர்நூற் கலிங்கம்*
*இரும்பே ரொக்கலொ டொருங்குட னுடீஇக்*
*கொடுவாள் கதுவிய வடுவாழ் நோன்கை*
*வல்லோன் அட்ட பல்லூன் கொழுங்குறை*
*அரிசெத் துணங்கிய பெருஞ்செந் நெல்லின்*
*தெரிகொ ளரிசித் திரளெடும் புழுக்கல்*
*அருங்கடித் தீஞ்சுவை யமுதொடு பிறவும்*
*விருப்புடை மரபிற் மரபுடை யடுசில்*
*மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி”* (பெரும்.468–477)

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் சென்ற பொருநன் பெற்ற பரிசிலை,

*"நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு*
*மணிக்கல னிறைந்த மணநாறு தேறல்*
*பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு*
*மாரி யன்ன வண்மையிற் சொரிந்து"* **(புறம்.397:13–16)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

பெருங்கடுங்கோ தனது வீரத்தைப் பாடிய பாடினிக்கு இழையினையும் பாணனுக்கு வெள்ளி நாரில் கட்டிய பொற்றாமரையினையும் பரிசாக வழங்குவான். இதனை,

*"புறம் பெற்ற வயவேந்தன்*
*மறம் பாடிய பாடினியும்மே*
. . . . . . . . . . . . . . . .
*வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே"* **(புறம்.11:10–18)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

அதியமான் நெடுமான் அஞ்சி ஊருக்கு முன்னிடமான மன்றத்தில் தங்கி இருக்கும் பாண் சுற்றத்தார் துயர் போக்கச் செந்நெல்லை வழங்குவான் என்பதை,

*"முன்னூர்ப் பொதியிற் சேர்ந்த மென்னடை*
*இரும்பே ரொக்கல் பெரும்புலம் பகன்ற*
*அகடுநனை வேங்கை வீகண் டன்ன*
*பகடுதரு செந்நெல் போரொடு நல்கி"* **(புறம்.390:19–22)**

என்னும் அடிகள் தெளிவாக்கும்.

கரிகாற் பெருவளத்தான் பொருநர்க்குப் பிடிகளையும், களிறுகளையும் கன்றுகளுடன் பரிசாகக் கொடுப்பான். அவர்கள் விரும்பிய ஆடை அணிகலன்களைக் கொடுத்து மகிழ்விப்பான் என்பதை,

*“துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு*
*பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்*
*தன்னறி யளவையின் தரத்தர யானும்”* **(பொரு.125–127)**

எனப் பொருநராற்றுப்படை குறிப்பிடும்.

நன்னன் சேய் நன்னன் தன்பால் வரும் கூத்தருக்கு ஆடைகளைக் கொடுத்து உடுக்கச் செய்தும், நாள்தோறும் தசைகளுடன் கூடிய வெண்ணெய் சோற்றைக் கொடுத்து உண்பிக்கச் செய்தும், பல நாள் தங்கினாலும் முதல் நாள் விருப்புடன் விருந்தோம்புவான் என்பதை,

*“உவந்த உள்ளமோ டமர்ந்தினிது நோக்கி*
*இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்*
*எள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ*
*முடுவல் தந்த பைந்நிணத் தடியொடு*
*நெடுவெ ணெல்லின் அரிசிமுட் டாது*
*தலைநாள் அன்ன புகலொடு வழி சிறந்து*
*பல நாள் நிற்பினும் பெறுகுவிர் நில்லாது”* **(மலை.560–566)**

என மலைபடுகடாம் உணர்த்தும்.

## 2.23.7. சமுதாய மேம்பாட்டுக் கடமைகள்

உணவுப் பொருளைப் பெருக்குவதற்கு நிலத்தை வளப்படுத்தல் முறையாகும். இதற்கு ஏரி, குளங்கள் முதலிய நீர் நிலைகளைச் செப்பனிட்டுக் கரையை உயர்த்தி நீரைத் தேக்க வேண்டும். எனவே, நீர் நிலைகளைப் பெருக்குதலும் அரசனின் கடமையாகக் கருதப்பட்டது.

*“நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்*
. . . . . . . . . . . . . . . . . . . . . .
*தள்ளா தோரிவட் டள்ளா தோரே”* **(புறம்.18:18–30)**

*“பொய்கை வாயிற் புணர்பொரு புதலின்”* **(பதிற்.27:9)**

என வரும் அடிகளின் மூலம் பொய்கையிடத்து நீர் கழிவது மிக்குற்று அந்நீரைத் தடுத்தற் பொருட்டு கதவினை அமைத்திருந்தனர் என்பதை அறியலாம்.

ஏரிகட்குப் பிறை வடிவில் கரை அமைக்கும் முறை இருந்ததை,

*"அறையும் பொறையு மணந்த தலைய*
*எண்ணாட் டிங்க ளனைய கொடுங்கரை"* **(புறம்.118:1–2)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## 2.23.8. போர்க்கடமைகள்

அரசர்கள் தன் நாட்டைக் காத்தற்பொருட்டு தன் வீரர்களைப் போருக்கு அனுப்புவதோடு தானும் போரில் பங்கேற்றுள்ளனர். புல்லிய வார்த்தைகளைக் கூறிய சினம் பொருந்திய அரசரை, பாண்டியன் நெடுஞ்செழியன் போரில் முறியடிப்பேன் என்று வஞ்சினம் கூறுவதை,

*"சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ*
*டொருங்கப் படேஎ னாயிற்"* **(புறம்.72:7–9)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

அரசர்கள் போரின் கண்ணும் அறச்செயலைப் பின்பற்றினர் என்பதை,

*"ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*
*தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம்அம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென*
*அறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்"* **(புறம்.9:1–6)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## 2.24. தொகுப்புரை

சங்க இலக்கியங்களில் அந்தணர் என்ற சொல் முதலில் இறைவனைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. தொல்காப்பியத்தில் குறிப்பிடும் அந்தணர்க் குரிய அடையாளங்கள், பார்ப்பார்க்குரிய தொழில்கள் ஆகியவை சங்க இலக்கியத்தில் இருவருக்கும் பொருந்தி வருவதால் அந்தணர், பார்ப்பார் இருவரும் ஒரே குலமரபினர் ஆவர்.

நான்மறை முதல்வர், நான்மறையாளர், மறை காப்பாளர் என அந்தணர் அழைக்கப்படுவதன் மூலம் அந்தணர் வேதத்தோடு ஒட்டிய நிலையைக் காண முடிகிறது.

அந்தணர் உயநயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இரண்டு பிறப்பினை உடையவராக இருந்துள்ளனர். உபநயனத்துக்குப் பின்பு அந்தணர் தம் கடமைகளைத் தவறாது செய்து ஒழுகினர் என்பதை அறிய முடிகிறது. அந்தணர்க்குரிய தொழில்களாக ஓதல், வேட்டல், ஓதுவித்தல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் போன்றவை தொல்காப்பிய உரை குறிப்பிட்டவாறே சங்கப்பாடலடிகளும் குறிப்பிடுகின்றன.

வேள்வி நிகழ்த்தும் அந்தணருக்கு அரசர் அருங்கலன்களைக் கொடுக்கும் போது நீர் வார்த்துக் கொடுக்கும் மரபை அறிய முடிகிறது. அந்தணர்களின் இருப்பிடம் அமைதியாகவும், தூய்மையாகவும், இல்லத்தில் வேத ஒலி கேட்பதாகவும் இருக்கிறது.

பார்ப்பனர் தலைவனுக்குத் தோழனாய் தூது சென்றதோடு, இருபெருவேந்தர்களுக்கிடையே நிகழும் போரை நிறுத்தவும் தூது சென்றுள்ளனர்.

அரசர்கள் பணிந்து ஒழுகும் அளவிற்கு அந்தணர்கள் சமுதாயத்தில் உயர்நிலையில் இருந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. ஒழுக்கத்தில் இருந்து வழுவிய அந்தணர்கள் சிலர் தாழ்நிலையில் இருந்துள்ளனர். அவர்களை வேளாப்பார்ப்பான் என்று அழைத்துள்ளனர்.

முல்லை நிலத் தலைவன் முதல் அரசனாகக் கருதப்பட்டிருக்கிறான். பண்டைத் தமிழகத்தில் அரசமரபில் பிறந்தோர்க்குத் தான் அரசாட்சி என்ற கொள்கை இல்லை. சங்க இலக்கியத்தில் தான் அரசமரபில் பிறந்தோர்க்குத் தான் அரசுரிமை என்ற கொள்கை வலுப்பெற்றது.

அரசர்கள் வாழ்ந்த அரண்மனை கோயில், நகர், கடிமனை எனப் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டன. அரசர்கள் சூதர் இன்னிசை பாடத் துயிலெழுந்துள்ளனர்.

அரசர்க்குரிய அடையாளங்களாக வெண்கொற்றக்குடை, செங்கோல், முரசு ஆகியவை விளங்குகின்றன. வெண் கொற்றக்குடை, முரசு ஆகியவற்றுக்குத் தீங்கு ஏற்படின் அரசனின் வீழ்ச்சிக்கு அடையாளமாகக் கருதப்பட்டன.

அரசன் உலகத்து உயிராகவும், குடிமக்கள் உடலாகவும், அரசன் வழி குடிகளும் இருந்தன. அரசன் நீதி வழங்குவதற்கென்று இயங்கிய இடம் அறங்கூறவையமாகும். அறங்கூறவையத்தில் முதன்மை இடம் பெறுபவர் அமைச்சர் ஆவர்.

நாளவையில் அரசன் இன்பம் துய்த்தல், இரவலர்க்குக் கொடை வழங்குதல் போன்றவை மட்டும் தான் நிகழ்ந்துள்ளன. போர்ச்செய்தி பற்றிப் பேசியதாகக் குறிப்பு இல்லை.

மக்களைப் பாதுகாத்தல், நடுநிலைமையோடு கூடிய முறைமை, வரி வாங்குதல், வாய்மை காத்தல், கொடுங்கோன்மைக்கு அஞ்சல், பரிசிலரைப் போற்றுதல், சமுதாய மேம்பாட்டுக் கடமைகள், போர்க்கடமைகள் ஆகியவை அரசனின் கடமைகளாக விளங்குகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. திருக்குறள் 30.
2. சாமி. சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், ப.169.
3. சாரங்கபாணி, (ப.ஆ.) சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், ப.42.
4. திருக்குறள், 8.
5. செந்தமிழ்ச்செல்வி, கட்டுரை – 'பண்டைத் தமிழ்ச் சொற்கள்,' ப.222.
6. N. Subramaniyan, Sangam Polity, P.264.
7. ந.சி. கந்தையா பிள்ளை, தமிழகம், ப.167.
8. தொல். கற்பு. நூ. எண்.5:15.
9. மேலது, இளம்பூரணர் உரை, ப.103.
10. மேலது, நச்சினார்க்கினியர் உரை, பக்.576–577.
11. தொல். பிறப். நூ. எண்.20.
12. இன்னா.8.
13. முல்லைப்.37–38.
14. மது.468–474, பரி.1:18–20.
15. பொ.வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு மூலமும் உரையும் (முதற்பகுதி) திருமுருகாற்றுப்படை, ப.47.
16. பரி.2:62–64, புறம்.397:20–21, கலித்.36:25–26, பெரும்.314–316.
17. இன்னா.22.
18. ந.மு. வேங்கடசாமி நாட்டார், அகநானூறு களிற்றியானை நிரை, ப.160.
19. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.44.
20. N. Subramaniyan, Op.cit., P.35.
21. சாமி. சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப.6.

22. க.ப. அறவாணன், தமிழ்ச் சமுதாய வரலாறு பண்டைக்காலம், ப.331.

23. P. T. Srinivasa Iyangar, The Tamils, P.10.

24. ஜெ. பொன்முரளி, சங்க இலக்கியம் காட்டும் தமிழர் போர் முறைகள், சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்ட ஆய்வேடு, ப.44.

25. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், முன்னுரை, ப.4.

26. சி. இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் (சங்ககாலம்), ப.42.

27. தொல். புறத். நூ. எண்.30:1–2.

28. தொல்காப்பியம், புறத்திணையியல் உரைவளம், ப.336.

29. சு. இராசாராம், சங்க இலக்கியத்தில் நடைமுறை வாழ்க்கை, ப.68.

30. தொல். மரபு. நூ. எண்.72.

31. தொல். புறத். நூ. எண்.30:10.

32. மேலது, நூ.எண்.11:1.

33. ஏ.வி. சுப்பிரமணியன், புதிய கோணங்களில் சங்க இலக்கியம், ப.35.

34. து. சிவராசன், சங்க இலக்கிய வாழ்வியல், ப.58.

35. மேலது, நூ.எண்.30:9.

36. தேவிபிரசாத் சட்டோபாத்யாயா, இந்தியத் தத்துவ இயலில் நிலைத்திருப்பனவும் அழிந்தனவும், ப.150.

37. சி. ஈ. இராமச்சந்திரன், தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம் – அரசியல் ஆட்சிமுறை, ப.561.

38. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, புறநானூறு, ப.6.

39. அரங்க. இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், ப.214.

40. அ. ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப.237.

41. தொல். புறத். நூ. எண்.17:17.

42. தொல். இளம்பூரணர் உரை, ப.283.

43. அரங்க. இராமலிங்கம், மேலது, ப.216.

44. அ. ஆறுமுகம், மேலது, ப.238.

45. பழமொழி, பா.எண்.6.

46. அரங்க. இராமலிங்கம், மேலது, ப.235.

47. அ. ஆறுமுகம், மேலது, ப.234.

# இயல் – 3

## சங்க இலக்கியத்தில் வணிகர், வேளாளர்

3.0. முன்னுரை

3.1. வணிகம்: சொல் – பொருள்

3.1.1. வணிகர் – வெவ்வேறு பெயர்கள்

3.2. வணிகர் தொழில்

3.3. வணிகர் தெரு

3.4. பாண்டமாற்று

3.4.1. குறிஞ்சி

3.4.2. முல்லை

3.4.3. மருதம்

3.4.4. நெய்தல்

3.4.5. பாலை

3.5. வணிக முறைமை

3.6. வணிகப் பொருட்கள் மூவகை

3.7. வணிகத்தின் பொருட்டுச் செல்லும் சூழல்

3.8. உப்பு வணிகம்

3.8.1. வழிப்பயண உணவு

3.8.2. வழிப்பயணத்தில் குடும்பம்

3.8.3. வழிப்பயணத்தில் ஓய்வு

3.9. பிறநாட்டு வணிகர்

3.9.1. அராபியர்கள்

3.9.2. யவனர்கள்

3.10. இருவழி வணிகம்

3.10.1. நிலவழி வணிகம்

# இயல் – 3

# சங்க இலக்கியத்தில் வணிகர், வேளாளர்

## 3.0. முன்னுரை

ஒரு நாட்டின் தொழில்களிலே உழவும் வணிகமுமே தலைசிறந்தனவாகும். இவ்விரு தொழில்களும் நாட்டின் மேம்பாட்டிற்கு இன்றியமையாததாகிறது.

*"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்*
*செல்வரும் சேர்வது நாடு"*[1]

என வரும் குறளின் மூலம் உழவர், சான்றோர், வணிகர் ஆகிய மூவரும் ஒரு நாட்டின் நன்மைக்கு வேண்டப்படுகின்றனர் என்பதை அறியலாம். பொருள்களைப் பண்டமாற்று செய்து அதனையே தொழிலாகக் கொண்டொழுகும் மாந்தரை வணிகர் என்பர். அவ்வகையில் சங்க இலக்கியத்தில் வரும் வணிகரைப் பற்றி வணிகம் – சொல் பொருள், வணிகர் தொழில், வணிகர் தெரு, பண்டமாற்று, வணிக முறைமை, வணிகப் பொருட்கள் மூவகை, வணிகத்தின் பொருட்டுச் செல்லும் சூழல், உப்பு வுணிகம், பிறநாட்டு வணிகர், இருவழி வணிகம், ஏற்றுமதி இறக்குமதி, அங்காடி, சிறுவணிகர்கள் போன்ற தலைப்புகளிலும், தானியங்களை விளைவித்து உழவுத்தொழில் செய்தோர் வேளாளர் ஆவர். அவ்வகையில் சங்க இலக்கியத்தில் வரும் வேளாளரைப் பற்றி வேளாளர் – சொல் பொருள், இருவகை வேளாளர், வேளாளர் – வைசிய வருணத்தார், வேளிர் – வேளாளர் வேறுபாடு, வேளாளர் தொழில், வேளாளர் இயைபு, விருந்தோம்பல், வேளாளரின் இல்லச்சிறப்பு, வேளாளர் சிறப்பு போன்ற தலைப்புகளிலும் இவ்வியல் ஆய்கிறது.

## 3.1. வணிகம்: சொல் – பொருள்

ஓரிடத்தில் கிடைக்கும் பொருள்களைத் தேவையுள்ளவர்களிடம் கொண்டு சென்று அதற்கு ஈடாக அவர்களிடம் உள்ள பொருள்களைப் பண்டமாற்றாகப் பெறுவது வணிகம் ஆகும்.

**"வாணிகம் என்பது பொருட்கள் சேவைகள் இவற்றை வாங்குவதையும் விற்பதையும் குறிக்கும். ஒரு மனிதனுக்கு மற்றொருவனிடம் உள்ள பொருள் தேவைப்படுகிறது. அதைப் பெற ஆர்வம் ஏற்படுகிறது. அதோடு மற்றோர் செய்யத்தக்க சேவை தேவைப்படுகிறது என்ற அடிப்படை உண்மையே வாணிகத் துக்குத் தோற்றுவாயாகும்."[2]**

எனக் கலைக்களஞ்சியம் தெரிவிக்கின்றது.

**"நிகண்டு, அகராதி ஆகியவை பணி என்ற சொல்லைக் குறிப்பிடுகின்றன. இச்சொல் பண்ணி > பண்ணியம் > வணியம் > வாணியம் > வாணிகம் என மாறியிருக்கலாம்."[3]**

என்பார் ஐ. குமுதினி. அவ்வகையில் வணிகம் தொடக்ககாலத்தில் சமூகத்திற்கு உதவும் நிலையில் அமைந்திருந்தது. அப்போது அது பொது நலனை அடிப்படையாகக் கொண்டிருந்தது. அவ்வணிக முறையில் வணிகம் செய்வோர் தமக்கெனத் தனியாகப் பயனை எதிர்பார்க்கவில்லை.

**"ஓரிடத்தில் கிடைக்காத பொருள்கள், அவைகிடைக்கும் இடத்திலிருந்து கொண்டு வந்து அனைவருக்கும் கிடைக்கச் செய்யும் உபகார முயற்சியே வாணிபமாகும்."[4]**

என்பார் உ.வே. சாமிநாதையர்.

**"பண்டைக் காலத்தில் இந்த வாணிகம், உலக உதவி யாகவே நடைபெற்று வந்தது. பொருளீட்டுவது என்னும் கருத்தால் மட்டும் வணிகர்கள் இதனை நடத்தியதாகத் தெரியவில்லை."[5]**

என்கிறார் தி.மு. பாலசுந்தரனார்.

அத்தகு வணிகம் அப்போது பண்டமாற்று முறையிலேயே நடைபெற்றது.

**"கிடைக்கும் பொருள்களைத் தேவையுள்ளவர்களிடம் அவர்களிடமுள்ள பொருள்களை அதற்கு ஈடாகப் பெறும் பண்டமாற்று முறையே வணிகத்தின் அடிப்படையாயிற்று."[6]**

என்பார் அ. ஆறுமுகம்.

**"அங்காடியிலோ மக்களிடமோ பொருட்களைச் சில்லறை யாகவோ மொத்தமாகவோ வாங்கி அங்காடிக்கு அல்லது மக்களுக்கு, பொருட்களைச் சில்லறையாகவோ மொத்தமாகவோ விற்றலை வாணிகம் என்ற சொல்லுக்கு விளக்கமாகக் கூறலாம். இச்சொல்லுக்கு வியாபாரம், இலாபம், ஊதியம் ஆகிய பொருட்களும் உள்ளன."[7]**

என மதுரைத் தமிழ்ப் பேரகராதி குறிப்பிடுகிறது.

பொதுநலன் அடிப்படையிலிருந்த வணிகம் தமக்கெனத் தனிப்பயன் தரக்கூடிய நிலைக்கு மாறியது. அதிலிருந்து 'இலாபம்' பெறுதல் எனும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டிலங்கியது. இது பிற்கால வளர்ச்சி நிலை. ஆனால், சங்க காலத்தில் இம்முறை காணப்பெறவில்லை.

வணிகர் அறச்செயலையே குறிக்கோளாக உடையவர் என்பதை,

*"புண்ணிய வணிகர்"* **(பரி.திரட்டு.1:25)**

*"இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்*
*அறவிலை வணிகன்"* **(புறம்.134:1–2)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

## 3.1.1. வணிகர் – வெவ்வேறு பெயர்கள்

வணிகன், வாணிகன், விலைஞர், பகர்வர், சாத்து என்று வணிகரைப் பல்வேறு பெயர்களால் அழைத்தனர்.

வணிகர் வாணிகர் என்று அழைக்கப்பட்டதுடன் விலைகூறி விற்பதால் விலைஞர் என அழைக்கப்பட்டதை,

*"சிறியவும் உளஈண்டு; விலைஞர்கை வளையே"* **(குறுந்.117:6)**

எனக் குறுந்தொகை பாடலடி உணர்த்தும்.

தன்னிடம் உள்ள பொருள் இன்னது என இயம்பி விற்பதால் பகர்வர்,

*"அவரை அருந்த மந்தி பகர்வர்"* **(ஐங். 271:1)**

எனவும் அழைக்கப்பட்டனர். பொது நிலையில் வெளியூர்களிலிருந்து வணிகம் செய்ய வருவோரைச் 'சாத்து' என அழைத்தனர்.

## 3.2. வணிகர் தொழில்

*"இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்"*[8]

எனும் நூற்பாவின் உரையில் இளம்பூரணர்,

**"ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல்"**[9]

என அறுவகை தொழில்களைக் குறிப்பிடுவார்.

*"கோக்களைக் காத்தலு மாப்பொரு ளீட்டலு*
*மேர்த்தொழின் மூன்றும் வைசியர் தந்தொழிலே"*[10]

எனப் பிங்கல நிகண்டு வணிகர்க்குரியனவாக மூவகைத் தொழில்களைக் குறிப்பிடுகிறது.

*"வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை"*[11]

எனத் தொல்காப்பியர் கூறுவதன் மூலம் வணிகர்க்கு வாணிகம் செய்யும் தொழிலே முந்தி நிற்பதைக் காணலாம்.

## 3.3. வணிகர் தெரு

வணிகரின் தெருக்கள் செல்வ வளம் உடையனவாகவும், உயர்ந்த மாளிகைகளை உடையனவாகவும் உள்ளன.

வணிகர் உறைந்த தெருக்கள் மதுரையில் இருந்தன. அவ்வணிகர் அறநெறி பிறழாதவர்கள். உயரப் பறக்கும் பருந்துகள் தங்கி இளைப்பாறுதற்கேற்ற உயரமும், பல்வேறு சிற்பங்களால் சிறந்தனவுமான இல்லங்களில் வாழ்ந்தனர் என்பதை,

*"மறநெறி பிழையா தாற்றி னொழுகிக்*
*குறும்பல் குழுவிற் குன்றுகண் டன்ன*
*பருந்திருந் துகக்கும் பன்மா ணல்லிற்*
*பல்வேறு பண்டமோ டூண்மலிந்து கவினி*
*மலையவு நிலத்தவு நீரவும் பிறவும்*
*பல்வேறு திருமேனி முத்தமொடு பொன்கொண்டு*
*சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரு"* **(மது.500–506)**

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

உண்பதற்குரிய பொருள்களும் பூசுவதற்குரிய பொருள்களும் பூண்டு கொள்ளுதற்குரிய பொருள்களும் உடுத்தற்குரிய பொருள்களும் மஞ்சனமாடுதற்குரிய பொருள்களும் மணி பொன் முதலிய மலைபடு பொருள்களும் கடற்படு பொருள்களும் ஆகிய குற்றமற்ற பயன்படு பொருள்களை அகநாட்டினின்றும் பிற நாட்டினின்றும் கொணர்ந்து தருகின்ற தொழிலை உடைய வணிகர்கள் வாழ்கின்ற தெருக்கள் உள்ளன. இதனை,

*". . . . . . . . உண்ணுவ பூசுவ பூண்ப உடுப்பவை*
*மண்ணுவ மணிபொன் மலைய கடல*
*பண்ணிய மாசறு பயந்தரு காருகப்*
*புண்ணிய வணிகர் புனைமறு கொருசார்"* **(பரி.திரட்டு.1:22–25)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

## 3.4. பண்டமாற்று

ஒரு பொருளைக் கொடுத்து அதற்குப் பதிலாக இன்னொரு பொருளைப் பெறுவதைப் பண்டமாற்று எனலாம்.

சங்க காலத்தில் மக்கள் அன்றாடத் தேவையான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலான பொருள்களைக் காசு கொடுத்து வாங்காமல் பண்டமாற்று செய்து கொண்டனர்.

சங்க காலத்தில் இருவேறு நிலைகளில் வணிகம் நடந்தன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் முதலிய நிலமக்கள் பொருள்களைத் தங்களுக்குள்ளே பண்டமாற்றிக் கொள்ளல், வணிகரே வணிகஞ் செய்தல் என இருவேறு நிலைகளில் நடந்தன.

### 3.4.1. குறிஞ்சி

குறிஞ்சி நில மக்கள் தம் நிலத்தில் கிடைத்த பொருள்களைப் பிறநிலத்து மக்களுக்குக் கொடுத்து, தமக்குத் தேவையான பொருள்களைப் பண்டமாற்று செய்து கொண்டனர். யானைக் கோட்டினை விற்று உணவைப் பெறுதலை,

***"கடுங்கண் வேழத்துக் கோடு நொடுத்து உண்ணும்"***

**(குறுந்.100:4)**

எனக் குறுந்தொகைப் பாடலடி உணர்த்தும்.

கள் விலைக்கு ஈடாகப் பகைவரது பசுக்களைப் பற்றிக் கொணர்ந்து கொடுத்தலை,

***"கேளா மன்னர் கடிபுலம் புக்கு***
***நாளா தந்து நறவுநொடை தொலைச்சி"*** **(பெரும்.140–141)**
***"நிறுத்த ஆயந் தலைச்சென் றுண்டு"*** **(புறம்.258:3)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 3.4.2. முல்லை

முல்லை நில மக்கள் பால், தயிரைக் கொடுத்து அதற்கு ஈடாகத் தானியத்தைப் பெற்றுக் கொண்டனர். இடையன் பாலைக் கொடுத்து அதற்கு ஈடாகத் தானியத்தை மாற்றிக் கொண்டதை,

***"பாலொடு வந்து கூழொடு பெயரும்***
***யாடுடை இடையன்"*** **(குறுந்.221:3–4)**

எனக் குறுந்தொகை குறிப்பிடும்.

ஆயர் மகளிர், தயிரையும் மோரையும் கொடுத்து அதற்கு ஈடாகத் தானியத்தைப் பெற்று உணவு சமைத்து உண்டனர். இதனை,

*"நாண்மோர் மாறு நன்மா மேனிச்*
*சிறுகுழை துயில்வருங் காதிற் பணைத்தோட்*
*குறுநெறிக் கொண்ட கூந்த லாய்மக*
*ளளைவிலை யுணவிற் கிளையுட னருந்தி"* (பெரும்.160–163)

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

நெய்விலைக்கு ஈடாக எருமை பெறுதலை,

*"நெய்விலை கட்டிப் பசும்பொன் கொள்ளாள்*
*எருமை நல்லான் கருநாகு பெறூஉம்"* (பெரும்.164–165)

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

### 3.4.3. மருதம்

உழவர் கரும்பையும் அவலையும் கொண்டு வந்து கொடுத்து வறுத்த மான் இறைச்சியையும் மதுவையும் பெற்றனர். இதனை,

*"தீங்கரும்போ டவல்வகுத்தோர்*
*மான்குறையொடு மதுமறுகவுங்"* (பொரு.216–217)

எனப் பொருநராற்றுப்படை குறிப்பிடும்.

### 3.4.4. நெய்தல்

நெய்தல் நில மக்கள் தம் நிலத்தில் விளைந்த உப்பையும், தாம் பிடித்து வந்த மீன்களையும் பிற நில மக்களுக்குக் கொடுத்து, தமக்குத் தேவையான பொருள்களைப் பெற்றனர்.

பண்டமாற்று முறையில் நெல் இன்றியமையாத தானியமாகக் கருதப்பட்டது. உப்பின் மதிப்பு நெல்லின் மதிப்பிற்கு ஈடாக இருந்தது. இதனை,

*"நெல்லும் உப்பும் நேரே; ஊரீர்!*
*கொள்ளீ ரோ. . . . . ."* (அகம்.390:8–9)

*"நெல்லின் நேரே வெண்கல் உப்பு"* (அகம்.140:7)

*"உப்பை மாறி வெண்ணெல் தரீஇய"* (குறுந்.269:5)

*"உமணர் தந்த உப்புநொடை நெல்"* (நற்.254:6)

*"தம்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து*
*பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி*
*நெடுநெறி ஒழுகை நிலவுமணல் நீந்தி*
*அவணுறை முனிந்த ஒக்கலொடு புலம்பெயர்ந்து"*

(நற்.183:1–4)

என்னும் அடிகள் உணர்த்தும்.

பரதவ மகளிர் மீனை விற்று அதற்கு மாறாக வெண்ணெல் வாங்கி வந்ததை,

*"பசுமீன் நொடுத்த வெண்நெல் மாஅ"* (அகம்.340:14)

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

### 3.4.5. பாலை

பாலை நில மக்கள் தம்மிடம் எந்தப்பொருளும் இல்லாததால் வேட்டையாடிக் கொண்டு வந்த யானையின் வெண்ணிறக் கொம்புகளைக் கொண்டு வந்து அதற்கு ஈடாகக் கள்ளைப் பெற்றனர் என்பதை,

*"வரிகிளர் பணைத்தோள், வயிறு அணி திதலை*
*அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பில்*
*மகிழ்நொடை பெறஅ ராகி, நனைகவுள்*
*கான யானை வெண்கோடு சுட்டி*
*மன்றுஓடு புதல்வன் புன்தலை நீவும்*
*அருமுனைப் பாக்கத்து அல்கி, வைகுற"* (அகம்.245:8–13)

என அகப்பாடல் குறிப்பிடும்.

யானை வெண்கோடுகளுடன் கள்ளினை விற்று நெல்லைப் பெற்றனர் என்பதை,

*"........ யானை வெண்கோடு கொண்டு*

*நறவு நொடை நெல்லின்...."* *(அகம்.61:9–10)*

என்னும் அடிகள் தெளிவுறுத்தும்.

இவ்வாறு ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்கள் தம் நிலத்தில் விளைந்த, கிடைத்த பொருள்களைப் பிற நிலத்திற்குக் கொண்டு சென்று விற்று அதற்கு ஈடாக அந்நிலத்து பொருள்களைப் பண்டமாற்றாகப் பெற்று வாழ்ந்தனர். பண்டமாற்றே வாணிகத்தின் அடிப்படையாயிற்று.

### 3.5. வணிகமுறைமை

நடுவுநிலைமை, பொய்யாமை, குற்றம் செய்ய அஞ்சுதல் ஆகியவை வணிக முறைமைகளாகும்.

வணிகர்கள் நடுநிலையோடு பிறர் பொருளையும் தமது போற்பேணி, பொருளை வாங்குவோரிடம் அளவுக்கு மிகுதியாக வாங்காமலும், தாங்கள் கொடுக்கும் பண்டத்தை அளவிற் குறைத்தும் கொடுக்கமாட்டார்கள். பல பண்டங்களையும், அவ்வவற்றின் சரியான விலையைக் கூறி விற்பனை செய்தனர். இதனை,

*"நெடுநுகத்துப் பகல் போல*
*நடுவுநின்ற நன்நெஞ்சினர்*
*வடுவு அஞ்சி வாய்மொழிந்து*
*தமவும் பிறவும் ஒப்ப நாடிக்*
*கொள்வதூஉம் மிகை கொளாது*
*கொடுப்பதூஉம் குறைபடாது*
*பல்பண்டம் பகர்ந்து வீசும்*
*தொல்கொண்டித் துவன்றிருக்கை"* (பட்.206–212)

எனப் பட்டினப்பாலை குறிப்பிடும்.

*"வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்*

*பிறவும் தமபோற் செயின்"*[12]

என வள்ளுவரும் நடுநிலைமையினை வற்புறுத்தியுள்ளார்.

## 3.6. வணிகப் பொருட்கள் மூவகை

மலையிடத்திலிருந்து கிடைக்கும் பொருட்கள், நிலத்திடத்திலிருந்து கிடைக்கும் பொருள்கள், நீரிடத்திலிருந்து கிடைக்கும் பொருட்கள் என வணிகப் பொருட்கள் மூவகைப்படும். இதனை,

*"மலையவும் நிலத்தவும் நீரவும் பிறவும்*

*பல்வேறு திருமணி முத்தமொடு பொன்கொண்டு*

*சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நர்"* **(மது.503–505)**

என மணிகளும் முத்தும் பொன்னும் சிறந்த வணிகப் பொருட்களாய்க் காட்டப்படுகின்றன.

*"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியுங்*

*காலின் வந்த கருங்கறி மூடையும்*

*வடமலைப் பிறந்த மணியும் பொன்னுங்*

*குடமலைப் பிறந்த வாரமு மகிலுந்*

*தென்கடன் முத்துங் குணகடற் றுகிருங்*

*கங்கை வாரியுங் காவிரிப் பயனு*

*மீழத் துணவுங் காழகத் தாக்கமும்"* **(பட்.185–191)**

எனக் குதிரை, மிளகு, வடமலை பிறந்த மணி, பொன், குடமலை பிறந்த ஆரம், அகில், தென்கடல் முத்து, குணகடல் பவளம், கங்கை காவிரி விளை பொருட்கள், ஈழ உணவு, கடார நாட்டு நுகர் பொருட்கள் ஆகியன புகாரில் நிறைந்திருந்ததைக் காட்டுகின்றன.

## 3.7. வணிகத்தின் பொருட்டுச் செல்லும் சூழல்

வணிகர் வெளியூர் செல்லும் பொழுது 'நீவி' எனப்படும் பையில் நிதியை வைத்து எடுத்துச் செல்வர். இதனை,

*". . . . . . . . . . பெரிய*

*நிதியம் சொரிந்த நீவி போல"* **(அகம்.313:10–11)**

என அகப்பாடல் தெரிவிக்கும்.

(நீவி – துணிப்பை; மடிச்சீலை மடியிற் சுற்றிக் கட்டிக் கொள்ளும் நீண்ட வடிவுடைய பணப்பை.)

வணிகர்கள் சரக்குகளைப் பையிலிட்டு எடுத்துச் செல்வர். அவரைக்காய்களை வயிறார உண்ட பெண் குரங்கு, வணிகர் கையாளும் பையைப் போலப் பருத்துக் காணப்பட்டதை,

*"அவரை அருந்த மந்தி பகர்வர்*

*பக்கின் தோன்றும். . . . "* **(ஐங்.271:1–2)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம் (பக்கு – பை).

## 3.8. உப்பு வணிகம்

சங்க காலத்தில் உப்பு வணிகம் சிறப்பாக நடைபெற்றது. உப்பு வணிகர் உமணர் ஆவர். நெய்தல் நிலத்தில் உமணர் என்ற தனி வணிக மரபு உருவானதை அறியலாம். உமணரை,

*"கதழ்கோல் உமணர்"* **(அகம்.140:5)**

*"கொடுங்கோல் உமணர்"* **(அகம்.17:13)**

*"கல்லா உமணர்"* **(அகம்.257:17)**

என அகப்பாடல் குறிப்பிடும்.

உமணர் செருப்பு பொருந்திய காலினையும் பகடு ஓட்டும் கோலினையும், பாதிரிப் பூவைத் தீப்போன்ற அலரியுடன் இடையிடையே கலந்து, தாழம்பூவின் மடலோடு வைத்துக் கட்டிய மாலையையும் சூடியவர்களாகக் காட்சியளிப்பர். இதனை,

*"அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ*
*எரிஇதழ் அலரியொடு இடைபட விரைஇ*
*வெண்தோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணி*
*தோல்புதை சிரற்றுஅடி கோலுடை உமணர்"* **(அகம்.191:1–4)**

என அகப்பாடல் தெரிவிக்கும்.

உமண மகளிர் 'உமட்டியர்'

*"உளரிய லைம்பால் லுமட்டிய ரீன்ற"* **(சிறு.60)**

என அழைக்கப்பட்டனர்.

உமணர் குடியிருப்பைப் பற்றி,

*"முரம்பு தலை மணந்த நிரம்பா இயவின்*
*ஓங்கித் தோன்றும் உமண் பொலி சிறுகுடி"* **(நற்.374:1–2)**

என நற்றிணை உணர்த்தும்.

உமணர் தொழில் கருதி ஓரிடத்தும் நில்லாது தொடர்ந்து சென்று கொண்டே இருக்கும் தன்மையுடையவர்களாதலால் அவர்களின் வாழ்க்கையை 'நிலையா வாழ்க்கை' என நற்றினை உணர்த்தும். இதனை,

*"உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை*
*மலையையுய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கை"* **(நற்.138:1–2)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

உமணர் நெய்தல் நிலப் பரதவரிடம் உப்பைக் கொள்முதல் செய்வர். இதனை,

*"உவர் விளை உப்பின் உழாஅ உழவர்*
*ஒழுகை உமணர் வருபதம் நோக்கி*
*கானல் இட்ட காவற் குப்பை"* **(அகம்.331:1–3)**

என அகப்பாடல் உணர்த்தும்.

நிலவழி வணிகத்திற்கு வண்டிகளையும், கழுதைகளையும் வணிகர்கள் பயன்படுத்தினர்.

உப்புப் பொதிகளை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு உமணர் பாலை வழியில் குழுவாகச் செல்வர். இவர்களை **'உமண்சாத்து'** (அகம்.119:8) என அகநானூறு குறிப்பிடும்.

உப்பு வண்டிகளின் அச்சு முறியாமல் உப்பு வணிகர் இருபுறமும் பார்த்து நடப்பர். இதனை,

***"சில்பத வுணவின் கொள்ளை சாற்றிப்***
***பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி"*** **(பெரும்.64–65)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

உமணர் உப்பு வண்டி பெரும் பாரத்தால் வண்டி அச்சு முறியலாம் என எண்ணிப் பாதுகாப்பாகச் சேம அச்சியினைப் பொருத்தியிருப்பர். இதனை,

***"அவண தறியுந் யாரென வுமணர்***
***கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன"*** **(புறம்.102:4–5)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

உமணர் உப்புப் பொதிகளைச் சுமந்து செல்லக் கழுதைகளையும் பயன்படுத்துவர். இக்கழுதைக் கூட்டத்தைக் **'கணநிரை'** (அகம்.337:6) என அகநானூறு குறிப்பிடும்.

நீண்ட காதுகளையுடைய கழுதைகளைப் பயன்படுத்திய செய்தியை,

***"நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கால் ஏற்றைப்***
***புறம்நிறை பண்டத்துப் பொறை"*** **(அகம்.343:12–13)**

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

மிளகு மூட்டைகளைக் கழுதையின் மீது ஏற்றிச் செல்லும் பொழுது அவை சுளைகளை உடைய பலாப்பழ அளவிற்கு இருந்ததை,

***"தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட***
***சிறுசுளைப் பெரும்பழங் கடுப்ப மிரியற்***

*புணர்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்*

*தணர் செவிக் கழுதை . . . . . .”* (பெரும்.77–80)

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

### 3.8.1. வழிப்பயண உணவு

பாலை நிலத்தில் புலி கொன்று தின்று எஞ்சிய யானையின் ஊனை, ஆறலைக்கும் வீரர்கள் கோலில் கோர்த்துக்கொண்டு செல்வர். அவ்வாறு கொண்டு சென்றது போக எஞ்சிய ஊனை, உமணர் கூட்டம் தீக்கடைக் கோலால் உண்டாக்கிய சிறுதீயில் வதக்கிச் சமைத்து உணவாகக் கொள்வர். இதனை,

*“புலிதொலைத்து உண்ட பெருங்களிற்று ஒழிஊன்*

*கலிகெழு மறவர் காழ்கோத்து ஒழிந்ததை*

*ஞெலிகோற் சிறுதீ மாட்டி, ஒலிதிரைக்*

*கடல்விளை அமிழ்தின் கணம்சால் உமணர்*

*சுனைகொள் தீம்நீர்ச் சோற்று உலைக் கூட்டும்”*

(அகம்.169:3–7)

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 3.8.2. வழிப்பயணத்தில் குடும்பம்

உமட்டியர் வண்டியை ஓட்டிச் செல்ல உமணர் அவர்க்கு எவ்விதத் துன்பமும் நேராமல் காத்துக் கொண்டு உப்பு வாணிகம் செய்ய, அவர் தம் குழந்தைகள் தம் தாய் தந்தையரின் செயல்களில் தம் கவனத்தைச் செலுத்தாது மந்திகளுடன் விளையாடி மகிழ்வர். இதனை,

*“நோன்பகட் டுமண ரொழுகையொடுவந்த*

*மகாஅ ரன்ன மந்தி மடவோர்*

*நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்*

*வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கித்*

*தோற்புற மறைக்கு நல்கூர் நுசுப்பி*

*னுளரிய லைம்பா லுமட்டிய ரீன்ற*

*கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலு யாடுந்"* **(சிறு.55–61)**

எனச் சிறுபாணாற்றுப்படை உணர்த்தும்.

### 3.8.3. வழிப்பயணத்தில் ஓய்வு

உமணர் வண்டிகளில் பூட்டிய காளைகளை அவிழ்த்து மேய விட்டுத் தாமும் சோறட்டு உண்டு இளைப்பாறிச் செல்வர் என்பதை,

*"தெண்கழி விளைந்த வெண்கல் உப்பின்*

*கொள்ளை சாற்றிய கொடுநுக ஒழுகை*

*உரனுடைச் சுவல பகடுபல பரப்பி*

*உமண்உயிர்த்து இறந்த ஒழிகல் அடுப்பின்"* **(அகம்.159:1–4)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 3.9. பிறநாட்டு வணிகர்

தமிழ் வணிகர் அயல்நாடுகளுக்குச் சென்று வணிகம் செய்தது போலவே அயல்நாட்டு வணிகரும் தமிழகத்துக்கு வந்து வணிகம் செய்தனர்.

காவிரிப்பூம்பட்டினத்துத் துறைமுகத்தில் அயல்நாட்டு வணிகர்கள் வெவ்வேறு மொழிகளைப் பேசுபவர்கள் தனியாகத் தங்கியிருந்ததை,

*"மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்*

*புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்*

*முட்டாச் சிறப்பிற் பட்டினம் . . . . "* **(பட்.216–218)**

என்னும் அடிகள் மெய்ப்பிக்கின்றன.

### 3.9.1. அராபியர்கள்

தமிழ் நாட்டிற்கு வந்து முசிறியில் வணிகம் செய்த அராபியர் அந்த இடத்துக்குப் 'பந்தர்' என்று பெயரிட்டிருந்தனர். அரபு மொழியில் பந்தர் என்றால் கடைவீதி என்பது பொருள்.

*"நன்கல வெறுக்கைத் துஞ்சும் பந்தர்"* (பதிற்.55:4)

*"பந்தர் பெயரிய பேரிசை மூதூர்"* (பதிற்.67:2)

*"பந்தர் பயந்த பலர்புகழ் முத்தம்"* (பதிற்.74:2)

என்னும் அடிகளின் மூலம் முசிறி துறைமுகத்துப் பந்தரில் முத்துக்களும் விலையுயர்ந்த நகைகளும் விற்கப்பட்டன என்பதை அறியலாம்.

### 3.9.2. யவனர்கள்

அராபியர்களைப் போலவே, ரோமாபுரியிலிருந்து யவன வணிகர் தமிழகம் வந்து வணிகம் செய்தனர்.

> **"சங்க காலத்தில் தமிழகத்தோடு வாணிகம் செய்து வந்த ஐரோப்பியர் யவனர் எனப்பட்டனர். இச்சொல் 'ஐ ஒனிஸ்' என்னும் கிரேக்கச் சொல்லிருந்து திரிந்து வந்தது. வடமொழிக் கவிதையிற் பெரும்பாலும் கிரேக்கரை உணர்த்தவே இச்சொல் வழங்கு கிறது."[13]**

என்பார் சு. வித்யானந்தன்.

> **"யவனத்துடன் தமிழக வாணிகம் கி.மு. முதல் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரையில் நடந்தது. ரோமாபுரி அரசர்களின் உருவ முத்திரையிடப்பட்ட பழைய நாணயப் புதையல்கள் தமிழ்நாட்டில் சில இடங்களில் சமீபத்தில் அகழ்வாய்வுகளில் கிடைத்துள்ளன. அந்தப் பழங்காசுகள் சங்க காலத்தில் நடந்த தமிழ – யவனர் வாணிகத் தொடர்பினைப் பிளினி, தாலமி முதலான யவனர்களின் நூல்களிலிருந்து அறிகிறோம்."[14]**

என்பார் சி.ஈ. இராமச்சந்திரன்.

யவன நாட்டிலிருந்து வந்த அன்னப்பறவையின் உருவமாக அமைக்கப்பட்ட 'ஓதிம' விளக்கையும் பெண் வடிவமாக அமைத்த 'பாவை' விளக்கையினையும் தமிழர் பயன்படுத்தினர். இதனை,

*"யவனர் இயற்றிய வினைமாண் பாவை*
*கையேந்து ஐயகல். . . . . ."* (நெடு.101–102)

*"பாவை விளக்கிற் பரூஉச்சுட ரழல்"* (முல்லைப்.85)

*". . . . . . . . . . யவனர்*
*ஓதிம விளக்கின் உயர்மிசை"* (பெரும்.315–316)

என்னும் அடிகள் உணர்த்தும்.

யவனர் கப்பல்கள் பொன்னொடு வந்து மிளகொடு திரும்பிச் செல்லுதலை,

*"யவனர் தந்த வினைமாண் நன்கலம்*
*பொன்னொடு வந்து கறியொடு பெயரும்"* (அகம்.149:9–10)

என்னும் அடிகளின் மூலம் யவனரோடு தமிழர் கொண்ட வணிகத் தொடர்பை அறியலாம்.

## 3.10. இருவழி வணிகம்

நிலவழி வணிகம், நீர்வழி வணிகம் என இருவேறு வழிகளில் வணிகர்கள் வணிகம் நடத்தினர்.

### 3.10.1. நிலவழி வணிகம்

நிலவழி வணிகத்திற்கு எருது, கழுதை, வண்டி பயன்படுத்தப்பட்டன. வெளிநாடுகளிலிருந்து அத்திரி என்னும் கோவேறு கழுதைகள் வரவழைக்கப்பட்டன. அவை ஊர்தியாகப் பயன்படுத்தப்பட்டன. இதனை,

*"கொடுநுகம் நுழைந்த கணைக்கால் அத்திரி*
*வடிமணி நெடுந்தேர் பூனை ஏவாது"* (அகம்.350:6–7)

*"கழிச்சுறா எறிந்த புண்தாள் அத்திரி*
*நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந்து"* **(அகம்.120:10–11)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 3.10.1.1. நிலவழி வணிகச் சிக்கல்கள்

பாலை நிலத்தின் வழியே சென்ற வணிகர் கூட்டத்தை ஆறலை கள்வர் வருத்துவர். இதனை,

*"மழைபெயல் மறந்த கழைதிரங்கு இயவில்*
*செல்சாத்து எறியும் பண்புஇல் வாழ்க்கை*
*வல்வில் இளையர் தலைவர்"* **(அகம்.245:5–7)**

என அகப்பாடல் உணர்த்தும்.

### 3.10.1.2. வணிக வரிகள்

மிளகு மூட்டைகளைக் கழுதைகளின் முதுகின் மேல் ஏற்றிக் கொண்டு சென்ற வணிகர் கூட்டம் ஆங்காங்கு வழியில் இருந்த சுங்கச் சாவடிகளில் அரசனுடைய அலுவலர்கள் அவர்களிடமிருந்து சுங்கம் வாங்கினார்கள். இதனை,

*". . . . . . . . . . . . . . கழுதைச் சாத்தொடு வழங்கு*
*முல்குடை பெருவழிக் கவலை காக்கும்*
*வில்லுடை வைப்பின் வியன்காட் டியவின்"* **(பெரும்.80–82)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

### 3.10.2. நீர்வழி வாணிகம்

*"முந்நீர் வழக்கம் மகடூஉ வோடு இல்லை"*[15]

என்னும் தொல்காப்பிய நூற்பா மூலம் அக்காலத்துத் தமிழர் கடலில் செலவு செய்யும் போது மகளிரை அழைத்துச் செல்லுதல் இல்லை என்பதை அறியமுடிகிறது.

வணிகர்கள் வணிகத்திற்கு மிகப்பெரிய கப்பல்களைப் பயன்படுத்தினர் என்பதை,

*“உலகுகிளர்ந்த தன்ன உருகெழு வங்கம்”* (அகம்.255:1)

என்கிறது அகநானூறு.

வெளிநாட்டிலிருந்து பொருள்களை ஏற்றி வந்த கலன் கரையொதுங்க, அதிலிருந்த பொருள்களை மீனவர்கள் எடுத்துச் செல்வதால் பொருள்கள் வழியெங்கும் சிதறிக் கிடந்த காட்சியை,

*“. . . . . . . . . . . . . கூம்பொடு*
*மீப்பாய் களையாது, மிசைப் பரந் தோண்டாது*
*புகாஅர்ப் புகுந்த பெருங்கலந் தகாஅர்*
*இடைப்புலப் பெருவழிச் சொரியும்*
*கடற்பஃ றாரத்த நாடுகிழ வோயே”* (புறம்.30:11–15)

எனப் புறநானூறு குறிப்பிடும்.

பெருங்கடலைக் கடந்து சென்றதால் பழுதுற்ற மரக்கலத்தைப் பழுது போக்கி வலியுடைத்தாக்கும் கடல் வணிகரை,

*“முரசுகடிப் படைய வருந்துறைப் போகிப்*
*பெருங்கட னீந்திய மரம்வலி யுறுக்கும்*
*பண்ணிய விலைஞர்..”* (பதிற்.76:3–5)

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

### 3.10.2.1. கடுங்காற்றினால் மோதப்பெறுதல்

கடுங்காற்றினால் தாக்குண்டு கடலில் செல்லும் கப்பல்கள் சில போது நீரில் மூழ்குவதும் உண்டு. கடலில் மூழ்கும் கப்பல் இருள் சூழும் போது மலை மறைவது போலக் காணப்பட்டது. இதனை,

*“. . . . . . . . . . . . . . தெண்திரைக்*
*கடல்ஆழ் கலத்தின் தோன்றி*
*மாலை மறைய அவர் மணிநெடுங் குன்றே”* (குறுந்.240:5–7)

எனக் குறுந்தொகை விளக்கும்.

கடும் காற்றினால் தாக்குண்டு திண்மையான கயிறுகளையும் அறுத்து, பாய் மரத்தை ஒடித்து நாவாயை அடித்துச் சென்று பாசறைக் கல்லில் மோதி நீர்ச்சுழியில் அகப்பட்ட நாவாயை மதுரைக்காஞ்சி (375–379) குறிப்பிடுகிறது.

## 3.11. ஏற்றுமதி இறக்குமதி

ஏற்றுமதிக்காக மிளகு மூட்டைகள் கரையோரம் அடுக்கி வைக்கப் பட்டிருந்ததும், இறக்குமதிப் பொருள்களாகிய பொற் பரிசங்கள் கலங்களில் இருந்து தோணிகளில் கரை சேர்க்கப்பட்டதும், மலையில் விளைந்த பொருள்களும் கடலில் விளைந்த பொருள்களும் நிறைந்திருந்தமையை,

*"மீனொடுத்து நெற்குவைஇ*
*மிசையம்பியின் மனைமறுக்குந்து*
*மனைக்குவைஇய கறிமூடையாற்*
*கலிச்சும்மைய கரைகலக்குறுந்து*
*கலந்தந்த பொற்பரிசம்*
*கழித்தோணியாற் கரைசேர்க்குந்து*
*மலைத்தாரமுங் கடற்றாரமும்*
*தலைப் பெய்து வருநர்க்கீயும்"* **(புறம்.343:1–8)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

முத்து, சங்குவளை, புளி, உப்பு, மீன், உணக்கல் ஆகியன ஏற்றுமதியானதை,

*"முழங்குகட றந்த விளங்குகதிர் முத்த*
*மரம்போழ்ந் தறுத்த கண்ணே ரிலங்குவளை*
*பரதர் தந்த பல்வேறு கூல*
*மிருங்கழிச் செறுவிற் றீம்புளி வெள்ளுப்புப்*
*பரந்தோங்கு வரைப்பின் வன்கைத் திமிலர்*
*கொழுமீன் குறைஇய துடிக்கட் டுணியல்"* **(மது.315–320)**

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

ஏற்றுமதி இறக்குமதி பொருட்களுக்குச் சுங்கம் வசூலிக்கப்பட்டது. அதற்கான அடையாளக் குறிகள் இடப்பட்டுப் பொருட்கள் மிகுந்த பாதுகாப்புடன் வைக்கப்பட்டதைப் பட்டினப்பாலை **(124–136)** குறிப்பிடும்.

## 3.12. அங்காடி

சங்க காலத்தில் அங்காடிகள் இரண்டு வகை. பகல் முழுவதும் வணிகம் நடக்கும் 'நாளங்காடி'. மாலை தொடங்கி இரவு உறங்கச் செல்லும் வரை வணிகம் நடக்கும் 'அல்லங்காடி' என இருவகை அங்காடிகள் இருந்தன. அங்காடிகள் நியமம் என்ற சொல்லாலும் அழைக்கப்பட்டன.

நல்ல பெரிய இல்லங்கள் கரைகள் போல் அமைய அவற்றிடையே ஆறு கிடந்தாற் போன்றிருக்கும் பெரிய தெருக்களிலே அங்காடிகள் விளங்கின. பண்டங்களைக் கொள்ளும் பொருட்டு வந்த பல்வேறு மொழிகளையும் பேசும் மக்கள் கூட்டத்தின் ஆரவாரத்தினையும், ஓவியத்தில் வரைந்து வைத்தாற் போன்று காணப்படும் பல்வேறு பண்டங்களையும் உடையதாய் விளங்கும் இரண்டாகிய பெரிய அங்காடித் தெரு என்பதை,

***"சில்காற் றிசைக்கும் பல்புழை நல்லில்***
***யாறுகிடந் தன்ன அகல்நெடுந் தெருவில்***

. . . . . . . . . . . . . . . . . . . . . . .

***ஓவக்கண் டன்ன இருபெரு நியமத்து"*** **(மது.358–365)**

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

அங்காடியில் சங்கறுத்து வளையல் செய்து விற்பவரும், மணிகளில் துளையிடுவோரும், சுட்ட பொன் கொண்டு சுடரிழை பண்ணுவோரும், பொன்னை உரைத்துத் தரம் காண்பவர்களும், பட்டு, பருத்தித் துணிகளை விற்பவரும், செம்பு நிறை கொள்ளுவாரும், துணிகளின் ஓரங்கட்குக் குஞ்சம் கட்டுவாரும், பூக்களும் மணப்பொருள்களும் விற்பாரும், கண்ணுள் வினைஞர்களும், மண்பொம்மைகள் செய்பவர்களும் கூடி இருந்தனர் என்பதை மதுரைக்காஞ்சி **(511–518)** குறிப்பிடும்.

### 3.12.1. நாளங்காடி

மதுரை மாநகர நாளங்காடி முகில் கொள்ளுதலால் குறையாதும், ஆறுகள் புகுதலால் மிகாமலும் கிடக்கும் கடல் போன்று அங்கிருக்கும் பண்டங்கள் மக்கள் கொள்ளக் கொள்ளக் குறையாமலும் வணிகர்கள் மேலும் மேலும் கொண்டு வரக் கொண்டு வர நிறைவுறாமலும் இருந்தன. இதனை,

*"மழைகொளக் குழையாது புனல்புக மிகாது*
*கரைபொரு திரங்கு முந்நீர் போலக்*
*கொளக் கொளக் குறையாது தரத்தர மிகாது*
*நாளங்காடி நனந்தலைக் கம்பலை"* **(மது.424–427)**

என மதுரைக்காஞ்சி தெரிவிக்கும்.

### 3.12.2. அல்லங்காடி

அந்திக்காலத்து அங்காடி அல்லங்காடி என்றனர். துறைமுகத்தின்கண் மரக்கலங்களில் வந்து பண்டங்கள் இறங்கும் போதும் அயல்நாட்டு வணிகர் அணிகலன்களை விலைபேசி வாங்கும் போதும் உண்டாகும் பேரொலிகள் பெருங்கடல் ஒதமும் அப்பகுதி வாழ் பறவைகளின் ஓசையும் போன்று எழுந்தது. இதனை,

*"வாலிதை எடுத்த வளிதரு வங்கம்*
*பல்வேறு பண்டம் இழிதரும் பட்டினத்*
*தொல்லென் இமிழிசை மானக் கல்லென*
*நனந்தலை வினைஞர் கலங்கொண்டு மறுகப்*
*பெருங்கடற் குட்டத்துப் புலவுத்திரை யோதம்*
*இருங்கழி மருவிப் பாயப் பெரிதெழுந்து*
*உருகெழு பானாள் வருவன பெயர்தலிற்*

*பல்வேறு புள்ளின் இசையெழுந் தற்றே*

*அல்லங்காடி அழிதரு கம்பலை"* (மது.536–44)

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 3.12.3. தனித்தனி அங்காடிகள்

தனித்தனி அங்காடிகள் இருந்தன. அங்காடிகளில் விற்பனைப் பொருள்களை அடையாளப்படுத்துவதற்காக அடையாளக் கொடி நாட்டப்பெற்றிருந்தது. இதனை,

*"நறவு நடைக் கொடையோடு*

*பிற பிறவும் நனிவிரைஇப்*

*பல்வேறு உருவிற் பதாகை"* (பட்.180–182)

எனப் பட்டினப்பாலை குறிப்பிடும்.

கள் விற்றலைக் குறித்துக் கட்டின கொடிகளும், ஏனைப் பண்டங்கள் விற்றலைக் குறித்துக் கட்டின கொடிகளும் மிகச்செறிந்து, இங்ஙனம் பலவாய் வேறுபட்ட வடிவமும் வண்ணமுமுடைய கொடிகள் இருந்தன என்பதை,

*"கள்ளின் களிநவில் கொடியோடு நன்பல*

*பல்வேறு குழூஉக் கொடிப் பதாகை நிலைஇ"* (மது.373–374)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

உணவுப் பொருள் விற்கும் கடைகளில் துகிற் கொடி பறந்ததை,

*"வாலரிசிப் பலிசிதறிப்*

*பாகுகுத்த பசுமெழுக்கிற்*

*காழூன்றிய கவிகிடுகின்*

*மேலூன்றிய துகிற்கொடியும்"* (பட்.165–168)

எனப் பட்டினப்பாலை மூலம் அறியலாம்.

### 3.13. சிறுவணிகர்கள்

பூ விற்போர், பொன் வணிகர், கூலம் பகர்நர், கூவியர், பாசவர், கலிங்கம் பகர்நர், வலைஞர் போன்ற பல சிறுவணிகர்கள் இருந்துள்ளனர்.

பூ, மாலை, சுண்ணம், வெற்றிலை பாக்கு, சுண்ணாம்பு எனும் பல்வேறு பண்டங்களையும் கையில் ஏந்தித் திரிந்து வாழும் சிறுவணிகர்களை,

*"தீம்புழல் வல்சிக் கழற்கால் மழவர்*
*பூந்தலை முழவின் நோன்றலை கடுப்பப்*
*பிடகை பெய்த கமழ்நறும் பூவினர்*
*பலவகை விரித்த வெதிர்பூங் கோதையர்*
*பலர்தொகுபு இடித்த தாதுகு சுண்ணத்தர்*
*தகைசெய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங்காய்*
*நீடுகொடி இலையினர் கோடுசுடு நூற்றினர்*
*இருதலை வந்த பகைமுனை கடுப்ப*
*இன்னுயிர் அஞ்சி இன்னா வெய்துயிர்த்து*
*ஏங்குவனர் இருந்தவை நீங்கிய பின்றைப்*
*பல்வேறு பண்ணியந் தழீஇத்திரி விலைஞர்"* **(மது. 395–405)**

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

### 3.13.1. பூ விற்போர்

வட்டியில் மலரை வைத்துப் பூ விற்பர் என்பதை,

*"வரிமென் முகைய நுண்கொடி அதிரல்*
*மல்குஅகல் வட்டியர் கொள்வுஇடம் பெறாஅர்*
*விலைஞர், ஒழித்த தலைவேய் கான்மலர்"* **(அகம்.391:2–4)**

என அகப்பாடல் உணர்த்தும்.

பூ விற்கும் பெண்கள் தெருக்கள் தோறும் சென்று கூவிப் பூ விற்றலை,

*"துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி*
*வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்*

*புதுமலர் தெருவுதொறு நுவலும்*

*நொதும லாட்டிக்கு நோமென் நெஞ்சே"* **(நற்.118:8–11)**

என நற்றிணை பூ விற்கும் பெண்டிரை நொதுமலாட்டி என்கிறது.

பூ விற்கும் பெண்டிரை,

*'நீலம் பகர்பவர்'* **(கலித்.66:1)**

எனக் கலித்தொகை கூறுகிறது.

## 3.13.2. பொன் வணிகர்

பொன் விற்கும் வணிகர் பொன் பொடியைப் பவளச் செப்பில் வைத்திருப்பர். இதனை,

*"சினைப்பூங் கோங்கின் நுண்தாது பகர்நர்*

*பவளச் செப்பில் பொன் சொரிந்தன்ன"* **(அகம்.25:10–11)**

என அகப்பாடல் தெரிவிக்கும்.

## 3.13.3. கூலம் பகர்நர்

வரகு, சோளம், துவரை முதலிய கூலங்களை விற்கும் வணிகரை,

*"கூலம் பகர்நர்"* **(பதிற்.13:23)**

என்பர். இவ்வணிகர் புலவராகவும் இருந்தனர் என்பதைக் கூல வணிகன் சீத்தலைச் சாத்தனார் என்னும் சங்கப் புலவர் மூலம் அறியலாம்.

## 3.13.4. கூவியர்

அப்பம் விற்கும் வணிகரைக் 'கூவியர்' என்பர். பாகொடு பிறவும் கலந்த அப்பத்தைப் பாலில் இட்டு விற்பதை,

*"காரகற் கூவியர் பாகொடு பிடித்த*

*விரைசூழ் வட்டம் பால்கலந் தவைபோன்"* **(பெரும்.377–378)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

தேனிறால் போன்ற அடைகளையும் காய்ச்சிய பாகொடு பருப்பும் தேங்காயும் கலந்து உள்ளீடாக வைத்துப் பிடித்த மோதகங்களையும், பாகு கலந்த மாவினையும் விற்பர். இதனை,

*"நல்வரி இறாஅல் புரையு மெல்லடை*
*அயிருருப் புற்ற ஆடமை விசயங்*
*கவவொடு பிடித்த வகையமை மோதகந்*
*தீஞ்சேற்றுக் கூவியர் "* (மது.624–627)

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 3.13.5. பாசவர்

ஆட்டு வணிகரைப் பாசவர் என்பர். இதனை,

*"விருந்து கண் மானா துணீஇய பாசவர்"* (பதிற்.21:9)

*"நெறிபடு மருப்பி னிருங்கண் மூரியொடு*
*வளைதலை மாத்த தாழ்கரும் பாசவர்*
*எஃகா டூனங் கடுப்பமெய் சிதைந்து"* (பதிற்.67:15–17)

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

### 3.13.6. கலிங்கம் பகர்நர்

புடவைகள் விற்கும் வணிகரை,

*"கலிங்கம் பகர்நர்"* (மது.518)

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

### 3.13.7. வலைஞர்

மீன் விற்போரை வலைஞர் என்பர். இதனை,

*"வயமீன் முகந்து*
*கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்"* (மது.225–226)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 3.13.8. பல்வேறு வணிகர்கள்

*"சிறியவும் உளஈண்டு வினைஞர்கை வளையே"* (குறுந்.117:6)

என வளையல் விற்போரையும்,

*"பகர் விரவு நெல்"* (மலை.413)

என நெல் விற்போரையும்,

*"வளைபடுமுத்தம் பரதவர் பகரும்"* (ஐங்.195:1)

என முத்து விற்போரையும்,

*"இருங்கழிச் செறுவின் வெள்ளுப்புப் பகர்நர்"* (மது.117)

என உப்பு விற்போரையும்,

*"கள்ளோர் களிநொடை நுவல"* (மது.66)

எனக் கள் விற்போரையும் போன்ற பல்வேறு சிறு வணிகர்களைப் பற்றிச் சங்க இலக்கியம் மூலம் அறிய முடிகிறது.

## 3.14. வேளாளர்

உழவுத்தொழில் நாட்டிற்கு மிக இன்றியமையாத தொழில் ஆகும். அவ்வுழவுத் தொழிலைச் செய்து மக்களை வாழ்வித்து வரும் பெருந்தகையாளர்கள் வேளாளர் ஆவர். உழவின் இன்றியமையாமையை உணர்ந்தே திருவள்ளுவர் உழவரை,

*"உழுவார் உலக்கத்தார்க்கு ஆணி"*[16]

என்கிறார்.

## 3.15. வேளாளர் – சொல் – பொருள்

ஆற்றோரங்களில் தானியங்களை விளைவித்து வாழ்ந்தோர் வேளாளர் எனப்பட்டனர். வேள் – நிலம், ஆள் – ஆள்பவர். நிலத்தை ஆள்பவர் வேளாளர் ஆவர். வேளாளரைக் குறிக்க வெள்ளாளர் என்னும் சொல்லும் வழங்கப்படுகிறது.

### 3.15.1. வேளாளர் – கங்கை புத்திரர்

வேளாளரது உற்பத்தியினைப் பற்றிச் செவி வழக்காக ஒரு கதை வழங்கி வருகிறது.

சிவபெருமான் அம்மையாரோடு கயிலையில் வீற்றிருக்கையில் ஞாயிரும், திங்களும் தம் திருக்கண்களே எனச் சிவபெருமான் கூற, அதை அம்மையார் சோதிக்க வேண்டித் தமது கரங்களால் சிவபெருமானின் இரு கண்களை மூடினார். உடனே உலகம் இருண்டது கண்டு அஞ்சி அம்மையார் தமது கரங்களை எடுத்து விட்டார். தண்மையடைந்துள்ள அம்மையாரின் கரங்கள் வெம்மையான இறைவரது கண்களில் பொருந்திய காரணத்தால் அம்மையாரின் உடல் எங்கும் வியர்வை நீர் வெள்ளமாகப் பெருகிற்றென்றும், அவ்வாறுண்டான கங்கையினின்றே வேளாளர்கள் தோன்றினார்களென்றும், பிறகு அம்மையார் தம்மால் உலக உயிர்கள் துன்புற்ற காரணத்தினால் தமக்கு நேர்ந்த பாவம் தொலையக் கருதி காஞ்சியில் ஏகம்பவாணரைக் குறித்துத் தவங்கிடந்து பின்னர், தம்முடன் கயிலையிலிருந்தும் போந்த வேளாளரைக் கொண்டு, இறைவர் அளித்த இருநாழி நெல்லினால் உழவு செய்து முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தார் என்றும், இதனால் அவர்கள் கங்கை மக்கள் என்னும் பெயர் படைத்தார்கள் என்பது செவி வழியாக வழங்கி வரும் சொல் வழக்காகும்.

***"கங்கைபெறுங் காராளர் கருவியெழுபது முரைக்க***
***வங்கை பெறும் வளைத்த மும்முலைத் தழும்புமணியமலை***
***மங்கை பெறுந் திருவுருவாய் வந்துறைந்தோர் தமைவலஞ்செய்***
***கங்கைபெறுந் தடவிகடக் களிற்றானைக் கழல் பணிவாம்."***[17]

என்னும் பாடலின் மூலம் கங்கையின் புதல்வர் என்னுஞ் சொல் வழக்கினையும், வேளாளர்களது சிறப்பினையும் அறியலாம்.

**"சிவன் – உமை முயற்சியால், நிலத்திலிருந்து மனிதத்**
**தன்மையும் தெய்வத்தன்மையும் ஒரு சேரப் பொருந்திய ஒருவன்**

**தோன்றினான். அவன் கையில் கலப்பையும் கழுத்தில் மலர் மாலைகளும் காணப்பட்டன; அவன் வழி வந்தோரே வேளாளர்கள்.”[18]**

என்பார் க. கைலாசபதி.

### 3.15.2. வெள்ளத்தைத் தேக்கி உழவுத்தொழில் செய்பவர்

வெள்ளத்தைத் தேக்கி உழவுத்தொழில் செய்பவர் வேளாளர் ஆவர்.

**“வேளாள மரபினன் என்றால் விவசாயம் புரிபவன் என்று பொருள்படும். மருதநிலம் முழுவதும் வேளாண்மைக்கு ஏற்ற பூமி. எனவே அந்நில மக்கள் உழவர்கள் என்று பெயர் பெற்றனர். காராளர், கார்கட்டி, கொண்டல் கட்டி என்று இவ்விவசாய மரபுகள் குறிக்கப்படுகின்றன. பாலை நிலத்தில் நீரைத் தேக்கி உழவுத் தொழில் செய்பவன் கொண்டல் கட்டி மறவன். இவ்விவசாய மரபினர் தொல்காப்பியத்தில் பொதுப்படையாக வேளாளர் என்று குறிக்கப் பட்டுள்ளனர்.”[19]**

என்பார் இர. சின்னசாமி.

**“வேளாளர் என்ற சொல்லின் வளர்ச்சியே வெள்ளாளர் என்பது. ஆற்று வெள்ளத்தை அணைகட்டித் தடுத்துப் பாசனத்துக்குப் பயன்படுத்தி நன்செய் சாகுபடி செய்பவர் வெள்ளாளர். இவர்களிலே காராளர் என்பார் கார் மேகத்தை எதிர்பார்த்துக் காத்திருந்து மழை நீரைக் குளங்குட்டைகளில் தேக்கிப் பாசனத்துக்குப் பயன்படுத்துபவரும், புன்செய் சாகுபடி செய்பவருமே ஆவர். இவர்களைக் கொண்டல் கட்டி (கொண்ட கட்டி) வேளாளர் என்பர்.”[20]**

என்பார் கு. அருணாசலக் கவுண்டர்.

**"உழவுத் தொழிலைச் செய்து வாழ்ந்தோர் வேளாளர் எனப்பட்டனர். வெள்ளத்தை ஆள்பவர் என்னும் பொருள்படும் வெள்ளாளர் என்னும் பெயரே முதல்நிலைத் திரிந்த தொழிற்பெயராக வேளாளர் என மாற்ற முற்றதாகக் கொள்ளலாம்."**[21]

என்பார் வி. கனகசபை பிள்ளை.

### 3.15.3. உலகினர்க்கு ஒப்புரவினால் உதவி புரிபவர்

வேளாண்மை என்பது முதலில் உபகாரம் என்னும் பொருளையே குறித்தது.

***"வேளாண் பெருநெறி"***[22]

***"இருந்து ஓம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்துஓம்பி***
***வேளாண்மை செய்தற் பொருட்டு"***[23]

***"தாள்ஆற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு***
***வேளாண்மை செய்தற் பொருட்டு"***[24]

என வரும் தொல்காப்பிய நூற்பாவிலும் குறளிலும் வேளாண்மை என்பது உபகாரம் என்னும் பொருளில் வந்துள்ளதை அறியலாம்.

**"வேளாண்மை – ஒப்புரவு. வேளாளர் – ஒப்புரவாளர். இதுவே பழந்தமிழ்ப்பொருள். அந்நாளில் வேளாளர் எனும் சொல் உழவர்களைக் குறித்து வரவில்லை. ஏறத்தாழ 9 – ஆம் நூற்றாண்டளவில் உழவர் எனும் பொருளில் வழங்கத் தொடங்கியிருக்கலாம்."**[25]

என ஆர். பூங்குன்றனார் கூறும் கருத்தும் மேற்கூறிய கருத்தைப் புலப்படுத்துவதைக் காணலாம்.

**"உழவுத் தொழிலைச் செய்து வாழ்ந்தோர் 'வேளாளர்' எனப்பட்டனர். 'வேளாளர்' என்னும் சொல் 'ஈகையுடையார்' என்னும் பொருளில் அவர்க்கே வழங்கலாயிற்று. 'வேளாண்மை' என்னும் சொல் இவ்வாறு பண்டு தொட்டு ஈகைப் பொருளில் வழங்குதல், 'வேளாண்மை யுபகாரம் ஈகையும் விளம்பும்' என்னும் பழைய திவாகரச் சூத்திரத்தால் அறியப்படுகிறது."[26]**

என்பார் க.த. திருநாவுக்கரசு.

**"வேள் – விருப்பத்தை உண்டாக்குபவர். யார் சமுதாயத்திற்குப் பணிபுரிந்து மகிழ்வுறச் செய்கின்றாரோ அவர்களே வேளாளராவர். வேளாளர் என்பவர் ஈகையுடையோர். பிறருக்கு உணவுப் பயிரிட்டு உதவி புரிபவருமாவர். வேள் என்றால் மண் என்பது பொருள். மண்ணை ஆள்பவர் வேளாளர் எனவும் போற்றப்பட்டிருக்கலாம்."[27]**

என்பார் கா. மீனாட்சி சுந்தரம்.

உலகினர்க்கு ஒப்புரவினால் உதவி புரிபவர் வேளாளர் ஆவர். ஈகையே வேளாண்மையாயிற்று. ஈகையுடையோர் வேளாளர் ஆயினர்.

***"கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்"*** **(புறம்.74:4)**

***"வேளாண்மை செய்தன கண்"*** **(கலித்.101:46)**

எனச் சங்க இலக்கிய பாடல் அடிகளிலும் வேளாண்மை உபகாரம் என்னும் பொருளில் வந்துள்ளதை அறியலாம். எனவே, வேளாளர் என்பவர் பிறருக்கு உபகாரம் செய்து வாழ்பவர் என்பதை அறியலாம். வேளாளர் அறுவடைக் காலத்தில் இரவலர்க்குக் கொடுக்கும் வழக்கம் இருந்ததை,

***"நெல்லை தருநன் பல்கதிர் பரப்பி"*** **(பொரு.233)**

எனப் பொருநராற்றுப்படை மூலமும் அறியலாம்.

### 3.15.4. ஐவகை வேள்விகளை ஆள்பவர்

மக்கள் வேள்வி, உயிர் வேள்வி, தென்புலத்தார் வேள்வி, கடவுள் வேள்வி, கல்வி வேள்வி என ஐவகை வேள்விகளை ஆள்பவர் வேளாளர். இதனை,

**"ஈகைக்குப் பெயரான வேளாண்மை என்னுஞ்சொல், அவ்வீகைக்குக் கருவியான 'பயிர்த்தொழிலுக்கும்' பெயராயிற்று. பின்னர் அவ்விரண்டு தொழில்களையும் ஆள்வாரான 'வேளாளர்க்கும் அது பெயராயிற்று. இவ்வேளாளர் ஏனை மக்களை நோக்கிச் செய்யும் ஈகையும் விருந்தோம்பலும் 'மக்கள் வேள்வி' (மாநுடயாகம்) எனவும், ஏனைச் சிற்றுயிர்களைப் பாதுகாத்தற் பொருட்டு அவர் மேற்கொண்டு ஒழுகுங் கொல்லா அறம் 'உயிர் வேள்வி' (பூதயாகம்) எனவும், இறந்துபட்ட தம் முன்னோரை நோக்கிச் செய்யும் நன்றிக்கடன் 'தென்புலத்தார் வேள்வி' (பிதிர்யாகம்) எனவும், இவ்வாறு பிறர்க்காற்றும் உதவி பயன்தரற்பொருட்டு இறைவனை நோக்கிச் செய்யும் வழிபாடு 'கடவுள் வேள்வி' (தேவயாகம்) எனவுந் தமக்கும் பிறர்க்கும் அறிவை விளக்கி முயற்சியைப் பயன் பெறுவிக்கும் நூலோதுமுறை 'கலைவேள்வி' (பிரமயாகம்) எனவும் ஆன்றோரால் வகுத்துரைக்கப்பட்டன. எனவே, ஈகையும் ஈகைக்குக் கருவியாவனவும், ஈகையைப் பாராட்டும் நன்றிக்கடனும், ஈகையைப் பயன்படுத்துமாறு வேண்டும் வழிபாடும் 'வேள்வி' என்னும் பெயர்க்கு இயைபுடையவாய் நிற்றல் கண்டு கொள்க. கொல்லா அறம், சிற்றுயிர்கள் தத்தம் உடம்புகளில் நின்று அறிவு விளங்குவதற்கு உதவி செய்வதாகலின், அதுவும் 'வேள்வி' என்னும் பெயர்க்குப் பெரிதும் உரிமை பூண்டு நிற்றல் கண்டு கொள்க. இங்ஙனமாக ஐவகை வேள்விகளையும்**

> **ஆள்பவராகலின், பண்டைத் தமிழரில் உழவுதொழிலாற் சிறந்து நாகரிக வாழ்க்கையை வகுத்த நன்மக்கள் 'வேளாளர்' எனப்படுவாராயினர்."28**

என்பார் மறைமலையடிகள்.

### 3.15.5. பூமிபுத்திரர்கள்

வேளாளர் பூமிபுத்திரர்கள் என்றும் குறிக்கப்பட்டுள்ளனர்.

> **"வேளாளர் பாண்டியர் கல்வெட்டுகளில் பூமி புத்திரர்கள் என்றும் நாட்டு மக்கள் என்றும் குறிக்கப்பட்டுள்ளனர். குற்றமற்ற தொழில் புரிவதையே பேரின்ப வாழ்வாகக் கொண்டிருந்தனர். (திருநாளைப் போவார் புராணம் – 37) சிலர் உழவுத்தொழில் புரிந்தனர். (மானக்கஞ்சாறர், நாவுக்கரசர் போன்றோர் உழவுத்தொழிலில் ஈடுபட்டிருந்தனர்) இவ்வேளாளரின்கீழ் பணிபுரிந்த நிலமற்ற உழவர் குடிமக்கள் பறையர் என்றும், புலையர் என்றும் அழைக்கப்பட்டனர்."29**

என்பார் அ. கிருஷ்ணசாமி.

### 3.15.6. ஆளும் உரிமை பெற்றோர்

வேளாளர் அரசரால் படை, கண்ணி முதலிய சிறப்புக்கள் பெற்றுப் படைத் தலைவராகவும் சிற்றரசராகவும் ஆளும் உரிமை பெற்றிருந்தனர்.

> ***"வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்***
> ***வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே"30***

எனும் நூற்பா அதைப் புலப்படுத்துவதைக் காணலாம்.

> **"வேளாளரென்பார், வேள் – நன்னிலம், ஆளர் – ஆள்பவர் என வகுத்து ஐந்திணையுள் சிறந்த மருத நிலத்தை உழவால் வளம்படுத்தி யாள்பவரென்றும்; வேள் – நன்றி, ஆள் – ஆள்பவர் எனவே நன்றியாளர் எனவும், வேள் – விருப்பம், ஆள் –**

**ஆள்பவர் எனவே பல்லாரும் தம்மை விரும்பச் செய்பவர் எனவும், வேள் – ஆண்மகன், ஆளர் – ஆள்பவர் எனவே சிற்றரசகளாயும், தமிழ் நாட்டு மூவேந்தரிடத்து உரிமைப் பாடுடைய நட்புப் பூண்டிருந்தவரென்றும், குடியரசுக்கு முதன்மை பெற்றிருந்தார் களென்றும், காணியாளராயும், அரசரது படைகட்குத் தலைவ ராயும் இருந்தார்களென்றும், நாட்டாண்மை பெற்றுப் பதினெண் குடிகளையும் தம் வசப்படுத்தி யாண்டவரென்றும், வேள் – ஈகை. ஆளர் – ஆள்பவர், எனவே ஈகையாளர், கொடையாளர் என்றும், வேள் – சத்தியம், ஆளர் – ஆள்பவர், எனவே உண்மை நெறியினின்றும் பிறழா உத்தமரென்றும் பல விதமாகக் கூறுவார்கள்."[31]**

என்பார் வல்லை. பாலசுப்பிரமணியன்.

### 3.15.7. தொழிற்பெயர் சாதிப்பெயராக மாறுதல்

வெள்ளநீரைத் தேக்கி உழவுத்தொழில் செய்த வேளாளர் என்னும் தொழிற்பெயர் பிற்காலத்தில் குறிப்பிட்ட ஒரு சாதிப்பெயராக மாறியது.

**"வெள்ளத்தை ஆள்பவர் வெள்ளாளர் எனக்கருத இடமுண்டு. வெள்ளநீரைப் பாய்ச்சிப் பயிர் செய்ததால் இப்பெயர் வந்திருக்கலாம். எனவே இவர்கள் வெள்ளாளர். இது வேளாளர் – வேளார் என மருவிட வாய்ப்புண்டு. எனவே ஒரு தொழிலின் பெயர் (Professional Name) குடிப்பெயராயிற்று என்று கருதலாம்."[32]**

**"வேளாளர் எனும் சொல் உழவுத் தொழிலைச் செய்து உலகத்தவரைப் பசிப்பிணியிலிருந்து காக்கும் நல்லறத்தைச் செய்வோர்க்கு உரிய பெயர். இப்பெயர் குறிப்பிட்ட ஒரு சாதிப்பெயராய் மாறியது பிற்காலத்தில் தான்."[33]**

எனக் கு. சுவாமிநாதன், ப. பத்மாவதி அவர்கள் கூறும் கருத்து அதைப் புலப்படுத்துவதைக் காணலாம்.

## 3.16. இருவகை வேளாளர்

வேளாளர் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என இருவகைப்படுவர். உழுதுண்ணும் வேளாளர் உழவுத்தொழில் ஒன்றையே செய்தனர். உழுவித்துண்ணும் வேளாளர் உழவுத்தொழிலோடு, அரசரால் படை, கண்ணி முதலிய சிறப்புகள் பெற்றுப் படைத்தலைவராகவும் சிற்றரசராகவும் வாழ்ந்தனர்.

**"வேளாளர் உழுதுண்பார், உழுவித்துண்பார் என இரு பிரிவினராயிருந்தனர். ஓதல், வேட்டல், ஈதல், உழவு, நிரையோம்பல், வாணிகம் ஆகிய அறுதொழிலுடையார். இவருள் உழுதுண்பார் உழுவித்துண்பாரினும் தாழ்ந்தோரெனக் கருதப் பட்டனர் போலும். உழுதுண்பார் வேள்வி செய்தற் குரியல்லராய்ப் பிறர்க்கு வழிபாடு செய்தலும் அவர் தர்மமாயிருந்தது. வேளாளரிற் சிலர் வணிகரிற் சிலரே போல நிரைகாவலுமுடையராயிருந்தனர். வாணிக வாழ்க்கையே பொருள் வருவாய்க்கேதுவாய்க் கொண்டிருந்த வேளாளரும் சிற்சிலராதல் வேண்டும். இவருள் பெரும்பாலோர் உழுதுண்ணும் வேளாளர்.**

**உழுவித்துண்ணும் வேளாளர் பிறரை ஏவி வேலை கொள்ளும் தன்மையர். இவருட்பலர் அரசரால் படைக்கலமும், கண்ணியும் கொடுக்கப் பெற்று பகைவர் மேலும், நாடு காத்தல், சந்து செய்வித்தல் முதலிய தொழில்கள் மேலும் சேனைத் தலைவராய்ச் சென்று பொருள் சம்பாதித்தனர். அரசாற் கொடுக்கப்படும் ஏனாதி, காவிதி முதலிய சிறப்புப் பட்டங்கள் பெறுதற்குரியோரும் இவரே."**[34]

என்பார் ஞா. சா. துரைசாமிப்பிள்ளை.

**"வேளாண் மக்கள் உழுதுண்போர் உழுவித்துண்போர் என இரு வகையினர். இவருள் உழுவித்துண்போர் வேள் எனப்பட்டுக் குறுநில மன்னராகவும் ஆட்சி புரிந்தனர்."[35]**

என்பார் ந.சி. கந்தையாபிள்ளை.

**"உழவர்களில் உழுதுண்ணும் வேளாளரும் உழுவித் துண்ணும் வேளாளரும் என இருவகையினர் உண்டு. இவர்களுள் உழுவித்துண்ணும் வேளாளர் தம்கல்விச் செல்வத்தாலும் பொருட் செல்வத்தாலும் மேம்பாடு அடைந்து மன்னர்களோடு மண உறவு கொள்ளும் நிலை எய்தினர்."[36]**

என்பார் சிவ. சண்முகசுந்தரம்.

**"வேளாளர் உழுதுண்பாரும் உழுவித்துண்பாரும் என இருவகையர். உழுதுண்பாருக்குக் கருங்களமர் காராளர் என்னும் பெயர்களும் உழுவித்துண்பாருக்கு வெண்களமர் வெள்ளாளர் என்னும் பெயர்களும் உரியன. உழவர், களமர், கடையர், வேளாளர் என்பன இரு சாராருக்கும் பொதுவாகும். ஆயினும் ஈற்றுப் பெயர் தவிர ஏனையவெல்லாம் உழுதுண்பார்க்கே சிறப்பாக வழங்கின. அவருக்கு மள்ளர் என்னும் பெயருமுண்டு. அவர் தந்நிலத்தில் உழுவாரும் பிறர் நிலத்தில் உழுவாரும் என இரு நிலைமையர்.**

**உழுவித்துண்பார் பலர் வேள் எனவும் அரசு எனவும் பட்டமெய்தி, அமைச்சரும் படைத்தலைவரும் மண்டலத்தலைவரும் சிற்றரசருமாகி, மூவேந்தர்க்கும் மகட்கொடை நேரும் தகுதியரா யிருந்தனர். கடையெழு வள்ளல்களுட் பெரும்பாலோர் வேளிரே."[37]**

என்பார் ஞா. தேவநேயன்.

மேற்கூறிய சான்றுகளிலிருந்து வேளாளரில் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என இருவகையினர் இருந்தனர் என்பதையும் உழுதுண்ணும் வேளாளர் உழவுத்தொழிலையும் உழுவித்துண்ணும் வேளாளர் உழவுத்தொழிலோடு அரசரால் படைக்கலமும் கண்ணியும் பெற்றுப் படைத்தலைவராகவும் சிற்றரசர்களாகவும் இருந்ததோடு மூவேந்தருக்கும் மகட்கொடை நேரும் தகுதியும் பெற்றிருந்தனர் என்பதையும் அறியலாம்.

## 3.17. வேளாளர் – வைசிய வருணத்தார்

*"தாளாளர் இப்பர் தருமக் கிழவோர்*
*வேளாளர் இளங்கோக்கள் வைசியர் பொதுப்பெயர்"*[38]

எனப் பிங்கல நிகண்டு வைசியர்கட்கு உரிய வேறுபெயர்களைக் குறிப்பிடுகிறது.

வைசியர்கள் மூன்று தொழில்களை உடையவர்கள். இதனை,

*"கோக்களைக் காத்தலும் மாப்பொருளீட்டலும்*
*ஏர்த்தொழில் மூன்றும் வைசியர்தம் தொழிலே"*[39]

என்கிறது பிங்கலநிகண்டு.

**"கோக்களைக் காக்கும் வைசியர்கட்கு கோவைசியர் எனவும், பொருளீட்டும் வைசியர்கட்கு தனவைசியர் எனவும், பூமியில் ஏர்த்தொழில் செய்யும் வைசியர்கட்குப் பூவைசியர் எனவும் பெயர் வழங்கலாயிற்று. இதனால் வேளாளர்கள் பூவைசியர் என்பதாயிற்று."**[40]

என்பார் எஸ். துரைசாமிப்பிள்ளை.

**"ஓதல், வேள்வி செய்தல், ஈதல், வாணிகம், பசுக்காவல், உழவுத்தொழில்"**[41]

எனும் ஆறும் பூவைசியர்க்குரிய தொழில்களாகப் பிங்கல நிகண்டு கூறுகிறது.

**"இந்த ஆறு தொழில்களையுந்தான் அனுட்டித்து வருமாறு அறம் வளர்த்த உமாதேவியானவள் வேளாளர்கட்குப் பணித்**

**தருளினள். ஆகவே வேளாளர்கள் வைசியர்களென்பது இதனாலும் விளங்குகின்றது."[42]**

என்பார் எஸ்.துரைசாமிப்பிள்ளை.

ஆனால், இவை பற்றிச் சங்க இலக்கியத்தில் சான்று எதுவும் இல்லை.

## 3.18. வேளிர் – வேளாளர் வேறுபாடு

வேளிரும் வேளாளரும் ஒருவரா என்பது பற்றி அறிஞர்களிடையே பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன.

**"வேளிர் – தமிழ்நாட்டுப் பழைய குடிகள். இவர்கள் தம் தொழில் வேற்றுமையால் பல பெயருற்றனர் எனவும் கூறும் இவர்களே வேளாளர். இவர்கள் உழுவித்துண்போர் உழுதுண்போர் என இருவகையர். தமிழ்நாட்டில் இவர்கள் வேள் ஆவி, வேள் ஆய், வேள் எவ்வி, வேள்பாரி, வேள் பேகன் எனும் பெயர்களால் அழைக்கப்பட்டனர்."[43]**

என்பார் ஆ. சிங்காரவேலு முதலியார்.

**"குறுநில மன்னர்கள் சிலர் வேளிர் என்று அழைக்கப்பட்டனர். வேளிர் என்போர் வேளாளரில் ஒரு பிரிவினர். வேளாளர்களை உழுது உண்போர் என்றும், உழுவித்து உண்போர் என்றும் இருவகையாக நச்சினார்க்கினியர் பிரிப்பார். (தொல். அகத். நச்சி. உரை. சூ.30) நேரடியாக உடல் உழைப்பில் ஈடுபடாத பெருநில உடைமையாளர்களே உழுவித்து உண்போர் ஆவர். இவர்களே வேளிர் என்று அழைக்கப்பட்ட குறுநில மன்னர்கள். பாரி, காரி, ஓரி போன்றோர் இவ்வேளிர் பிரிவைச் சார்ந்தவர்கள். (Subramanian, op.cit. p.280) வேளிர்களுக்கும், பெருநில மன்னர்களுக்கும் இடையே மண உறவு இருந்திருக்கிறது."[44]**

என்பார் அ. மாரியப்பன்.

**"வேளாளரைத் தொல் பழங்காலத்தவரான வேள் – வேளிர் வழியினர் என்பர் ஆய்வாளர். வேள் என்ற சொல்லுக்கு மண் என்பது பொருள். மண்ணைக் கொண்டு சட்டி பானை வனையும் குயவரை வேளாளர் வேட்கோ என்பர். இவர் போலவே மண்ணைக் கல்லி வயக்கிப் பயிரிடுவோர் வேளிர் – வேளாளர் ஆயினர்."[45]**

என்பார் கு. அருணாசலக் கவுண்டர்.

**"வேளிர் ஆயர் குலத்தவரேயாவர்"[46]**

என்பார் மறைமலையடிகள்.

**"வேளாளர் சூத்திரகுலத்தவர் (சேக்கிழார், பெரிய. இளையான்குடி. 1) எனினும், வேளாளர்க்கு, 'வேந்து வினை இயற்கை'யும் உரியதென்று தொல்காப்பியர் கூறுகிறார். நச்சினார்கினியரும் தொல்காப்பியப் பொருளதிகார உரையில், வேளாளரில் உழுதுண்போர், உழுவித்துண்போர் என இரண்டு வகையினரைக் கூறுகின்றார். உழுவித்துண்போர் சிற்றரசர் களாகவும், வேந்தர்களின் படைத்தலைவர்களாகவும் இருந்த வேளிராவர். முதலில் கங்கையாற்றுப் பகுதியில் வேளாண்மை செய்ததால் கங்கை குலத்தவர் எனப்படுகின்றனர். 'இருபெரு வேந்ததொடு வேளிர்' (மது.55) 'வேந்தரும் வேளிரும்' (பதிற். 49:7, 88:13) என்று இவர்கள் வேந்தர்க்கு அடுத்த நிலையில் பேசப்படுகின்றனர். மூவேந்தரும் வேளிரிடையே பெண்ணெடுக்கும் சிறப்பு வாய்ந்ததால் தான் வேளிர், மூவேந்த வேளாளர் (பதிற்.49:7,88:13) எனச் சிறப்பிக்கப்படுகின்றனர். நாளடைவில் இவர்கள் உழுதுண்ணும் வேளாளரோடு கலந்து விட்டனர். வேளிர் வேளாளரே என்பதற்குச் சான்றாக**

**புதுக்கோட்டைப் பகுதியிலும், பிரான்மலைப் பகுதியிலும் உள்ள வேளாளரில் ஒருசாரார்க்கு இன்றும் வேள், வேளாளர் என்ற பட்டங்கள் வழங்கப்படுகின்றன."[47]**

என்பார் துரை. ஜெகநாதன்.

**"வேளிரையும் வேளாளரையும் பெயரின் ஒரு புடையொப்புமை கண்டு ஒரு குலத்தவராகக் கூறுதல் பொருந்தாது."[48]**

என்பார் ந.மு. வேங்கடசாமி நாட்டார்.

**"வேளாளர் என்னும் சொல் வேளாண்மை செய்பவர் என்னும் பொருளைத் தரும். வேளிர் என்பவர் வேறு. வேளாளர் வேறு. பாரி முதலிய குறுநில மன்னர்களுடைய குடி வேளிர் குடும்பம். உழுதுண்டவர்கள், உழுவித்து உண்டவர்கள் என்னும் இருவகை நிலச்சுவான்தார்களும் வேளாளர்."[49]**

என்பார் ந. சுப்ரமணியன்.

**"வெள்ளாளர் என்னும் சொல் வெள்ளம் என்னும் சொல்லடியாகப் பிறந்தது. கட்டுப்பாடின்றி ஓடும் வெள்ளத்தைத் தேக்கி வாய்க்கால்களின் வழியே செலுத்தி அதை ஆள்பவர் வெள்ளாளர் ஆவர். வெள்ளாளர், வேளாளர், வேளாண்மை போன்ற சொற்கள் நிலத்தை நீர்பாய்ச்சி உழுது பயிரிடும் தொழில் காரணமாகப் பிறந்தவை என்பதைப் புறக்கணித்து, குறுநில மன்னராய் இருந்தமையைக் குறிக்கும் வேளிர் என்னும் சொல்லிலிருந்து பிறந்தவை என்று கூறுவது பொருந்தாது."[50]**

என்பார் அ. முத்துசாமி.

**"வேளாளர்கள் சூத்திரர்கள். அவர்கள் வட இந்தியாவிலுள்ள கங்கைப்பகுதியிலிருந்து தென்னிந்தியாவிற்குக்**

**குடி பெயர்ந்து வந்தனர் என்று சிலர் கூறுவர். வேளாளர்களை வேளிருடன் தொடர்புபடுத்தி, அவர்கள் சிந்து சமவெளிப் பகுதியிலிருந்து தமிழகம் வந்திருக்க வேண்டும் என்று மற்றும் சிலர் கூறுவர். வேளாளர்களை வேள்வியுடனும் வெள்ளத்துடனும் தொடர்பு படுத்திக் கூறுவர். ஆனால் அவை ஏற்றுக்கொள்ள முடியாதவை. வேளாளர்களைக் குறுநில மன்னர்களாகிய வேளிருடன் தொடர்புபடுத்திக் கூறுவதும் முறையற்றது. ஏனெனில் அவ்வேளிர் என்போர் இடையர் குலத்தைச் சார்ந்தவர்."[51]**

என்பார் ஆ. சுவாமிநாதன்.

**"வெள்ளாளர், வேளாண்மை, வேளாளர் என்ற சொற்கள், நிலத்தை உழுது நீர் பாய்ச்சிப் பயிரிடும் தொழில் காரணமாகப் பிறந்தவை என்பதை விட்டுக் குறுநில மன்னராயிருந்தமையைக் குறிக்கும் 'வேளிர்' என்னும் சொல்லிலிருந்து பிறந்தவை என்று கூறுவது அவ்வளவு பொருந்தாது."[52]**

என்பார் மொ. அ. துரை அரங்கசாமி.

**"வேளாளர் ஆதியிற் கங்காதீரங்களில் வாழ்ந்தவராதலின் இவர்கள் தம்மைக் கங்காபுத்திரர், கங்கை வமிசத்தவர் எனக் கூறிக் கொள்வர். இவர்களை ஆண்ட சிற்றரசர் வேளிர் அல்லது வேண்மார் எனப்பட்டனர்."[53]**

என்பார் மு. இராகவையங்கார்.

**"The vel Cheieftains of the sangam age were of the vēlir group, but were not vellalar. For instance, The Āy, Vēls who also belonged to the velir stock were not vellalar but Āys of the Shepherd class,**

**Since Several epigraphs of the Āy vēls, describe them as decendants of yādava origin."[54]**

என்பார் கே. கே. பிள்ளை.

வெள்ளநீரைத் தேக்கி உழவுத்தொழில் செய்தவர் வேளாளர் ஆவர். நாடாண்ட சிற்றரசர்கள் வேளிர் ஆவர் என்று அழைக்கப்பட்டதாகத் தெரிகிறது.

### 3.19. வேளாளர் தொழில்

***"இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்"[55]***

எனும் நூற்பாவில் தொல்காப்பியர் வேளாளர்க்கு அறுவகை தொழில்களைக் குறிப்பிடுகிறார். ஆனால், அவர் அவற்றைக் குறிப்பிடவில்லை. உரையாசிரியர் பலரும் பலவாறாக அவற்றைக் குறிப்பிடுகின்றனர்.

**"உழவு, உழவொழிந்ததொழில், விருந்தோம்பல், பகடு புறந் தருதல், வழிபாடு, வேதமொழிந்தகல்வி"[56]**

என்பார் இளம்பூரணர்.

**"வேதம் ஒழிந்தன ஓதல், ஈதல், உழவு, நிரையோம்பல், வாணிகம், வழிபாடு"[57]**

என்பார் நச்சினார்க்கினியர்.

தெல்காப்பியர் மரபியலில்,

***"வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்லது***
***இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"[58]***

என வேளாண் மாந்தர்க்கு உரிய தொழில் உழவு தவிர பிறவகை இல்லை என்பார்.

***". . . . . . . . எருது தொழில் செய்யா தோட***
***விடுங்கடன் வேளாளர்க் கின்று . . . . ."*** **(பரி.20.62–63)**

என வரும் பாடலடிகளின் மூலம் பகடுவளம் பெருக்கி உழவுப்பணிக்கு எருதுகளைப் பயன்படுத்தும் வேளாளரின் கடமையை அறியலாம்.

## 3.20. வேளாளர் இயல்பு

வேளாளர் கொலை கடிந்தும் களவு நீக்கியும் அமரப் பேணியும் ஆவுதி அருத்தியும் ஆநிரை காத்தும் அந்தணர் புகழ் பரப்பியும் விருந்தினர் பேணியும் இல்லை என்று வந்தவருக்கு வாரி வழங்கியும் புண்ணியம் முட்டாத் தண்ணிழல் வாழ்க்கையை வாழ்ந்தனர். இதனை

*"கொலைகடிந்துங் களவுநீக்கியு*
*மமரர்ப் பேணியு மாவுதி யருத்தியு*
*நல்லா னொடு பகடோம்பியு"* (பட்.199–201)

எனப் பட்டினப்பாலை குறிப்பிடும்.

## 3.21. விருந்தோம்பல்

வேளாளரின் சிறந்த பண்பு விருந்தோம்பல் ஆகும். அதனாலேயே உழவன் வேளாளன் எனப்பெற்றான்.

*"உரன்கெழு நோன்பகட் டுழவர் தங்கை*
*பிடிக்கை யன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்*
*தொடிக்கை மகடூட மகமுறை தடுப்ப"* (சிறு.190–192)

எனச் சிறுபாணாற்றுப்படை மூலம் உழவரின் விருந்தோம்பல் சிறப்பை அறியலாம்.

*"வேளாளன் என்பான் விருந்திருக்க வுண்ணாதான்"*[59]

எனத் திரிகடுகப் பாடலும் வேளாளரின் விருந்தோம்பல் சிறப்பை உணர்த்துவதைக் காணலாம். தாம் விளைவிக்கும் உணவுப் பொருள்களை ஏனைய மக்களுக்குக் கொடுத்து உதவினர். இதனை,

*"விளைக வயலே, வருக இரவலர்"* (ஐங்.2:2)

என ஐங்குறுநூறு குறிப்பிடும்.

நெல் அறுப்பவர் கடைமடையிடத்தே வாளை மீனைப் பிடித்து வருவர். உழுபவர் கொழுமுனையைத் தடுத்து நிற்கும் ஆமைகளைப் பிடித்துக் கொணர்வர். கரும்பறுப்பவர் கரும்பினின்று தேன் எடுத்துக் கொணர்வர். துறையிலே நீர் முகக்க

வரும் பெண்கள் செங்கழுநீர்ப் பூவினைப் பறித்துச் செல்வர். இவற்றை எல்லாம் வேளாண் மக்கள் வறண்ட நாட்டிலிருந்து வரும் தம் சுற்றத்தாருக்கு விருப்பமுடன் விருந்தாகக் கொடுத்து மகிழ்வர். இதனை,

*"பெருவிறல் யாணர்த் தாகி யரிநர்*
*கீழ்மடைக் கொண்ட வாளையு முழவர்*
*படைமிளிர்ந் திட்ட யாமையு மறைநர்*
*கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை*
*நீர்தரு மகளிர் குற்ற குவளையும்*
*வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரும்*
*மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந"* **(புறம். 42:12–18)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

தம்மிடத்து வந்தவர்க்கு உண்ணவும் கொள்ளவும் தக்க வரகு இல்லையாயினும், இல்லையென்னாது தினைக் கதிரிடத்தே விதைக்கென விடப்பட்ட திணையைக் கொணர்ந்தேனும் குற்றி உணவாக்கித் தரும் இயல்பினள் வேளாண் பெருமகள் என்பதை,

*"சென்றதற் கொண்டு மனையோள் விரும்பி*
*வரகுந் தினையு முள்ளவை யெல்லாம்*
*இரவன் மாக்க ளுணக்கொளத் தீர்ந்தெனக்*
*குறித்துமா றெதிர்ப்பை பெறாஅ மையிற்*
*குரலுணங்கு விதைத்தினை யுரல்வாய்ப்பெய்து*
*சிறிது புறப்பட்டனன் றேவில டன்னூர்"* **(புறம்.338:8–13)**

என்னும் அடிகள் சுட்டும்.

இரந்தோருடைய வெறுங்கலங்கள் நிறையப் பொருள்களை நல்கினர். கள்ளையும் விருந்தினர்க்கு வழங்குவது உண்டு. இதனை மலைபடுகடாம் (454–470) சிறுபாணாற்றுப்படை (177–195) மூலம் அறியலாம்.

உணவுப் பொருள்களை உலகத்திற்கு வழங்கி உயிர்களைப் புரக்கின்ற பெருந்தொழிலுக்கு அடிநிலையாக இருப்பவர்கள் வேளாளர்கள். இதனை,

*"உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே*
*உண்டி முதற்றே யுணவின் பிண்டம்"* **(புறம்.18:19–20)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

உழவர்கள் தம் வீட்டிற்கு வந்த பாணனுக்கும், அவன் தன் சுற்றத்தாருக்கும், தம் உழைப்பில் விளைந்த வெள்ளிய நெற்சோற்றைத் தம் மனையிடத்தே வாழும் கோழிப் பெடையினாற் சமைத்த பொறியலுடனே வழங்கி, அவர்தம் பசிக் கொடுமையை விரட்டினர் என்பதை,

*"தொல்பசி யறியாத் துளங்கா விருக்கை*
*மல்லர் பேரூர் மடியின் மடியா*
*வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி*
*மனைவா ழளகின் வாட்டொடும் பெறுகுவர்"* **(பெரும்.253–256)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

கூத்தர்களுக்கு முள்ளை நீக்கி ஆக்கிய வெள்ளிய தசையோடே கலந்த சோற்றை அளித்து அவர் தம் வழிநடை வருத்தம் நீக்கிய செய்தியை,

*"முள்ளரித் தியற்றிய வெள்ளரி வெண்சோறு*
*வண்டுபடக் கமழுந் தேம்பாய் கண்ணித்*
*திண்டேர் நன்னற்கு மயினி சான்மெனக்*
*கண்டோர் மருளக் கடும்புட னருந்தி"* **(மலை.465–468)**

என மலைபடுகடாம் தெளிவுறுத்தும்.

உழவர்கள் தம்மை நாடி வந்தோர்க்குப் பழங்களையும் இனிய பல பண்டங்களையும், பல கிழங்கு வகைகளையும் தந்து மகிழ்வர் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை **(355–362)** மூலம் அறியலாம்.

## 3.22. வேளாளரின் இல்லச்சிறப்பு

செம்பொன் மலையை ஒத்துக் குவிந்து கிடக்கும் செந்நெல்லாகிய புதுவருவாயினை உடைய மருதவயல் சூழ்ந்த இடங்களில் பழைய உணவுப் பண்டங்களுடன் நெற்குதிர்கள் ஏணிகள் எட்டாத அளவிற்கு உயரமாக அடுக்கி வைத்து உயர்ந்து விளங்கும் நல்ல இல்லம் என வேளாளர்களின் இல்ல வளத்தை,

*"குடகாற் றெறிந்த குப்பை வடபாற்*
*செம்பொன் மலையிற் சிறப்பத் தோன்றுந்*
*தண்பணை தழீஇய தளரா விருக்கைப்*
*பகட்டா வீன்ற கொடுநடைக் குழவிக்*
*கவைத்தாம்பு தொடுத்த காழூன் றல்கு*
*லேணி யெய்தா நீணெடு மார்பின்*
*முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்*
*குமரி மூத்த கூடோங்கு நல்லிற்"* **(பெரும்.240–247)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

வேளாளர்களது மனை முன்றில்களில் மஞ்சள் விளைந்திருக்கும். சுற்றிலும் பூந்தோட்டங்கள் நிறைந்திருக்கும். இதனை,

*"தண்டலை யுழவர் தனிமனைச் சேப்பிற்"* **(பெரும்.355)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## 3.23. வேளாளர் சிறப்பு

வேளாளர்களில் பலர் கல்வி அறிவு பெற்று இலக்கண, இலக்கியப் புலமையோடு விளங்கினர்.

> **"சமயக்குரவர்களாகிய நால்வரில் அப்பர் சுவாமிகள் வேளாளர் ஆவர். அறுபத்துமூன்று நாயன்மார்களில் இளையான் குடி மாறநாயனார், விறன்மிண்ட நாயனார், மானக்கஞ்சாற நாயனார், அரிவட்டாய நாயனார், திருநாவுக்கரசு நாயனார்,**

**ஏயர்கோன் கலிக்காம நாயனார், மூர்க்க நாயனார், சாக்கிய நாயனார், சத்தி நாயனார், வாயிலார் நாயனார், முனையரு நாயனார், செருத்துணை நாயனார், கோட்புலி நாயனார் ஆகியோர் வேளாளர் ஆவர்.**

**பட்டணத்துப் பிள்ளையார், தாயுமானவர், சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் ஆகிய மூவரும் வேளாள மரபினரே ஆவர்.**

**இராமாயணம், பாரதம் ஆகிய இரு நூல்களையும் இயற்றியவர்கள் வேளாள மரபினர்களாகிய கம்பரும் நல்லாப் பிள்ளையுமாவர். இராமாயணத்தை நாடகமாய்ப் பாடிய அருணாசலக் கவிராயரும் வேளாண் மரபினரே. பெரியபுராணம் எழுதிய சேக்கிழார் சுவாமிகளும் அம்மரபினரே. புகழேந்தியைப் போன்ற பல சிறு நூலாசிரியர்களில் பெரும்பாலோர் வேளாள மரபினரே யாவர்.**

**ஆறுமுக நாவலர், சபாபதி நாவலர் ஆகிய பெரும் பண்டிதர்களும் யாழ்ப்பாணத்தினராயினும் வேளாண் குடியினரே.**

**பல்துறையிலும் பல அரிய நூல்களை இயற்றியுள்ள குமரகுருபர ஸ்வாமிகள் வேளாளரே யாவர்.”**[60]

என்பார் எஸ். துரைசாமிப்பிள்ளை.

## 3.24. தொகுப்புரை

தொடக்கக்காலத்தில் வணிகம் சமூகத்திற்கு உதவும் நிலையில் பொது நலனை அடிப்படையாகக் கொண்டிருந்தது. தமக்கெனத் தனிப்பயனை எதிர்பார்க்கவில்லை.

பிற்காலத்தில் தமக்கெனத் தனிப்பயன் தரக்கூடிய நிலைக்கு மாறியது. அதிலிருந்து ‘இலாபம்’ பெறுதல் எனும் நோக்கத்தை அடிப்படையாகக்

கொண்டிலங்கியது. ஆனால், சங்க இலக்கியத்தில் இம்முறை காணப்பெறவில்லை. வணிகன், வாணிகன். விலைஞர், பகர்வர், சாத்து என்பன வணிகரைக் குறிக்கும் பல பெயர்கள் ஆகும்.

ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல் முதலிய அறுவகை தொழில்களை வணிகர்க்குரியனவாகக் குறிப்பிட்டாலும் வாணிகம் செய்யும் தொழிலே முந்தி நிற்பதைக் காணலாம். வணிகரின் தெருக்கள் செல்வ வளம் உடையதாகவும், உயர்ந்த மாளிகைகளை உடையதாகவும் காணப்பட்டன.

சங்க காலத்தில் ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்கள் அன்றாடத் தேவையான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலான பொருள்களைக் காசுகொடுத்து வாங்காமல் பண்டமாற்று செய்து கொண்டனர். இதுவே பின்னாளில் வணிகத்திற்குத் தோற்றுவாயிற்று.

நடுவுநிலைமை, பொய்யாமை, குற்றம் செய்ய அஞ்சுதல் ஆகியவை வணிக முறைமைகளாகும். வணிகர் வெளியூர் செல்லும் போது 'நீவி' எனப்படும் பையில் நிதியை வைத்து எடுத்துச் சென்றுள்ளனர்.

உப்பு விற்கும் வணிகர் உமணர் ஆவர். நெய்தல் நிலத்தில் உமணர் என்ற தனி வணிக மரபு உருவானதை அறியமுடிகிறது. தமிழ் வணிகர் அயல்நாடுகளுக்குச் சென்ற வணிகம் செய்தது போலவே அயல்நாட்டு வணிகரும் தமிழகத்துக்கு வந்து வணிகம் செய்ததை அராபிய வணிகர், யவன வணிகர் மூலம் அறியலாம்.

நிலவழி வணிகம், நீர்வழி வணிகம் என இரு வழிகளில் வணிகம் நடைபெற்றன. நிலவழி வணிகத்தில் வணிகர்கள் பாலை நில ஆறலை கள்வர்களால் துன்புற்றனர்.

நீர்வழி வணிகத்தில் வணிகர்கள் காற்றினாலும், புயலினாலும் துன்பம் நேர்ந்த போதும் அஞ்சாமையுடன் கடலில் நாவாய்களைச் செலுத்தி வணிகம் செய்தனர்.

சங்க காலத்தில் நாளங்காடி, அல்லங்காடி என இருவகை அங்காடிகள் இருந்தன. அங்காடிகளில் விற்பனைப் பொருள்களை அடையாளப்படுத்துவதற்காக அடையாளக் கொடி நாட்டப்பெற்றிருந்தது.

பூ விற்போர், பொன் வணிகர், கூலம் பகர்நர், கூவியர், பாசவர், கலிங்கம் பகர்நர், வலைஞர் போன்ற பல சிறு வணிகர்கள் சங்க காலத்தில் இருந்துள்ளனர்.

நீரைத் தேக்கித் தானியங்களை விளைவித்து உழவுத்தொழில் செய்தோர் வேளாளர் ஆவர். வேளாளர் தொன்மக் கதையின் மூலம் கங்கை மக்கள் என்பதை அறிய முடிகிறது.

உலகினர்க்கு ஒப்புரவினால் உதவி புரிபவர் வேளாளர் ஆவர். ஈகையே வேளாண்மையாயிற்று. ஈகையுடையோர் வேளாளர் ஆயினர். வேளாளர் பாண்டியர் கல்வெட்டுகளில் பூமிபுத்திரர்கள் என்றும் குறிக்கப்பட்டுள்ளனர்.

வெள்ளத்தை ஆள்பவர் வெள்ளாளர். இது வேளாளர் – வேளார் – என மருவி ஒரு தொழிலின் பெயர் சாதிப்பெயராக மாறியதை அறிய முடிகிறது. வேளாளரில் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என இருவகையினர் இருந்தனர். உழுதுண்ணும் வேளாளர் உழவுத்தொழில் ஒன்றையே செய்தனர். உழுவித்துண்ணும் வேளாளர் உழவுத் தொழிலோடு அரசரால் படை, கண்ணி முதலிய சிறப்புகள் பெற்று படைத் தலைவராகவும் சிற்றரசர்களாகவும் இருந்ததோடு மூவேந்தருக்கும் மகட்கொடை நேரும் தகுதியும் பெற்றிருந்தனர் என்பதை அறியலாம்.

வேளாளரை வைசிய வருணத்தாராக எஸ். துரைசாமிப்பிள்ளை அவர்கள் குறிப்பிடுவார். ஆனால், இவை பற்றிச் சங்க இலக்கியத்தில் சான்று எதுவும் இல்லை.

வேளாளர்க்கு உரியனவாக அறுவகைத் தொழில்களைக் குறிப்பிட்டாலும் முதன்மை பெறுவது உழவுத்தொழில் ஆகும். வேளாளர்கள் கொலை கடிந்தும், களவு நீக்கியும், பெரியவர்களைப் போற்றியும், ஆநிரை காத்தும், அந்தணர் புகழ் பரப்பியும், விருந்தினரைப் பேணியும் வாழ்ந்துள்ளனர். வேளாளர் தம்மிடத்து வந்தவர்க்கு

உண்ண உணவு இல்லையாயினும் தினைக் கதிரிடத்தே விதைக்கென விடப்பட்ட தினையை எடுத்து வந்து குற்றி உணவாக்கி தருவர் என்பதன் மூலம் அவர்களின் விருந்தோம்பல் சிறப்பை அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. திருக்குறள். 731.
2. கலைக்களஞ்சியம், ப.196 (தொகுதி-9).
3. குமுதினி, தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் இலக்கணம் & மொழியியல், ப.78.
4. உ.வே. சாமிநாதையர், தன வணிகன் பொங்கல் மலர், 'தமிழ் நாட்டு வணிகர், கட்டுரை, ப.1.
5. தி.மு. பாலசுந்தரனார், சங்கநூற் கட்டுரைகள், பக்.68–69.
6. அ. ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப.127.
7. இ.மா. கோபால கிருஷ்ணன், மதுரைத் தமிழ்ப் பேரகராதி, ப.78.
8. தொல். புறத். நூ. எண்.16.
9. மேலது, இளம்பூரணர் உரை, ப.126.
10. பிங்கல நிகண்டு, சூ.774.
11. தொல். மரபு. நூ.எண். 78.
12. திருக்குறள். 120.
13. சு. வித்யானந்தன், தமிழர் சால்பு, ப.235.
14. சி.ஈ. இராமச்சந்திரன், சங்க கால வரலாறு, பக்.194–195.
15. தொல். அகத். நூ.எண்.37.
16. திருக்குறள். 1032.
17. பெரியபுராணம், திருகுறிப்புத் தொண்ட நாயனார் புராணம், பா.எண்.1.
18. க. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.189.
19. இர. சின்னசாமி, தமிழகம் நேற்று – இன்று – நாளை, பக்.38–39.
20. கு. அருணாசலக்கவுண்டர், பண்டைத் தமிழக வேளாண்மை வணிக வாரியங்கள், ப.14.
21. வி. கனகசபை பிள்ளை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், ப.43.

22. தொல். களவு. நூ. எண்.24:23.
23. திருக்குறள். 81.
24. மேலது, 212.
25. ஆர். பூங்குன்றன், வரலாற்றில் வேளாண்குடிகள், கட்டுரை 'வேளிர் யார்?' ப.104.
26. க.த. திருநாவுக்கரசு, தமிழர் நாகரிக வரலாறு, பக்.166–167.
27. கா. மீனாட்சி சுந்தரம், தமிழ்நாட்டு வரலாறு சங்க காலம் – வாழ்வியல், கட்டுரை – 'சமுதாயம்', ப.70.
28. மறைமலையடிகள், வேளாளர் நாகரிகம், பக். 3–4.
29. அ. கிருஷ்ணசாமி, தமிழ்நாட்டு வரலாறு, பக்.10–11.
30. தொல். மரபு, நூ. எண்.82.
31. வல்லை. பாலசுப்பிரமணியன், வேளாளரது தோற்றமும் அவர் தம் வரலாறும், பக்.16–17.
32. கு. சுவாமிநாதன், வரலாற்றில் வேளாண்குடிகள், கட்டுரை, 'வேளாண் குடிகளும் முற்காலச் சோழர்களும்,' பக்.80–81.
33. ப. பத்மாவதி, வரலாற்றில் வேளாண் குடிகள், கட்டுரை – 'வேளாளர் குடிப்பெயர்ச்சி,' ப.29.
34. ஞா.சா. துரைசாமிப்பிள்ளை, தமிழ் இலக்கியம் சங்க காலம், ப.37.
35. ந.சி. கந்தையாபிள்ளை, தமிழ் இந்தியா, ப.47.
36. சிவ. சண்முகசுந்தரம், சங்ககாலச் சமயமும் சமுதாயமும், ப.89.
37. ஞா. தேவநேயன், பழந்தமிழாட்சி, பக்.122–123.
38. பிங்கல நிகண்டு, சூ.773.
39. மேலது, சூ.774.
40. எஸ். துரைசாமிப்பிள்ளை, வேளாள மரபிலக்கணச்சுருக்கம், ப.9.
41. பிங்கல நிகண்டு, சூ.778.
42. எஸ். துரைசாமிப்பிள்ளை, மேலது, ப.10.

43. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.1515.

44. அ. மாரியப்பன், தமிழக வரலாறு ஒரு சமூக பொருளாதார கண்ணோட்டம், ப.19.

45. கு. அருணாசலக் கவுண்டர், மேலது, ப.14.

46. மறைமலையடிகள், சாதி வேற்றுமையும் போலிச் சைவரும், ப.17.

47. துரை. ஜெகநாதன், ஆரிய திராவிடரும் அழிந்து போன சங்கங்களும், பக்.28–29.

48. ந.மு. வேங்கடசாமி நாட்டார், வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி, ப.20.

49. ந. சுப்பிரமணியன், தமிழக வரலாறு, கி.பி.1565 வரை, பக்.265–266.

50. அ. முத்துசாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப.34.

51. ஆ. சுவாமிநாதன், தமிழ்நாட்டு சமுதாய பண்பாட்டு வரலாறு, ப.15.

52. மொ.அ. துரை அரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள் (இலக்கியச் சிறப்புப்பெயர்களும் குடி பற்றிய சிறப்புப்பெயர்களும்) ப.313.

53. மு. இராகவையங்கார். வேளிர் வரலாறு, ப.21.

54. K.K. Pillai, A Social History of the Tamils, P.233.

55. தொல். புறத். நூ.எண்.16.

56. தொல். புறத். இளம்பூரணர் உரை. ப.126.

57. தொல். புறத். நச்சினார்க்கினியர் உரை, பக்.214–215.

58. தொல். மரபு. நூ. எண்.81.

59. திரிகடுகம், பா.எண்.112.

60. எஸ். துரைசாமிப்பிள்ளை, மேலது, ப.13–14.

# இயல் – 4

# சங்க இலக்கியத்தில் ஐந்திணை மக்கள்

4.0. முன்னுரை

4.1. தொல்காப்பியம்

4.2. குறிஞ்சி நில மக்கள்

4.3. குறவர் இருப்பிடச் சூழல்

4.4. குறவர் தொழில்

4.4.1. தேன் எடுத்தல்

4.4.1.1. தேன் எடுக்கும் முறை

4.4.2. கிழங்கு அகழ்தல்

4.4.3. தினைப் பயிரிடுதல்

4.4.2.1. நிலத்தைப் பண்படுத்தல்

4.4.2.2. உழுதல்

4.4.2.3. விதைத்தல்

4.4.2.4. ஊடுபயிர் முறைமை

4.4.2.5. களைகட்டல்

4.4.2.6. மறுகால் பயிர்

4.4.4. தினைப் புனங்காத்தல்

4.4.4.1. யானை விரட்டல்

4.4.4.2. பன்றி விரட்டல்

4.4.4.3. கிளி கடிதல்

4.4.4.4. தினை அறுத்தல்

4.4.4.4.1. தினை உணக்கல்

4.4.4.4.2. தினைக் குற்றல்

4.4.4.5. வேட்டையாடுதல்

# இயல் – 4

# சங்க இலக்கியத்தில் ஐந்திணை மக்கள்

## 4.0. முன்னுரை

சங்க கால மக்களின் வாழ்க்கை முறையை நிலப்பாகுபாட்டின் மூலமாகவும் அவர்கள் கொண்ட தொழில் பாகுபாட்டின் மூலமாகவும் அவற்றை ஐந்து வகைகளாகப் பிரிப்பர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன. அந்நிலங்களில் வாழ்ந்த மக்கள் அந்நிலத்தின் இயற்கை அமைப்பிற்கேற்ப அவர்களின் தொழில்களும் பழக்கவழக்கங்களும் மாறுபட்டன. அவவ்கையில் சங்க இலக்கியத்தில் வரும் ஐந்திணை மக்களைப் பற்றிக் குறவர் இருப்பிடச்சூழல், குறவர் தொழில், குறவர் உணவு, குறவர் பழக்கவழக்கம், ஆயரும் அரசமரபு தோற்றமும், ஆயர் இருப்பிடம், ஆயர் வகை, ஆயர் தொழில், ஆயர் உணவு, விருந்தோம்பல், ஏறு தழுவுதல், வழிபாடு, மருந நில மக்கள் தொழில், உழவர் பழக்கவழக்கங்கள், உழவர் உணவு, பரதவர் குடியிருப்பு, பரதவர் தொழில், பரதவர் பழக்கவழக்கம், பரதவர் பொழுது போக்கு, வழிபாடு, பரதவர் உணவு, பாலை நில மக்கள் குடியிருப்புகள், உணவு, தொழில், பழக்கவழக்கம், நடுகல் வழிபாடு போன்ற தலைப்புகளில் இவ்வியல் ஆய்கிறது.

## 4.1. தொல்காப்பியம்

ஐவகை நிலங்களிலும் வாழும் மக்களைத் தொல்காப்பியர்,

***"பெயரும் வினையுமென்று ஆயிரு வகைய***
***திணைதொறும் மரீஇய திணைநிலப் பெயரே"***[1]

என்பார். முல்லை நிலத்து மக்கட் பெயர்களை,

***"ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்***
***ஆவயின் வரூஉம் கிழவரும் ஊரே"***[2]

என்பார் தொல்காப்பியர்.

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர்,

**"ஆயர் என்பார் நிரை மேய்ப்பார். வேட்டுவர் என்பார் வேட்டைத் தொழில் செய்வார். அஃது எயினர் என்னும் குலப்பெயருடையார் மேல் தொழிற்பெயராகி வந்தது. 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' (மரபு.112) என்றதனான், ஆய்ச்சியர் எனவும் கொள்க. அவ்விரு திறத்தாரும் காடுபற்றி வாழ்தலின் அந்நிலத்தின் மக்களாயினர். அவ்வயின் வரூஉம் கிழவர் இருவகையர், அந்நிலத்தை ஆட்சி பெற்றோரும், அந்நிலத்து உள்ளோரும் என. 'குறும்பொறை நாடன்' என்பது போல்வன ஆட்சி பற்றி வரும் பொதுவன், ஆயன்' என்பன குலம் பற்றி வரும்."[3]**

என்பார்.

குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு திணைகளுக்கும் உரிய மக்கட்பெயரைத் தொல்காப்பியர்,

***"ஏனோர் மருங்கினும் எண்ணுங் காலை***
***ஆனா வகைய திணைநிலைப் பெயரே"[4]***

என்பார். இதன் உரையில் இளம்பூரணர்,

**"குறிஞ்சிக்கு மக்கட்பெயர் குறவன் குறத்தி என்பன; தலைமக்கட் பெயர், மலை நாடன் வெற்பன் என்பன. பாலைக்கு மக்கட்பெயர் எயினர் எயிற்றியர் என்பன; தலைமக்கட்பெயர் மீளி விடலை என்பன. மருதத்திற்கு மக்கட்பெயர், உழவர் உழத்தியர் என்பன; நெய்தற்கு மக்கட்பெயர் நுளையர் நுளைச்சியர் என்பன; தலை மக்கட்பெயர் சேர்ப்பன் துறைவன் கொண்கன் என்பன."[5]**

என்பார்.

ஒவ்வொரு நிலத்திற்கும் தலைமக்கள் வேறாகவும், நிலமக்கள் வேறாகவும் இருந்த தன்மையினை அறிய முடிகிறது.

சங்க இலக்கியத்தில் ஐந்திணை மக்கள் பிரிவினைகள் தொழில் அடிப்படையில் அமைந்தவை ஆகும். இதனை,

> **“பிறப்பில் சாதி வேறுபாடு கிடையாது. ‘பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்’ என்னும் வரி இதனை உணர்த்துகின்றது. குறிஞ்சி, முல்லை முதலிய ஐந்திணை மக்களும் தங்கள் தொழிலாலேயே பிரிக்கப்பட்டிருந்தனர்.”[6]**

> **“வேட்டைத் தொழிலினடிப்படையில் குறிஞ்சி, கால்நடை வளர்ப்புத் தொழிலினடிப்படையில் முல்லை, உழவுத் தொழிலின் அடிப்படையில் மருதம், வணிகத் தொழிலினடிப்படையில் நெய்தல், பொருளீட்டல் அடிப்படையில் பாலை ஆகிய பிரிவுகள் அமைந் துள்ளன”[7]**

எனக் கு. முத்துராசன், அ. ஆறுமுகம் அவர்களின் கருத்துகள் அதைப் புலப்படுத்துவதைக் காணலாம்.

> **“ஐவகை நிலத்து வாழும் மக்கள் தாம்தாம் வாழும் நிலத்தாலும், செய்யும் தொழிலாலும் தனித்தனிப்பெயர் பெற்று வாழ்ந்தமை தொல்காப்பியத்தால் அறியலாம். எடுத்துக்காட்டாக ஐவகை நிலத்துள் காட்டு நிலமாகிய இடை நிலத்துள் வாழ்வதால் இடையர் என நிலப்பெயரும், ஆக்களை மேய்க்கும் தொழில் புரிவதால் ஆயர் எனத் தொழிற்பெயரும் பெற்றனர் முல்லை நில மாந்தர். இவ்வாறே பிற நிலங்களிலும் நிலப்பெயரும் தொழிற்பெயரும் ஆகிய இருவகைப் பெயர் பெற்று மக்கள் வாழ்ந்தமை அறியலாம்.”[8]**

என்பார் க. ஆறுமுகம்.

**"சங்க காலத்தில் வாழ்ந்திருந்த மக்களின் தொகைக்குச் சான்றில்லை. ஆனால் பாகுபாடு இருந்தது. அந்தப் பாகுபாடு நில இயற்கையையும், செய்யும் தொழிலையும் அடிப்படையாகக் கொண்டது. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என ஐந்து வகையாக நிலம் பாகுபாடு செய்யப்பட்டிருந்தது. ஒவ்வொரு நிலத்து மக்களும் தங்களுக்குரிய தொழிலை மேற்கொண்டிருந்தனர்."[9]**

எனச் சங்க கால மக்கள் வாழ்வு நில இயற்கையையும், செய்யும் தொழிலையும் அடிப்படையாகக் கொண்டது என்பார் மா. செல்வராசன்.

## 4.2. குறிஞ்சி நில மக்கள்

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி ஆகும். இங்கு வாழும் மக்களைக் குறவர், கானவர் என வழங்குவர்.

**"மலையாகிய குன்றத்தின் வாழ்ந்தவனுக்குக் குன்றவன் என்று பெயரிட்டனர். அவனே, 'ன்' குறுகி குறவன் என்று அழைக்கப்பட்டான். குறவன் என்ற சொல்லுக்குப் பாம்பாட்டிகள், சாத்திரம் சொல்பவர், மலைவாணர் என்றும் பொருள் கூறுவர்."[10]**

என்பார் எ. சுவாமிநாதன்.

மலைநாட்டில் வாழும் குறவரைப் பற்றி,

**"இவர்கள் இடம் விட்டு இடம் பெயர்ந்து திரியும் மலைச்சாதியினர். இவர்கள் கொச்சைத் தமிழ் பேசுவர். கூடை முடைவர், வாய்ப்புக் (சோசியம்) கூறுவர்."[11]**

என்பார் ந.சி. கந்தையாபிள்ளை.

## 4.3. குறவர் இருப்பிடச்சூழல்

குறவர் மலையின் பக்கத்தே உள்ள சிறிய ஊர்களில் வாழ்வர். அவை பாக்கம், சிறுகுடி என அழைக்கப்பெறும்.

வீடுகள் குரம்பை என அழைக்கப்பட்டன. குறவர்களின் குடிசைகளின் மேல் காட்டுப்புல், வரகினது வைக்கோல் முதலியவை வேயப்பட்டிருக்கும்.

*"புலாவஞ் சிறுகுடி"* **(நற்.14:3)**

*"சிலம்படைந் திருந்த பாக்க மெய்தி"* **(மலை.162)**

*"குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து"* **(திருமுருகு.196)**

*"கானவர் பெயர்க்குஞ் சிறுகுடி யானே"* **(நற்.82:11)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

குறிய இறப்பையுடைய சிறிய மனையின் கண் வாழ்வர். இம்மனை 'குறியிறைக் குரம்பை' என அழைக்கப்பெறும் (புறம்.129:1, அகம்.272:11).

குறவர்களின் குடிசை காட்டுப்புல்லால் வேயப்பட்டிருக்கும். இதனை,

*"குன்றக் குறவன் புல்வேய் குரம்பை"* **(ஐங்.252:1)**

*"புல்வேய் குரம்பை"* **(அகம்.172:10)**

*"புல்வேய் குரம்பை குடிதொறும் பகர்ந்து"* **(புறம்.120:13)**

*"புல்வேய் குரம்பை"* **(மலை.439)**

என்னும் அடிகள் குறிப்பிடும்.

காட்டில் இருந்து வெட்டிக்கொணர்ந்த கால்களை நட்டுக் கட்டிய குச்சி வீடுகளில் வாழ்வர். இக்குடிசையை,

*"நடுகாற் குரம்பை"* **(நற்.285:7)**

என அழைக்கப்பெறும்.

இவர்களுடைய வீடுகளின் முன்புள்ள முற்றங்களிலே வேங்கை முதலிய காட்டு மரங்கள் வளர்ந்தோங்கிக் காட்சி நல்கும் என்பதை,

*"வேங்கை முன்றிற் குரவையுங் கண்டே"* **(நற்.276:10)**

என்பார் தொல்கபிலர்.

வரகினது வைக்கோலை மேலே வேய்ந்து குடிசை அமைத்து, அக்குடிசையின் மேல் மல்லிகை மலர்ந்து மணம் வீசுவதை,

*“ஏன லுழவர் வரகுமீ திட்ட*

*கான்மிகு குளவிய வன்புசே ரிருக்கை”* **(பதிற்.30:23)**

எனப் பதிற்றுப்பத்துக் குறிப்பிடும்.

## 4.4. குறவர் தொழில்

குறவர்கள் தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், தினைப் பயிரிடுதல், தினைப் புனங்காத்தல், தினை அறுத்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களில் ஈடுபட்டனர்.

### 4.4.1. தேன் எடுத்தல்

குறவர் உச்சிப்பாறையில் உள்ள தேனை அறுத்தெடுக்க முயல்வதைப் பாணர்,

*“அறையுறு தீந்தேன் குறவர் அறுப்ப”* **(அகம்.322:12)**

என்பர்.

#### 4.4.1.1. தேன் எடுக்கும் முறை

குறவர் மலையேறும் போது நெடிய மூங்கிலின் கணுக்களைப் படி போல வைத்து ஏறித் தேனை எடுப்பர். அந்த ஒற்றை மூங்கில் ஏணியை மால்பு என்பர். இதனை,

*“கலைகை யற்ற காண்பி னெடுவரை*

*நிலைபெய் திட்ட மால்பு நெறியாகப்*

*பெரும்பயன் தொகுத்த தேன்கொள் கொள்ளை”*

**(மலை.315–317)**

*“பெருந்தேன் கண்படு வரையில் முதுமால்பு*

*அறியாது ஏறிய மடவோன் போல”* **(குறுந்.273:5–6)**

*“தேனின் இறாலென ஏணி இழைத்திருக்கும்”* **(கலித்.39:9)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 4.4.2. கிழங்கு அகழ்தல்

கானவர் கிழங்கினைத் தோண்டியெடுப்பர். அங்ஙனம் தோண்டியமையால் உண்டான குழிகளை உடனடியாக மண்ணிட்டு நிரப்பவில்லை. அக்குழிகளில் வேங்கை மலர்களும், கொன்றை மலர்களும் உதிர்ந்திருந்ததை,

*". . . . . . . . கானவர்*
*கிழங்கு அகழ் நெடுங்குழி மல்க வேங்கைப்*
*பொன் மலிபூ வீ தாஅம்"* **(ஐங்.208:1–3)**

*"கவலை கொண்டிய கல்வாய்ச் சிறுகுழி*
*கொன்றை ஒள்வீ தாஅய்"* **(குறுந்.233:1–2)**

என்னும் அடிகள் மெய்ப்பிக்கின்றன.

### 4.4.3. தினைப் பயிரிடுதல்

குறவர் மழை பெய்தவுடன் கொல்லைக் காட்டினை உழுது சிலவாய விதையை இடமுண்டாகத் தூவி விதைத்துப் பலவாய பயனைப் பெறுவர். இதனை,

*"மலையிடம் படுத்துக் கோட்டிய கொல்லைத்*
*தளிபதம் பெற்ற கானுழு குறவர்*
*சிலவித்து அகல விட்டுடன் பல விளைந்து"* **(நற்.209:1–3)**

என நற்றிணை உணர்த்தும்.

கார்காலத்து மழை பெய்தவுடன் நிலத்தை உழுது பயன்படுத்திப் பலவகைத் தானியங்களை விதைப்பர் என்பதை,

*"கார்ப்பெயற் கலித்த பெரும்பாட் டீரத்துப்*
*பூழி மயங்கப் பலவுழுது வித்தி"* **(புறம்.120:2–3)**

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

#### 4.4.3.1. நிலத்தைப் பண்படுத்தல்

புதுக்கொல்லை ஆக்கம் பொருட்டு முயல்கின்ற குறவன், பழங்கொல்லையில் உள்ள மரங்களைச் சுட்டெரிப்பர். இதனை,

***"இதைமுயல் புனவன் புகைநிழல் கடுக்கும்"*** **(அகம்.140:11)**

***"தொடுதோற் கானவன் சூடுறு வியன்புனம்"*** **(அகம்.368:1)**

என அகப்பாடல் தெரிவிக்கும்.

## 4.4.3.2. உழுதல்

குறவர்கள் உழவுத் தொழிலையும் செய்தனர் என்பதை,

***"பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்"*** **(அகம்.262:2)**

என்னும் பாடலடி மூலம் அறியலாம். உழவுத்தொழில் குறிஞ்சி நிலத்திலே தோன்றிய முறையை அறிய முடிகிறது.

## 4.4.3.3. விதைத்தல்

குறவர் ஐவனம் விதைத்தலை,

***"அருவிப் பரப்பின் ஐவனம் வித்தி"*** **(குறுந்.100:1)**

***"மைபடு சிலம்பின் ஐவனம் வித்தி***
***அருவியின் விளைக்கும் நாடன்"*** **(குறுந்.371:2–3)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## 4.4.3.4. ஊடுபயிர் முறைமை

மூங்கில் நெல் விளைந்து கொய்யும் பதத்தை எட்டிய பிறகு அந்நிலத்தில் உழாமலே விதைத்த வெண் சிறுகடுகுச் செடிகளின் போதுகளைக் கோதி ஒழுங்குபடுத்துவர் என்பதை,

***"புயற்புனிறு போகிய பூமலி புறவி***
***னவற்பதங் கொண்டன வம்பொதித் தோரை***
***தொய்யாது வித்திய துளர்படு துடவை***
***யையவி யமன்ற வெண்காற் செறுவின்"*** **(மலை.120–123)**

என மலைபடுகடாம் தெரிவிக்கும்.

### 4.4.3.5. களைகட்டல்

சிறிய தினையிடத்தே விளைந்த களையைக் குறவர் களைக்கொட்டினைக் கொண்டு களைவர். இதனை,

*“. . . . . . . . . சிறுதினைத்*

*துளர்எறி நுண்துகள் களைஞர் தங்கை”* **(குறுந்.392:4–5)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

### 4.4.3.6. மறுகால் பயிர்

குறவன் ஒருமுறை விதைத்த தினையின் கதிர்களைப் பெறுவதோடு, அவற்றின் மறுகாலில் விளையும் அவரைக் காய்களையும் பெற்றான் என்பதை,

*“பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகாற்*

*கொழுங்கொடி அவரை பூக்கும்”* **(குறுந்.82:4–5)**

எனக் குறுந்தொகைப் பாடல் உணர்த்தும்.

### 4.4.4. தினைப்புனங்காத்தல்

விலங்கினங்கள், பறவைகள் முதலியவற்றிலிருந்து தினையைக் காக்கத் தினைப்புனங்காவல் இருந்தனர். இச்செயலில் ஆண், பெண் இருபாலரும் ஈடுபட்டுள்ளனர்.

### 4.4.4.1. யானை விரட்டல்

நள்ளிரவில், தினையினை மேய்தற் பொருட்டு வரும் யானையின் நடையைக் கூர்ந்து அறிந்து பரண் மீதுள்ள கானவன் கவணையில் சிறிய கல்லை வைத்து எறிவான். இதனை,

*“. . . . . . . . யானைக்*

*கால்வல் இயக்கம் ஒற்றி நடுநாள்*

*வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன்*

*கடுவிசைக் கவணின் எறிந்த சிறுகல்”* **(அகம்.292:8–11)**

*"பிடியொடு மேயும் புன்செய் யானை*

*அடிஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்*

*நெடுவரை ஆசினிப் பணவை ஏறிக்*

*கடுவிசைக் கவணையில் கல் கைவிடுதலின்"* **(கலித்.41:7–10)**

*"தினைமேய் யானை இனன் இரிந்து ஓட*

*கல்உயர் கழுதில் சேணோன் எறிந்த*

*வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லென"* **(அகம்.392:13–15)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

தினைப்புனம் கவர வரும் யானையைத் துரத்த எறியும் கவண் கற்கள் மலைச்சாரலிலுள்ள மரக்கொம்புகளிலுள்ள பூக்களைச் சென்று தாக்கி அவற்றை உதிர்ந்து வீழச் செய்யும். இதனை,

*"இலங்கொளி மருப்பின் கைம்மா உளம்புநர்*

*புலங்கடி கவணையின் பூஞ்சினை உதிர்க்கும்"* **(கலித்.23:1–2)**

எனக் கலித்தொகை குறிப்பிடும்.

தினைப்புனம் கவர வரும் யானையை அஞ்சி ஓடும் பொருட்டுக் கொள்ளிக் கட்டையை இரவு முழுவதும் எரிய விட்டு, வில்லினை உடைய கானவர் ஆரவாரம் செய்வர். இதனை,

*"ஏனல்அம் சிறுதினை காக்கும் சேணோன்*

*ஞெகிழியின் பெயர்ந்த நெடுநல் யானை*

*மீன்படு சுடர்ஒளி வெரூஉம்"* **(குறுந்.357:5–7)**

*"ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்*

*களிறென ஆர்ப்பவர் ஏனல்கா வலரே"* **(கலித்.52:13–14)**

*"ஏனலஞ் சிறுதினைச் சேணோன் கையதைப்*

*பிடிக்கை அமைந்த கனல்வாய்க் கொள்ளி"* **(அகம்.73:14–15)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

மலைப்பக்கத்தே முளைத்துச் செழித்துக் கரிய நிறமுடைய தினைக் கொல்லையில் உண்ணும் பொருட்டுத் தன் துணையைப் பிரிந்த கொடிய ஆண் யானை வந்து புகுந்தது. அதைக் கண்ட அழகிய குடியில் உள்ள குறவர்களுள் அம்பினை உடையவரும், கிணைப்பறையையுடையவரும், கைவிரலிலே கோத்த கவணுடையவரும் கூவிப் பேரிரைச்சலிடுபவரும் கூடி குடியிருப்பின் புறமெல்லாஞ் சென்று ஆரவாரம் செய்தனர் என்பதை (நற்.108) அறியலாம்.

குறவர் கொடிய விலங்குகளிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள இரவிலும் தொண்டகம் என்னும் சிறிய பறையை விடாது ஒலிப்பர் என்பதை,

*“. . . . . . . . . சாரல்*
*சிறுதினை விளைந்த வியன்கண் இரும் புனத்து*
*இரவு அரி வாரின் தொண்டகச் சிறுபறை*
*பானாள் யாமத்தும் கறங்கும்*
*யாமம் காவலர் அவியா மாறே”* (குறுந்.375:2–6)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 4.4.4.2. பன்றி விரட்டல்

பரண் மீது நீண்ட சுடராகிய விளக்கினை ஏற்றி வைத்தும், பறையோசை எழுப்பியும், பெரிய ஊதுகொம்பினை ஊதியும் ஒலி எழுப்பி பன்றியை விரட்டுவர்.

கதிர்களைத் தின்னுதற்கு வரும் பன்றிகளை ஓட்டுதற்குக் கானவன் காவற் பரண் மீது நீண்ட சுடராகிய விளக்கினைக் கொளுத்தி வைத்திருப்பர் என்பதை,

*“புருவைப் பன்றி வருதிறம் நோக்கிக்*
*கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய*
*நெடுஞ்சுடர் விளக்கம் ”* (அகம்.88:4–6)

என அகப்பாடல் உணர்த்தும்.

குறவர் சேம்பு, மஞ்சள் ஆகியவற்றைப் பன்றி அகழாமல் காக்கப் பறையோசை எழுப்புவர் என்பதை (மலை. 342–344) அறியலாம்.

தினைப்புனத்தை அழித்தற்பொருட்டு வரும் பன்றியின் பெருங்கூட்டத்தை ஓட்டுவதற்குக் குறவர் காவல் செய்வர். அவை வரும் காலத்தை எண்ணியிருந்து பெரிய ஊது கொம்பினை ஊதி ஒலி எழுப்புவர் என்பதை,

*“முதைப்புனம் காவலர் நினைத்திருந்து ஊதும்*
*கருங்கோட்டு ஓசையொடு ஒருங்கு வந்துஇசைக்கும்*
*வன் புலக் காட்டு நாட்டதுவே”* (அகம்.94:9–11)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 4.4.4.3. கிளி கடிதல்

குறமகளிர் தழல் என்னும் கருவியும் குளிர் என்னும் கருவியும் கொண்டு கிளிகளை ஓட்டினர் என்பதை,

*“சுடுபுன மருங்கில் கலித்த ஏனற்*
*படுகிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே”* (குறுந்.291:1–2)

*“படிகிளி பாயும் பசுங்குர லேனல்*
*கடிதல் மறப்பித்தா யாயின்”* (கலித்.50:9–10)

*“பிடிக்கை அன்ன பெருங்குரல் ஏனல்*
*உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே”* (குறுந்.360:5–6)

*“குளிர்படு கையள் கொடிச்சி”* (நற்.306:3)

*“சிறுதினைப் படுகிளி கடீஇயர் பல்மாண்*
*குளிர்கொள் தட்டை மதன் இல புடையா”* (அகம்.32:5–6)

என்னும் அடிகள் உணர்த்தும்.

குறமகளிர் தம் தோழியருடன் கூட்டமாகச் சென்று தினைப்புனங்களில் ஆரவாரம் உண்டாகக் கிளிகளை ஓட்டுவர். இதனை,

*“ஒலிகழைத் தட்டை புடையுநர் புனந்தொறுங்*

*கிளிகடி மகளிர் விளிபடு பூச”* (மலை.328–329)

என மலைபடுகடாம் உணர்த்தும்.

தினைமுற்றிய கதிர்களை உண்ணவரும் பச்சைக் கிளிகளை ஒட்டும் பொருட்டு கிளிகடி கருவியாகிய தட்டையைக் கைக்கொண்டு தினைப்புனத்துக்குக் குறமகளிரைத் தந்தையர் அனுப்புவர் என்பதை,

*“. . . . . . . . . . சிறுதினைச்*

*செவ்வாய்ப் பாசினங் கடீஇயர் கொடிச்சி*

*அவ்வாய்த் தட்டையொடு அவணை யாகென*

*ஏயல்மன் யாயும் நுந்தை”* (நற்.134.3–6)

என நற்றிணை உணர்த்தும்.

குறமகள் தட்டையை அடித்து ஐவன நெல்லை உண்ணவரும் கிளிகளை ஒட்டுவர் என்பதை (அகம்.188, ஐங்.285, குறுந்.193, 223) அறிய முடிகிறது.

தினைக்கதிர்களை அறுவடை செய்த பின்னர் தாள் மட்டும் உள்ள வயலில் அவரையை விதைப்பர். அந்த அவரையின் மேல் வந்து படிகின்ற கிளிகளை ஓட்டுவர். இதனை,

*“சிறுதினை கொய்த இருவி வெண்கல்*

*காய்த்த அவரைப் படுகிளி கடியும்”* (ஐங்.286:1–2)

என ஐங்குறுநூறு குறிப்பிடும்.

### 4.4.4.4. தினை அறுத்தல்

தினை நன்கு முற்றியதும் குறவர் பலரும் கூடி தினையை அறுப்பர். இதனை,

*“குளிர்படு கையள் கொடிச்சி செல்கென*

*நல்ல இனிய கூறி மெல்லக்*

*கொயல்தொடங் கினரே கானவர்”* (நற்.306:3–5)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

எருதுகளைக் கொண்டு ஓட்டிக் கதிர்ப்போர் அடிக்கும் மருதநிலத்தார் களம் செம்மை செய்தது போன்ற அகன்ற பரப்பையுடைய கற்பாறையிடத்து குறவர் தினையைக் கதிரடித்து அதன் தாளை நெடும் போராகக் குவிப்பர் என்பதை,

*". . . . . . . . . எருதெறிகளமர்*
*நிலங்கண்டு அன்ன அகன்கட் பாசறை*
*மென்தினை நெடும்போர் புரிமார்*
*துஞ்சு களிறு எடுப்பும்"* *(நற்.125:9–12)*

என நற்றிணை குறிப்பிடும். மருத நிலத்தில் காணப்படும் கதிரடிப்பது முதலில் குறிஞ்சி நிலத்திலே வந்துள்ளதை அறிய முடிகிறது.

### 4.4.4.4.1. தினை உணக்கல்

குறமகளிர் பாறையின் மேல் தினையைப் பரப்பிக் காய வைப்பர். அச்சமயம் புலி யானையைக் கொன்று முழங்கும் முழக்கத்தைக் கேட்டு இது மேகத்தின் முழக்கம் (இடியோசை) என்று எண்ணிக் காய வைத்த தினையை விரைவில் கூட்டிக் குவிப்பர் என்பதை,

*"நிரைவளை முன்கை நேர்இழை மகளிர்*
*இருங்கல் வியல்அறைச் செந்தினை பரப்பி"* *(குறுந்.335:1–2)*
*". . . . . . . . . . . . . உயர்வரைப்*
*பெருங்கல் விடரகஞ் சிலம்ப இரும்புலி*
*களிறு தொலைத்து உரறுங் கடியிடி மழைசெத்துச்*
*செந்தினை உணங்கல் தொகுக்கும்"* *(நற்.344:8–11)*

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 4.4.4.4.2. தினைக் குற்றல்

நன்கு காய்ந்த ஐவனம் என்னும் வெண்ணெல்லைத் தந்தையின் மலை வளத்தைப் பாடிக்கொண்டே உரலில் யானைக் கொம்பாலும், சந்தன மர உலக்கையாலும் குற்றுவர். இதனை,

*“புன்தலை மந்தி தூர்ப்பத் தந்தை*

*மைபடு மால்வரை பாடினள் சொடிச்சி*

*ஐவன வெண்நெல் குறுஉம்”* (நற்.373:2–4)

*“தேந்து மருப்பின் இனவெண் டிமிர்பூதுஞ்*

*சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்*

*ஐவன வெண்ணெல் அறையுரலுட் பெய்திருவாம்”*

(கலித்.43:2–4)

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

மூங்கில் நெல்லைப் பாறை உரலிலே இட்டு யானைக் கொம்பினை உலக்கையாகவும், சேம்பின் இலையைச் சுளகாகக் கொண்டு புடைப்பர் என்பதை,

*“. . . . . . . . . . . . வயக்களிற்றுக்*

*கோடு உலக்கையாக நற்சேம்பின் இலை சுளகா*

*ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்து”* (கலித்.41:1–3)

எனக் கலித்தொகை குறிப்பிடும்.

## 4.4.4.5. வேட்டையாடுதல்

குறவர்கள் யானை, புலி, பன்றி, முள்ளம்பன்றி, உடும்பு, மான், முயல் முதலியவைகளை வேட்டையாடினர்.

**“வேட்டுவத் தொழில் எல்லா நிலங்களுக்கும் பொதுவாக அமைந்திருந்தது. பின் குறிஞ்சி, முல்லை நிலங்களுக்கு உரிய தொழிலாயிற்று. மருத நிலத்தில் மீன் பிடிக்கும் தொழில் புரிந்தோன் ‘தூண்டில் வேட்டுவன்’ (அகம்.36:6) என்றழைக் கப்பட்டமை இதற்குச் சான்றாகும். இதனைப் போன்றே உழுதொழில் எல்லா நிலங்களுக்கும் பொதுவாக அமைந்திருந்தது. பின் மருத நிலத்திற்கே சிறப்பாயமைந்தது. குறிஞ்சி மக்களில்**

**தினைப்பயிர் விளை வித்தவர் 'கானுழு உழவர்' (நற்.209:2) என்றழைக்கப்பட்டமை சான்றாகும்."[12]**

என்பார் இரா. குருநாதன்.

#### 4.4.4.5.1. யானை வேட்டை

கானவர் யானையின் தந்தத்துக்காகவும், தசைக்காகவும் வேட்டையாடுவர் என்பதை,

*". . . . . . . . . . . . . . . . யானை*
*நற்கோடு நயந்த அன்பில் கானவர்"* **(நற்.65:5–6)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

யானையை வேட்டையாடி அதன் தந்தங்களைப் பெரிய பாறையிடத்துக் காயவைப்பர். கால் நகங்களை ஊனின்று பிரித்துப் புதைப்பர். இதனை,

*"வெண்கோடு கொண்டு வியலுறை வைப்பவும்*
*பச்சூன் கெண்டி வள்ளுகிர் முணக்கவும்"* **(நற்.114:1–2)**

என நற்றிணை விளக்கும்.

குறவர் களிற்றியானை மேல் அம்பு செலுத்திக் கொன்று அவ்வானையின் வெண்ணிறக் கொம்பினைக் கொண்டு வந்து, புல்லால் வேயப்பட்ட தனது சிறிய குடிசையில் புலால் நாற்றம் வீச அதனை ஊன்றி வைப்பான் என்பதை,

*"இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்*
*விரிமலர் மராஅம் பொருந்தி கோல் தெரிந்து*
*வரிநுதல் யானை அருநிறத்து அழுத்தி*
*இகல்அடு முன்பின் வெண்கோடு கொண்டு, தன்*
*புல்வேய் குரம்பை புலர ஊன்றி"* **(அகம்.172:6–10)**

என அகப்பாடல் உணர்த்தும்.

#### 4.4.4.5.2. புலிவேட்டை

குறவர்கள் பாறைகள் செறிந்த குன்றுகளில் முழைகள் கண்டு அவற்றின் வாயிலில் கற்பலகையால் கதவமைத்து, உள்ளே ஆடுகளைக் கட்டிப் புலிகளை அதனுட் புகுவித்து, அவை ஆடுகளைத் தாக்க வாயிற் கதவாகிய கற்பலகை விரைவாக மூடிக்கொள்ளுமாறு பொறியமைத்து வேட்டையாடுவர். இதனை,

*"இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய*
*பெருங்கல் லடார் . . . . . "* **(புறம்.19:5–6)**

எனப் புறப்பாடல் தெளிவுறுத்தும்.

### 4.4.4.5.3. பன்றி வேட்டை

பன்றிகளை வேட்டை ஆடும் கானவர்கள் அவற்றைக் கொன்று, அவைகளின் மாமிசங்களிலே கெட்டுப் போனவற்றை எடுத்து எறிந்துவிட்டு நல்ல மாமிசத்தை மட்டும் தங்களால் கொல்லப்பட்ட யானைகளின் தந்தங்களில் மாட்டிக் காவடி போலத் தூக்கிக் கொண்டு வருவர் என்பதை,

*"மண்ணவில் கமழு மாமலை சாரற்*
*றேனினர் கிழங்கின ரூனார் வட்டியர்*
*சிறுகட் பன்றிப் பழுதுளி போக்கிப்*
*பொருது தொலை யானைக் கோடுசீ ராகத்*
*துவொடு மலிந்த காய கானவர்"* **(மலை.151–155)**

என மலைபடுகடாம் மூலம் அறியலாம்.

கானவர் அகன்ற நிலப்பிளவின் வாயிலில் வலையை அமைப்பர். அவ்வலையில் அகப்பட்ட பன்றியை வேட்டை நாய்கள் கொன்றன. நாய்கள் பற்றிக் கொண்ட மிகுதியான தசைகளை அவை கொண்டு செல்லாத வண்ணம் அவற்றை விலக்கி, அவ்விறைச்சியைச் சிறுகுடிக்குக் கொண்டு வருவர். இதனை,

*"சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்*
*சேறாடு இரும்புறம் நீரொடு சிவண*
*வெளவசிப் படீஇயர் மொய்த்த வள்புஅழீஇக்*

*கோள்நாய் கொண்ட கொள்ளைக்*

*கானவர் பெயர்க்குஞ் சிறுகுடி யானே"* (நற்.82:7–11)

என்னும் அடிகள் உணர்த்தும்.

மூடுகுழிகளின் அகத்தே மறைந்திருந்து குறவர் நீருண்ண வரும் பன்றியை வேட்டையாடுவர் என்பதை (பெரும்.106–110) அறியலாம்.

### 4.4.4.5.4. முள்ளம்பன்றி வேட்டை

குறவர் காட்டுமல்லிகையின் குளிர்ந்த புதரானது குருதிக் கறையுடன் அசையும்படி அதனுட் பதுங்கியிருந்த முள்ளம் பன்றியைக் கொன்று வீழ்த்துவர் என்பதை,

*"வேட்டம் போகிய குறவன் காட்ட*

*குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர*

*முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட"* (அகம்.182:2–8)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

கானவன் காட்டில் அம்பெய்திக் கொணர்ந்த முள்ளம்பன்றியின் கொழுத்த தசைப்பகுதியைக் கொடிச்சி சிறுகுடி பலர்க்கும் பகுத்துக் கொடுப்பர். இதனை,

*"கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை*

*தேங்கமழ் கதுப்பின் கொடிச்சி மகிழ்ந்துகொடு*

*காந்தளஞ் சிறுகுடிப் பகுக்கும்"* (நற்.85:8–10)

என நற்றிணை தெரிவிக்கும்.

### 4.4.4.5.5. உடும்பு வேட்டை

கானவர் உடும்பினை வேட்டையாடிக் கொண்டு வருவர். கொண்டு வந்த உடும்பினை நெருப்பில் சுட்டு தம்மவரிடையே கூறு செய்து கொள்வர். இதனை,

*"உடும்பிழு தறுத்த வொடுங்காழ்ப் படலைச்*

*சீறின் முன்றிற் கூறுசெய் திடுமார்"* (புறம்.325:7–8)

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

**"வேட்டைக்குச் செல்லும் குழுவினர் வேட்டையாடிப் பெற்ற இறைச்சியை அவர்களின் உறவினர்களுடன் சமமாகப் பகிர்ந்து கொள்வர் அல்லது உறவு நெருக்கத்தின் அடிப்படையில் பகிர்ந்து கொள்வர்."[13]**

எனச் சீ. பக்தவத்சலபாரதி அவர்களின் கருத்தும் மேற்கூறிய கருத்தைப் புலப்படுத்துவதைக் காணலாம்.

### 4.4.4.5.6. மான்வேட்டை

வேடர்கள் காட்டிடத்தே, தனது கூட்டத்தினின்றும் பிரிந்த துன்பத்தை உடைய பெண்மான் நேரே இருப்ப, அதனை அறியாது கலைமானைக் கொல்லும் வன்கண்மை உடையவர்கள் என்பதை,

***"வில்லுடை வீளையர் கல்இடுபு எடுத்த***
***நனந்தலைக் கானத்து இனம்தலைப் பிரிந்த***
***புன்கண் மடமான் நேர்படத் தன்னையர்***
***சிலைமாண் கடுவிசைக் கலைநிறத்து அழுத்தி"***

**(குறுந்.272:2–5)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

வேட்டை நாய்கள் சூழ்ந்து மடக்கத் தவித்த மானானது வேடனின் வலையிலேயே சென்று வீழ்ந்தது. இதனை,

***"கொலைவெங் கொள்கையொடு நாயகப் படுப்ப***
***வலைவர்க் கமர்ந்த மடமான்"*** **(கலித்.23:16–17)**

எனக் கலித்தொகை உணர்த்தும்.

### 4.4.4.5.7 முயல் வேட்டை

வேட்டை நாய்களுடன் பசிய தூறுகளை அடித்து, வேலியில் தொடர் வலைகளைக் கட்டிக் குறுமுயல்களை அவ்வலையகத்தே வளைத்துப் பிடிப்பர் என்பதை,

*“அரைநாள் வேட்ட மழுங்கிற் பகனாட்*
*பகுவாய் ஞமலியோடு பைம்புத லெருக்கித்*
*தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி*
*முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் புரையு*
*நெடுஞ்செவிக் குறுமுயல் போக்கறவளைஇக்*
*கடுங்கட் கானவர் கடறுகூட் டுண்ணும்”* **(பெரும்.111–116)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

## 4.4.4.5.8. வேட்டை முறைமை

வேட்டைக்குச் செல்வோர் வில், அம்பு, வலை முதலியவற்றுடன் வேட்டை நாயையும் அழைத்துக் கொண்டு கூட்டமாகச் செல்வர்.

வேட்டைக்குச் செல்வோர் தனித்துச் செல்லாது, பலர் சேர்ந்து வேட்டை நாயுடன் செல்வர். அவ்வாறு சென்று வேட்டையாடும் பொழுது பிரிந்து சென்று விட்டால் மீண்டும் ஒன்று சேரும் பொருட்டு வேட்டுவர்களோடு வேட்டை நாயை அழைப்பதற்கு ஊது கொம்பினை ஊதுவர். இதனை,

***“ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு***
***வேய்பயில் அழுவத்துப் பிரிந்த நின்***
***நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே”*** **(அகம்.318:13–15)**

என அகப்பாடல் உணர்த்தும்.

> **“வேட்டைக்குச் செல்வோர் அதற்குத் தேவையான கருவிகளுடன் செல்லுதலும், காட்டில் எல்லாத் திசைகளிலும் அலைந்து வேட்டையாடுதற்குரிய விலங்குகள் உள்ள இடத்தை அறிதலும், சரியான இடமறிந்து வலை விரித்தலும், பதுங்கிய இடத்திலிருந்து விலங்கை வெளிப்படச் செய்தலும், வலையில் சிக்கியவுடன் அஞ்சாது பாய்ந்து தாக்குதலும் வேட்டைத் தொழிற்கூறுகளாகும்.”[14]**

என்பார் வி.சி. சசிவல்லி.

வேட்டைக்குச் சென்ற வீரர்கள் பார்வை ஒன்றுபட வலையை அமைத்தான். அந்த வலையைக் கண்ட கணந்துள் என்ற பறவை அச்சமுற்றுக் கத்துதலை,

*“பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ*
*நெடுங்கால் கணந்துளம் புலம்புகொள் தெள்விளி”* **(நற்.212:1–2)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

குறவர் வேட்டைக்குச் செல்லும் காட்சியை,

*“செம்பொறிக் கேற்ற வீங்கிறைத் தடக்கையின்*
*வண்ண வரிவில் ஏந்தி அம்பு தெரிந்து*
*நுண்வினைக் கச்சைத் தயக்கறக்கட்டி*
*இயலணிப் பொலிந்த வீகை வான்கழல்*
*துயல்வருந் தோறுந் திருந்தடிக் கலாவ*
*முனைபாழ் படுக்குந் துன்னரும் துப்பிற்*
*பகைபுறம் கண்ட பல்வேல் இளைஞரின்*
*உரவுச்சினஞ் செருக்கித் துன்னுதொறும் வெகுளும்*
*முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி*
*திளையாக் கண்ண வளைபுகு நெறிதர”* **(குறிஞ்.123–132)**

எனக் கபிலர் எடுத்துரைப்பார்,

## 4.5. குறவர் உணவு

தினைச்சோறு, பழவகைகள், மான்தசை, பன்றிதசை, ஆட்டிறைச்சி முதலியவற்றைக் குறவர்கள் உணவாகக் கொண்டுள்ளனர்.

குறவர் நெய்யில் பொரித்த தசையினையும் தினைச் சோற்றையும் உணவாகக் கொண்டுள்ளனர் என்பதை,

*“பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு*
*குரூஉக்க ணிறடிப் பொம்மல் பெறுகுவிர்”* **(மலை.168–169)**

என மலைபடுகடாம் தெரிவிக்கும்.

பலாப்பழத்தின் விதையோடு மானின் தசையினையும் பன்றியின் தசையினையும் உடும்பின் தடியோடு கலந்து கறி செய்து உண்பர். இதனை,

*"வருவி தந்த பழஞ்சிதை வெண்காழ்*
*வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை*
*முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை*
*பிணவு நாய் முடுக்கிய தடியொடு விரைஇ"* **(மலை.174–177)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

மூங்கிலரிசிச் சோற்றில் நெல்லரிசி விரவி அவரை விதையாற் சமைத்த புளிங்கூழைக் கானவர் இரவில் உணவாகக் கொள்வர். இதனை,

*"வேய்கொ ளரிசி மிதவை சொரிந்த*
*சுவல்விளை நெல்லி னவரையம் புளிங்கூ*
*ழற்கிடை யுழந்தநும் வருத்தம் வீட"* **(மலை.435–437)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

மோரை உலையாக வார்த்துப் புளியம்பழத்தின் இனிய புளிப்பையும் கலந்து குறமகளிர் மூங்கிலரிசிச் சோறு ஆக்குவர் என்பதை (மலை.179–183) அறியலாம்.

மேலும் அவர்கள் வெள்ளாட்டை அரிந்து அதன் தசையோடு சேர்த்துச் சமைத்த அரிசிச் சோற்றுத் தடியைத் தினைமாவுடன் நாள்தோறும் செய்வர் என்பதை,

*"பொன்னறைந் தன்ன நுண்ணே ரரிசி*
*வெண்ணெறிந் தியற்றிய மாக்க ணமலை*
*தண்ணெ னுண்ணிழு துள்ளீ டாக*
*வசையினிர் சேப்பி னல்கலும் பெறுகுவிர்"* **(மலை.440–443)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## 4.6. குறவர் பழக்கவழக்கம்

இரவில் விளக்கேற்றல், கூத்து, பண்பாடுதல், கள்ளுண்ணல் முதலியவை குறவரின் பழக்கவழக்கங்களாக இருந்தன.

பஞ்சாலே திரித்த வெள்ளிய திரியையுடைய விளக்கினைக் குறவர் தம் வீடுகளில் ஏற்றுவர். இதனை,

*"நிரைஇதழ் பொருந்தாக் கண்ணோடு இரவில்*
*பஞ்சி வெண்திரிச் செஞ்சுடர் நல்இல்"* **(குறுந்.353:4–5)**

எனக் குறுந்தொகை விளக்கும். சிறுகுடிப்பாக்கத்தில் வேங்கைப் பூக்களைச் சூடி தொண்டகப்பறையின் தாளத்திற்கு ஏற்ப ஆடவர் பெண்களுடன் கலந்து தெருக்களில் கூத்தாடுவர் என்பதை,

*"தேம்கமழ் இணரவேங்கை சூடி*
*தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடு விரைஇ*
*மறுகில் தூங்கும் சிறுகுடிப் பாக்கத்து"* **(அகம்.118:2–4)**

என அகப்பாடல் உணர்த்தும்.

கானவர்கள் தங்கள் துணைவியர் தேம்பிழித் தேறலைத் தர மிகுதியாக அருந்தி மகிழ்வுடன் துயில் கொள்ளுவர். வேட்டைக்குச் சென்று கொடுவரி பாய்ந்து விழுப்புண் பட்டு வீட்டுக்கு வரும் கானவரைக் கொடிச்சியர் இனிய பண்களைப் பாடி அவர்களின் இன்பத்தைப் போக்குவர் என்பதை **(குறிஞ்.153–156, மலை.302–304)** அறியலாம்.

### 4.6.1. கள்ளுண்ணல்

மனமகிழ்ச்சியின் பொருட்டு விடியற்காலத்தே குறவர் கள்ளுண்டு களித்து, தம் மகளிரோடு சிறுபறை ஒலிக்கக் குரவையாடுவர். இதனை,

*"நறவுநாட் செய்தகுறவர் தம் பெண்டிரொடு*
*மான்தோற் சிறுபறை கறங்கக் கல்லென*
*வான்தோய் மீமிசை அயரும் குரவை"* **(மலை.320–322)**

என மலைபடுகடாம் தெளிவுறுத்தும். நெல்லாற் சமைத்த கள்ளையும் குறவர் உண்டு மகிழ்வர். மேலும், தேனாற் செய்த கள்ளையும் குடிலின் கண் மனைவி வார்த்துக் கொடுப்ப குடிப்பர் என்பதை (மலை.171–173) உணர்த்தும்.

மூங்கிலால் ஆக்கிய குழாயில் நிரப்பி வைத்த கள்ளைக் குடித்து விட்டு வேங்கை மரத்தில் குரவைக் கூத்தாடினர் என்பதை (நற்.276, புறம்.129) அறியலாம்

## 4.7. முல்லை நில மக்கள்

காடும் காடு சார்ந்த இடம் முல்லை ஆகும். இங்கு வாழும் மக்களை ஆயர், கோவலர், இடையர், பொதுவர் என வழங்குவர்.

> **“ஆவினை மேய்ப்பவர் ‘ஆயர்’ என வழங்கப் பெற்றனர்.”**[15]

என்பார் க. வெள்ளைவாரணனார்.

> **“ஆயர் என்ற சொல் ஆய் என்ற குலப்பெயருடன் ஆர் விகுதி சேர்ந்து ஆயர் எனலாயிற்று.”**[16]

என்பார் ஐ. அண்ணாமலை.

> **“ஆ என்பது பசு. ஆயம் என்பது பசுத்திரள். அதை ஓம்பி வாழ்ந்தவர் ஆயர் எனப்பெற்றனர் எனவும், ஆய் என்னும் குடிப்பெயர் ‘அர்’ என்னும் பலர்பால் விகுதி பெற்று ஆயர் என ஆயிற்று எனவும் கொண்டு, ஆயர் என்போர் தாம் கொண்டிருந்த பசுத்திரள்களாலும் குடியாலும் பெயர் பெற்றவராவர்.”**[17]

என்பார் அ. முத்துசாமி.

> **“முல்லை நில மக்கள் கோவலர் எனவும் குறிக்கப்பெறுவர். கையிலே கோலைக் கொண்டிருந்த காரணத்தால் இவர்கள் கோலாயர் எனவும் அழைக்கப்பட்டனர்.”**[18]

என்பார் ஆ.சிங்காரவேலு முதலியார்.

> **“குறிஞ்சி, பாலை ஆகிய வலிய நிலங்களுக்கும் மருதம், நெய்தல் ஆகிய மென்மையான நிலங்கட்கும் இடைப்பட்ட**

**இயல்பினது. ஆதலால் இடைநிலம் எனப் பெயர்பெறும். இதனால் இந்நில மக்கள் இடையர் எனப்பட்டனர்."[19]**

என்பார் லெ.ப. கரு. இராமநாதன் செட்டியார்.

**"இடையர்கள் தமிழ்நாட்டின் முக்கியமான ஆயர்கள் ஆவர். இவர்கள் யாதவர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர். 'இடை' (நடு) என்ற தமிழ்ச்சொல்லில் இருந்து இடையர் என்ற பெயர் வந்தது. 'முல்லை' என்ற நடு நாட்டில், புல்வெளி நிலத்தில் அவர்கள் வாழ்ந்து வந்ததை இது எடுத்துக்காட்டுகிறது."[20]**

என்பார் எஸ்.எஸ். சஷி.

**"பொதுவர் என்ற சொல் ஆயர் தம் நடுவுநிலைப் பண்பைக் குறிக்கும். தம் நிலத்தவர்களிடையேயும் வேற்று நிலத்தவர் களிடையேயும் மாறுபாடு ஏற்படும் போது அம்மாறுபாட்டினை அளவிற்சிறந்த ஆயர் காய்தல் உவத்தல் இன்றித் தீர்த்து நீதி வழங்கியமையால் பொதுவர் என்னும் பெயர் பெற்றனர் என்பது ஈண்டு நினைவிற் கொள்ளத்தக்கதாகும். ஆதலின் ஆயர்க்குப் பொதுவர் என்னும் பெயர் அவர் கொண்ட குணத்தால் ஏற்பட்டது."[21]**

என்பார் அ. முத்துசாமி.

**"கிடையர் என்றால் கால்நடைக்கூட்டம் என்று பொருள். அதற்கு உரியவர் என்ற பொருளில் கிடையர் என அழைக்கப்பெற்று நாளடைவில் அது இடையர் என ஆயிற்று."[22]**

என்பார் சி.ஈ. இராமச்சந்திரன்.

**"ஆடு மாடு மேய்ப்போர் இடையர் எனப்படுவர். இவர்களுள் வைணவர் நாமம் தறித்துக் கொள்வர். தம்மை யாதவர் எனக் கூறிக் கொள்வர்."[23]**

என்பார் ந.சி. கந்தையாபிள்ளை.

## 4.8. ஆயரும் அரசமரபு தோற்றமும்

முல்லை நிலத்தில் தான் முதன்முதலில் அரசமரபு தோன்றிற்று எனலாம்.

**"ஐந்திணை மக்களுள் ஆயர் தமக்குள் ஒரு தலைவனை அமைத்துக் கொண்டு அவனைக் 'கோ' என்னும் பெயரால் அழைத்தனர்."[24]**

என்பார் கு. முத்துராசன்.

**"முல்லை நிலம் உயர்ந்த தாழ்ந்த பகுதிகளிடையே அமைந்த மரங்கள் செறிந்த நிலப்பகுதி என்றும் ஆனிரைகளுக்குரிய பரந்த புல்வெளிகள் கொண்டது என்றும் நாகரிக வளர்ச்சிக்குக் காரணமாக அமையும் என்றும் முல்லை நிலத்தாயரிடையே வழங்கிய கோன், கோல் என்ற சொற்கள் முதற்கண் முறையே ஆயர் தலைவன், ஆயர்கோல் என்றுணர்த்த வழங்கி பின்பு நாட்டு மன்னன், செங்கோல் என்ற பொருள்களை வழங்கின."[25]**

என்பார் பி.டி. சீனிவாச ஐயங்கார்.

தன் ஆற்றலினால் இயற்கையின் கொடுமையையும் வென்றுவிட்ட வாடாத புகழுடைய தொன்மையான பாண்டியர் குடியோடு தோன்றியவர்கள் ஆயர். இதனை,

***"வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்***
***தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய***
***நல்லினத் தாயர் . . . . . "*** **(கலித்.104:4–6)**

எனக் கலித்தொகை உணர்த்தும்.

**"மனிதன் நாகரிகம் பெற்று வளரத் தொடங்கியது முல்லை நிலத்திலேயே ஆகும். மக்கள் ஓர் இனமாய்க் கூடிச் சமுதாயமாய் அமைந்தது முதல் முதலில் முல்லை நிலத்திலாகும். அதனால் தான் முல்லை நிலத்தில் பசுக்களை மேய்ப்பதற்கு உதவும் கருவியாகிய கோல் மக்களினத்தின் தலைவனுடைய ஆட்சிக்கு**

**அறிகுறியாக அமைந்தது. அவன் ஏந்திய கோல் அவனுடைய குடிமக்கள் வணங்கும் கோலாக நின்றது.''[26]**

என்பார் மு.வரதராசன்.

## 4.9. ஆயர் இருப்பிடம்

ஆயர்கள் குடியிருந்த ஊர் பாடி என்றும், சிறுபான்மை பாக்கம் என்றும் வழங்கப்பட்டது.

*“படுநீர்ப் புணரியின் பரந்த பாடி”* *(முல்லைப்.28)*

*“நன்றே காதலர் சென்ற ஆறே*
*குருந்தங் கண்ணிக் கோவலர்*
*பெருந்தண் ணிலைய பாக்கமு முடைத்தே”* *(ஐங்.439:1–3)*

என்னும் அடிகளின் மூலம் ஆயர்களின் இருப்பிடம் பாடி, பாக்கம் என வழங்கப்படுவதைக் காணலாம்.

*“ஆயர் பாடியின் அசோதை”*[27]

எனச் சிலப்பதிகாரமும் குறிப்பிடுவதைக் காணலாம்.

ஆயர்கள் வாழ்ந்த இல்லம் ‘குரம்பை’ என்று வழங்கப்பட்டது. அவர்களின் குடில்கள் வரகுப் புல்லால் வேயப்பட்டிருக்கும். இல்லின் முற்றத்தே மத்துத் தொங்க அதனைக் கன்று வாயால் சுவைக்கும். முற்றத்துக்கு முன்பாக நிழலுக்காகப் பந்தல் வேயப்பட்டிருக்கும். இதனை,

*“தீந்தயிர் கடைந்த திரள்கால் மத்தம்*
*கன்றுவாய் சுவைப்ப முன்றில் தூங்கும்*
*படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை”* (அகம்.87:3)

என அகப்பாடல் உணர்த்தும்.

ஆயரின் இல்லம் வரகுப் புல்லால் வேயப்பெற்று முற்றத்தில் குறுகிய கால்களை உடையது. சிறு தூற்றினை உடைய வாயிலையும், கழிகளால் கட்டப்பட்ட கதவினையும் கொண்டது. ஆடுகள் தின்பதற்காக முன்றில் தழைகள்

கட்டுப்பட்டுள்ளன. முற்றங்களில் தாமணி தொடுத்த நெடிய தாம்புகள் கட்டின குறுகிய முளைகள் அடிக்கப்பட்டிருந்தன என்பதை (பெரும்.147–151) அறிய முடிகிறது.

## 4.10. ஆயர் வகை

ஆயர்கள் மூவகைப்படுவர். பசுக்கூட்டங்களை மேய்த்தவர் நல்லினத்தாயர், கோவினத்தாயர்

*"நல்லினத்தாய ரொருங்கு தொக்கு"* **(கலித்.104:6)**

*"இருளை யிஃதொன்று காண்டை யிஃதொத்தன்*
*கோவினத் தாயர் மகன்"* **(கலித்.103:36–37)**

எனவும், எருமைகளை மேய்த்தவர் கோட்டினத்தாயர்

*"இருளை யிஃதொன்று காண்டை யிஃதொத்தன்*
*கோட்டினத் தாயர் மகன்"* **(கலித்.103:33–34)**

எனவும், ஆடுகளை மேய்த்தவர் புல்லினத்தாயர், இடைமகன்

*"இருளை யிஃதொன்று காண்டை யிஃதொத்தன்*
*புல்லினத் தாயர் மகன்"* **(கலித்.103:46–47)**

எனவும் வழங்கப்பட்டனர். இவ்வாறு நிரை காரணமாக ஆயரிடையே வெவ்வேறு பெயர்கள் நிலவியிருந்தன. இதனை,

**"முல்லை நிலத்து மக்களில் பசுக்களை மேய்த்தவர் கோவலர். பசும் பாலிலிருந்து நெய்யெடுத்தவர் அண்டர். ஆடுகளை மேய்த்தவர் இடையர்."[28]**

**"கோலாயன் என்ற சொல் கொல்ல, ஆயன் என்ற இரு சொற்கள் இணைந்து அமைந்து மாடு மேய்ப்பவர் என்ற பொருளைத் தருவது எனக் கூறுவர்."[29]**

என்னும் சான்றுகள் புலப்படுத்துவதைக் காணலாம்.

## 4.11. ஆயர் – சமூகத்தரப்பாகுபாடு

ஆயர்கள் நிரை மேய்த்தலைத் தொழிலாக உடையவர்கள். நிரையை ஆ, எருமை, ஆடு என மூவகையாகப் பிரித்துப் பேசுவர். சமூகப் பொருளாதார நிலையில் ஆட்டினத்து ஆயரை விட மாட்டினத்து ஆயரே மதிப்பும் செல்வாக்கும் உடையவராய் விளங்கினர். தலைவன் தன்னை ஆட்டினத்தாயர் குலத் தலைவனாகக் கூற, தலைவி அதனினும் சிறந்த மாட்டினத்தாயர் குலத்தாளாகத் தன்னைக் கூறிக் கொள்ளுதலை,

*". . . . . . . . . . . . . . . . . பகையஞ்சாப்*
*புல்லினத்தாயர் மகனேன் யற்றியான்;*
*ஒக்குமன்;*
*புல்லினத் தாயனைநீ யாயிற் குடஞ்சுட்டு*
*நல்லினத் தாய ரெமர்"* **(கலித்.113:6–10)**

எனக் கலித்தொகை மூலம் அறியலாம்.

## 4.12. நிரைமேய்த்தல் முறைமை

ஆயர்கள் நிரைகளை அதிகாலையிலே ஓட்டிச் செல்லுதல், கூட்டமாகச் செல்லுதல், நிரைகளை ஓட்டிச் செல்லும்போது உணவு மற்றும் பிற பொருள்களை எடுத்துச் செல்லல், உணவுப்பொருள்களைப் பகிர்ந்துண்ணல், நிரைகளைப் புல் மிகுந்த இடங்களில் மேய விடுதல், வேனிற்காலங்களில் பிற நிலங்களுக்கு ஓட்டிச் செல்லுதல், புல்லாங்குழல் ஊதல், மரங்களிலிருந்து தழைகளைப் பறித்துப் போடுதல், நீருக்காகப் பள்ளம் தோண்டுதல், மேய்ச்சலுக்குப் பிறகு வீட்டிற்கு ஓட்டி வருதல் அல்லது மேய்ச்சல் நிலங்களிலேயே தங்குதல், நிரைகளைப் பாதுகாத்தல் போன்றவை நிரை மேய்த்தல் முறைமையாகும்.

ஆயர்கள் அறம்புரியும் நெஞ்சத்தையுடையவர்கள் என்பதை,

*"அறவை நெஞ்சத் தாயர்"* **(புறம்.390:1)**

என்பார் ஔவையார்.

ஆயர்கள் பசுக்களை முல்லை நிலத்தில் பரக்க மேயவிட்டுச் சிறிய குன்றுகளிடத்தே மணம் வீசும் பூக்களை மாலையாகக் கட்டி மார்பிலே அணிந்து மகிழ்வர் என்பதை,

*"முல்லை வியன் புலம் பரப்பி கோவலர்*

*குறும்பொறை மருங்கின் நறும்பூஅயர"* **(அகம்.14:7–8)**

என அகப்பாடல் உணர்த்தும். ஆயர்கள் முல்லைப் பூவால் தொடுக்கப்பட்ட கண்ணியை அணிவர் என்பதை,

*"முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்"* **(பதிற்.21:20)**

எனப் பதிற்றுப்பத்து மூலம் அறியலாம்.

### 4.12.1. அதிகாலை ஓட்டிச் செல்லல்

ஆயர்கள் ஆநிரைகளை அதிகாலையிலேயே மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்வர். இதனை,

*"................... கன்று விட்டு*

*ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்*

*பெரும்புலர் விடியல்"* **(நற்.80:2–4)**

என நற்றிணை விளக்கும்.

### 4.12.2. கூட்டமாகச் செல்லுதல்

ஆயர் ஆநிரையை ஓட்டிச் செல்லும் போது கூட்டமாகச் செல்வர் என்பதை,

*"கணஞ்சால் கோவலர்"* **(அகம்.253:12)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 4.12.3. உணவு மற்றும் பிற பொருள்களை எடுத்துச்செல்லல்

ஆயர் காலையில் மாடுகளை மேய்ப்பதற்கு ஓட்டிச் செல்கையில் மூங்கில் குழாயில் தமக்குரிய உணவினைப் பெய்து காளையின் கழுத்தில் தொங்க விட்டுச் செல்வர். இதனை,

*“. . . . . . . . . . . . . . . . துளங்கிமில் நல்லேற்றுத்*

*தழூஉப்பிணர் எருத்தந் தாழப் பூட்டிய*

*அந்தூம் பகலமைக் கமஞ்செலப் பெய்த*

*துறுகாழ் வல்சியர்”* (அகம்.253:13–16)

*“. . . . . . . . . . . . . . . . . . .கோவலர்*

*மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி”* (அகம்.311:9–10)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 4.12.4. பகிர்ந்துண்ணல்

ஆயர் ஆடு மேய்க்கும் வேளையில் காட்டில் புதிய வழிப்போக்கர் வரும் போது அவர்களுக்கும் தாம் கொண்டு வந்திருந்த புளிச்சோற்றைப் பகிர்ந்தளிப்பர். இதனை,

*“. . . . . . . . . . . . . . . . தீம்புளி*

*செவியடை தீரத் தேக்கிளைப் பகுக்கும்”* (அகம்.311:10–11)

*“பல்யாட் டினநிரை எல்லினர் புகுனே*

*பாலும் மிதவையும் பண்ணாது பெறுகுவிர்”* (மலை.416–417)

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 4.12.5. புல் மிகுந்த இடங்களில் மேயவிடுதல்

முல்லைப்பூக் கண்ணியை அணிந்த பலவாகிய ஆநிரைகளை உடைய கோவலர்கள் புல் மிகுதியாக உள்ள பரந்த நிலத்திலே மேயவிடுவர் என்பதை,

*“முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்*

*புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பி”* (பதிற்.20:21–22)

எனப் பதிற்றுப்பத்து விளக்கும்.

### 4.12.6. வேனிற்காலங்களில் பிறநிலங்களுக்கு ஓட்டிச் செல்லுதல்

பசு, எருமை, ஆடு ஆகிய முந்நிரையையும் கூதிர்காலத்தில் தம்முடைய நிலத்தை விட்டு வேற்று நிலங்களுக்கு ஓட்டிச் செல்வர் என்பதை,

*"வார்கலி முனைஇய கொடுங்கோற் கோவல*

*ரேறுடை யினநிரை வேறுபுலம் பரப்பிப்*

*புலம் பெயர் புலம்பொடு கலங்கிக் கோட"* **(நெடு.3–5)**

என நெடுநல்வாடை மூலம் அறியலாம்.

மழையற்ற வேனிற்காலத்தில் புல் நிறைந்துள்ள இடங்களைத் தேடி ஆனிரைகளை ஓட்டிச் செல்வதை,

*"வேறுபுலம் படர்ந்த ஏறுடை இனத்தர்"* **(மலை.408)**

என மலைபடுகடாம் குறிப்பிடும்.

கோவலர் மழைக்காலத்தில் பெருமழையை வெறுத்து ஆநிரைகளை மேட்டிடத்திற்கு ஓட்டிச் செல்வர் என்பதை (நெடு.2–4) உணர்த்தும்.

### 4.12.7. புல்லாங்குழல் ஊதல்

வறண்ட பாலை நிலத்தின் புகுந்த பசுக்களை ஊது கொம்பினால் ஒலியெழுப்பி அவற்றை அவ்விடத்தினின்றும் விலக்கிக் கொன்றை மரத்தின் நிழலில் தங்கச் செய்து, பின் இசையைக் கல்லாத ஆயர் சிறிய மூங்கிலால் செய்த குழலினை ஊதி மகிழ்வர். இதனை,

*"வாடுபுலம் புக்கென, கோடுதுவைத்து அகற்றி*

*ஒல்குநிலைக் கடுக்கை அல்குநிழல் அசைஇ*

*பல்ஆன் கோவலர் கல்லாது ஊதும்*

*சிறுவெதிர்ந் தீம்குழற்"* **(அகம்.399:9–12)**

என அகப்பாடல் உணர்த்தும்.

ஆநிரைகளைக் கோவலர்கள் தமது குழலிசையினாலேயே தம்முடன் அழைத்துக் கொள்ளுதலை,

*“ஒழுகிய கொன்றைத் தீங்குழல் முரற்சியர்*

*வழூஉச் சொற் கோவலர் தத்தம் இனநிரை*

*பொழுதொடு தோன்றிய கார்நனை வியன்புலத்தார்”*

**(கலித்.106:3–5)**

எனக் கலித்தொகை குறிப்பிடும்.

கோவலன் சிறிய மூங்கிற்கழியைத் தேர்ந்தெடுத்துக் கடைக் கொள்ளியால் அதில் துளைகள் செய்து அந்த யாழை ஊதி இசை எழுப்பினான் என்பதைப் (பெரும்.176–179) புலப்படுத்தும்.

**“குழல் வேய்ங்குழல், அம்பற்குழல் என இரு வகைப்படும். அவற்றுள் வேய்ங்குழலே உயர்ந்தது. முல்லை நிலத்து ஆயர் அதனையே ஊதினர். பின் அது பிற நிலங்களிலும் பரவியது.”[30]**

என்பார் மா. இராசமாணிக்கனார்.

கோவலர் ஆநிரைகளை வளமான முல்லை நிலப்பரப்புகளில் மேயவிட்டு, வேய்ங்குழலை வாயின் கண் வைத்து முல்லைப்பண் இசைப்பர். இதனை,

*“. . . . . . . . . . . . . . . . . . . கன்றொடு*

*கறவைப் பல்லினம் புறவுதொறுகளக்*

*குழல்வாய் வைத்தனர் கோவலர்”* **(அகம்.354:3–5)**

என அகப்பாடல் குறிப்பிடும்.

மடிகோலிய உடையை உடுத்தியவரும் வளைந்த கோலைக் கையில் கொண்டிருப்பவருமாகிய கோவலர் மாலைப்பொழுதில் குழலினை இசைத்துக் கொண்டு பசுக்களை ஓட்டி வருவர் என்பதை (அகம்.54, 74) அறியலாம்.

### 4.12.8. இலை, தழைகளைப் பறித்துப் போடுதல்

வேனிற்காலத்தில் புல் வறண்டு போகும். இந்த இடரினை நீக்க கோவலர் ஆக்களுக்கு இலை, தழை வெட்டிப் போட்டுத் தொழில் புரிந்தமையினை,

*“அருவி மாறி யஞ்சுவரக் கருகிப்*

*பெருவறங் கூர்ந்த வேனிற் காலைப்*

*பசித்த வாயத்துப் பயனிரை தருமார்*

*பூவாட் கோவலர் பூவுட னுதிரக்*

*கொய்துகட் டழித்த வேங்கை”* **(புறம்.224:12–16)**

எனப் புறப்பாடல் தெளிவுறுத்தும்.

## 4.12.9. நீருக்காகப் பள்ளம் தோண்டுதல்

ஆயர்கள் பசுக்கூட்டம் நீர் உண்ணும் பொருட்டு விளைவின்றி விடப்பட்ட தரிசு நிலத்தின்கண் கற்களை உடைத்து கிணற்றினைத் தோண்டுவர். இதனை,

*“படுமணி இனநிரை உணீஇய கோவலர்*

*விடுநிலம் உடைத்த கலுழ்கண் கூவல்”* **(அகம்.321:7–8)**

*“நெடுவிளிக் கோவலர் கூவல் தோண்டிய*

*கொடுவாய் பத்தல் வார்ந்துகு சிறுகுழி”* **(அகம்.155:8–9)**

என்னும் அடிகள் விளக்கும்.

பசுக்கூட்டம் நீர் பருகுதற் பொருட்டுக் கோல்களால் பள்ளம் தோண்டுதலை,

*“கல்லாக் கோவலர் கோலிற் றோண்டிய*

*வானீர்ப் பத்தல். . . . .”* **(ஐங்.304:1–2)**

என ஐங்குறுநூறு குறிப்பிடும்.

குந்தாலியால் வெட்டப்பட்ட கிணற்றிலிருந்து நீரை இறைத்துச் சிறுகுழியில் ஊற்றுவர் என்பதை (நற்.240) அறியலாம்.

## 4.12.10. மேய்ச்சலுக்குப் பிறகு வீட்டிற்கு ஓட்டிவருதல்

கோவலர் பசுக்கூட்டங்களோடு நீர் தங்கிய மாலைகளைத் தலையில் சூடியவராய் ஊர் நோக்கி வருவர். இதனை,

*"................ கவர்கோல் கோவலர்*

*எல்லுப்பெயல் உழந்த பல்ஆன் நிரையொடு*

*நீர்திகழ் கண்ணியர் ஊர்வயின் பெயர்தர"* **(அகம்.264:4–6)**

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

மாலை நேரம் வந்ததும் ஆநிரைகளைக் கோவலர் மனை நோக்கிச் செலுத்துவர் என்பதை (அகம்.54) உணர்த்தும்.

மாலைப் பொழுதில் மணிகள் ஒலிக்க ஆக்கள் விரைந்து படரினும் கோவலர் இசை ஊதிப் பின்னே செல்வர். இதனை,

*"கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர*

*இன்னே வருவோர் தாயர்"* **(முல்லைப்.15–16)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

**4.12.11. மேய்ச்சல் நிலங்களிலே தங்குதல்**

ஆயர் ஆநிரைகளை வீட்டிற்கு ஒட்டி வராது மேய்ச்சல் நிலத்திலேயே தங்க வைப்பதும் உண்டு. கறவைக் கன்றுகளோடே கானகத்து இருப்பதை,

*"பல்பூ மிடைந்த படலைக் கண்ணி*

*யொன்றம ருடுக்கைக் கூழா ரிடையன்*

*கன்றமர் நிறையொடு கானத் தல்கி"* **(பெரும்.174–176)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

மேய்ச்சல் நிலங்களில் கொடிய விலங்கினங்கள் ஆநிரையைத் தாக்காத வண்ணம் பெரிய மரத்தினது வேரடிக் கட்டையைத் தீ வைத்து இரவு முழுவதும் எரியச் செய்து தீயைத் துணையாகக் கொண்டு தங்குவர் என்பதை (நற்.289, மலை.419) அறியலாம்.

இடையர் ஆட்டுக்குட்டிகளை மேய்ச்சல் நிலங்களிலே தங்க வைப்பதால் அங்கேயே பால் கறந்து வீட்டிற்குக் கொண்டு வந்து கொடுத்து விட்டுத் திரும்பப் போகும் போது கூழொடு போவர் என்பதை,

*"பறியுடைக் கையர் மறியினத் தொழியப்*

*பாலொடு வந்து கூழொடு பெயரும்*

*யாடுடை யிடைமகன்"* (குறுந்.221:2–4)

எனக் குறுந்தொகை குறிப்பிடும்.

## 4.12.12. நிரைகளைப் பாதுகாத்தல்

ஆயர் கள்வர்களிடமிருந்தும் விலங்குகளிடமிருந்தும் நிரைகளைப் பாதுகாப்பர். ஆறலை கள்வர் பசுக்களைத் தொழுவங்களின்றும் கவர்ந்து செல்வது உண்டு. ஆயர் பேராரவாரம் செய்து அவர்களைப் பின் தொடர்ந்து சென்று மீட்டு வருவர். இதனை,

*"அத்தக் கள்வர் ஆத்தொழு அறுத்தெனப்*

*பிற்படு பூசலின் வழிவழி யோடி"* (அகம்.7:14–15)

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

ஆயர்கள் புலிகள் பொருந்தியுள்ள காட்டுப்பகுதிக்கு மேய்ச்சலுக்காகக் கால்நடைகளை ஓட்டிச் செல்ல மாட்டார்கள் என்பதை,

*"சிறுதலை ஆயமொடு குறுகல் செல்லாப்*

*புலி துஞ்சு வியன்புலம்"* (புறம்.54:12–13)

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

இடையன் ஆட்டுக்குட்டியினைப் பாதுகாவல் செய்யக் கடைக் கோலிலிருந்து தீ எழுப்பி விறகில் பற்றச் செய்வர். அப்பொழுது ஆட்டுக்குட்டியைக் கவரப் பார்த்திருக்கும் குள்ளநரி அஞ்சி ஓடுமாறு வாயை மடித்துச் சீழ்க்கை ஒலி எழுப்புவர். இதனை,

*". . . . . . . . . . . . இடையன்*

*மடிவிடு வீளை கடிதுசென்று இசைப்ப*

*தெறிமறி பார்க்கும் குறுநரி வெரீஇ*

*முள்ளுடைக் குறுந்தூறு இரியப் போகும்"* (அகம்.274:3–11)

என்பார் இடைக்காடனார்.

இடையன் ஆட்டுக் குட்டிகளை ஒரு சேரத் தொகுத்து ஓலையால் செய்யப்பட்ட பாயை முதுகில் போட்டுக் கொண்டு முல்லை மலர்களைச் செங்காந்தள் மலர்களுடன் சேர்த்துத் தொடுத்த மாலையைச் சூடிக்கொண்டு கொள்ளியின் தீயில் அகங்கை காய்ந்திடக் குறுநரிகளை நீண்ட ஒலி எழுப்பி ஓட்டுவர் என்பதை (அகம்.94) உணர்த்தும்.

## 4.13. மகளிரும் மேய்த்தல் தொழில் செய்தல்

ஆயர் மட்டுமல்லாது ஆயர் மகளிரும் ஆநிரையை மேய்ப்பதற்காக ஓட்டிச் செல்வர். ஆயர் மகளிர் கன்று மேய்த்தலை,

*". . . . . . . . . . . . . . . . . . . . . நாளையும்*

*கன்றொடு சேறும் புலத்து"* (கலித்.110.22–23)

*"பாங்கருப் பாட்டங்கால் கன்றொடு செல்வேமெம்"*

(கலித்.116:1)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம். யாரும் நடமாடாத உச்சிக்காலத்தும் இம்மகளிர் கன்று மேய்ப்பர் என்பதை,

*"ஓஒ வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப் பாய்"* (கலித்.112:12)

எனக் கலித்தொகை குறிப்பிடும்.

மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்ல முடியாத இளங்கன்றுகளைத் தாம்பிற் பிணித்துக் குடிசை முற்றத்தில் கட்டி வைப்பர். பால் கறந்த கலத்தை மாற்றித் தூய்மை செய்து வைப்பர் என்பதை (கலித்.111) உணர்த்தும்.

ஆயர் மகளிர் புனத்திலிருக்கின்ற தமையனுக்கு உணவு கொண்டு செல்லுதலையும், ஆவினத்துடனிருக்கின்ற தந்தைகக்குக் கறவைக்கலம் கொண்டு

சென்று கொடுத்தலையும் தினையறுத்த வயலுள் தாய் விட்டிருக்கும் கன்றினை மேய்த்தலையும் வழக்கமாகக் கொள்வர். இதனை,

*"புனத்துளா னெந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ*
*இனத்துளா னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ*
*தினைக் காலுள் யாய்விட்ட கன்று மேய்க் கிற்பதோ"*

**(கலித்.108:31–33)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

## 4.14. புன்செய் உழவர்

முல்லை நில ஆயரில் சிலர் உழவராகவும் திகழ்ந்துள்ளனர். அவர்களின் குடிசை, வரகு வைக்கோலால் வேயப்பட்டிருக்கும். வீட்டு முற்றத்தில் குதிர்கள் அமைந்திருக்கும். முன் உள்ள பந்தரின்கண் மரத்திரிகை இடப்பட்டிருக்கும். கொட்டிலில் குறிய சகட்டுருளைகளோடு கலப்பையும் சார்த்தப் பெற்றிருக்கும். அதனால் வீட்டுச்சுவர் தேய்ந்து காணப்பெறும் என்பதை,

*"பிடிக்கணத் தன்ன குதிருடை முன்றிற்*
*களிற்றுத்தாள் புரையுந் திரிமரப் பந்தர்க்*
*குறுஞ்சாட் டுருளையோடு கலப்பை சார்த்தி*
*நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டிற்*
*பருவ வானத்துப் பாமழை கடுப்பக்*
*கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்"* **(பெரும்.186–191)**

எனப் பெரும்பாணாற்றுப்படை மூலம் அறியலாம்.

காடு கொன்று கொல்லையாக்கிய தினைப்புனத்தில் வரகின் கதிருடன் கூடிய தட்டைகளைத் தொகுத்துக் காளைகள் கொண்டு உதிரச் செய்வர். உதிர்ந்த வரகினை அகன்ற பாறையில் அள்ளிக் குவித்து அதனைத் திரிகையில் இட்டுத் திருகி சுளகினால் புடைத்து, அரிசியாக்கி உரலில் இட்டுத் தீட்டுவர் என்பதை

(அகம்.393) உணரலாம். பதமாகக் காய்ந்த அரிசியினை ஆயர்மகளிர் சுழலும் மரத்திரிகையில் இட்டுச் சுழற்றுவர் என்பதை,

*". . . . . . . . . . . . . . மனையோள்*
*ஐதுணங்கு வல்சி பெய்துமுறுக் குறத்த*
*திரிமரம் . . . . . . . "* (அகம்.224:11–13)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

**"சில ஆயர்குடி நாடோடியினர் தோட்டப்பயிர்களை மிகுதியாக விளைவிப்பவர்களாக உள்ளதால் மானிடவியலார் இவர்களைத் தோட்டப் பயிரிடுவோர் (Horticulturists) எனக் கூறுவர்."[31]**

என்பார் சீ. பக்தவத்சல பாரதி.

## 4.15. ஆய்ச்சியர் செயல்கள்

ஆயர் மகளிர் விடியற்காலையில் எழுந்து மத்தினைக் கொண்டு கயிற்றை வலித்து தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுப்பர். உறை தெறிப்பக் கடையும் மத்தின் ஒலியினை,

*"நாளுறை மத்தொலி"* (புறம்.257:13)
*"மத்து ரறிய மனை"* (பதிற்.26:3)
*"நள்ளிருள் விடியல் புள்ளெழப் போகிப்*
*புலிக்குரல் மத்தம் ஒலிப்ப"* (பெரும்.155–156)

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

வைகறைப்பொழுதில் விளம்பழம் இட்டு வைத்தலானே அதன் மணங்கமழ்கின்ற தயிர்ப்பானையைக் கயிறு ஆடித் தேய்த்தலால் மத்தின் தண்டு தேய்ந்திருக்கிறது. வெண்ணெய் தோன்றக் கடைதலால் தறியடியில் ஓசை முழங்கும். இதனை,

*"விளம்பழுங் கமழுங் கமஞ்சூற் குழிசிப்*

*பாசந் தின்ற தேய்கான் மத்த*

*நெய்தெரி யியக்கம் வெளில் முதன் முழங்கும்*

*வைகுபுலர் விடியல். . . . . . . "* (நற்.12:1–4)

என நற்றிணை உணர்த்தும். தயிர் கடையுங்கால் எழும் மிதப்பினை,

*"பால்கடை நுரையின் பரூஉ மிதப்பு"* (அகம்.224:6)

என்கிறது அகநானூறு.

### 4.15.1. உறை ஊற்றல்

ஆயர் மகளிர் பாலைக்காய்ச்சி நகத்தால் சிறிதளவு மோரை எடுத்து உறையிடும் செயலை,

*"மடப்பா லாய்மகள் வள்ளுகிர்த் தெறிந்த*

*குடப்பாற் சில்லுறை . . . . . . "* (புறம்.276:4–5)

எனப் புறநானூறு விளக்கும்.

### 4.15.2. மோர் விற்றல்

ஆயர் மகளிர் காலையில் சென்று மோர் விற்றலையும் மோர் விற்றுச் செல்வம் சேர்த்தலையும்,

*"பேரூருஞ் சிற்றூருங் கௌவை யெடுப்பவள்போல்*

*மோரோடு வந்தாள் . . . . . "* (கலித்.109:6–7)

*". . . . . . . . . . . . . .அளைமாறியாம்வருஞ்*

*செல்வம் . . . . . . "* (கலித்.106:44–45)

என்னும் அடிகள் உணர்த்தும்.

ஆயர் மகளிர் மோர் விற்ற பணத்தாலேயே தன் சுற்றத்தாரையும் காத்தார்கள் என்பதை,

*“. . . . . . . . . . . . . . . . ஆய்மகள்*

*அளை விலையுணவின் கிளையுடன் அருத்தி”* (பெரும்.162–163)

எனப் பெரும்பாணாற்றுப்படை மூலம் அறியலாம்.

வெண்ணெய், நெய் விற்றுக் கட்டிப்பொன் பெற்ற செல்வத்தைப் பிறவற்றிற்குப் பயன்படுத்தாது எருமைகளும் நாகுகளும் வாங்கப் பயன்படுத்தினர் என்பதை (பெரும்.169–171) உணர்த்தும்.

### 4.15.3. பண்டமாற்று

ஆயர் மகளிர் மோரினை விற்று அதற்கு ஈடாக நெல் முதலியவற்றைப் பெறுவர். இதனை,

*“புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ*

*நாண்மோர் மாறு நன்மா மேனிச்*

*சிறுகுழை துயல்வருங் காதிற் பணைத்தோட்*

*குறுநெறிக் கொண்ட கூந்த லாய்மகள்*

*ளளைவிலை யுணவிற் கிளையுட னருத்தி”* (பெரும்.159–163)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## 4.16. ஆயர் உணவு

வரகுச் சோற்றுடன் சிவந்த அவரை விதையின் பருப்பை அதிகமாக விட்டுத் துழாவி உணவு சமைப்பர் என்பதை,

*“கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்*

*நெடுங்குரற் பூளைப் பூவி னன்ன*

*குறுந்தாள் வரகின் குறளவிழ்ச் சொன்றிப்*

*புகரிணர் வேங்கை வீகண் டன்ன*

*வவரை வான்புகழுக் கட்டிப் பயில்வுற்று”* (பெரும்.191–195)

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

வரகுச் சோற்றையும் வேளைப்பூவைத் தயிரில் பெய்து செய்த புளிங்கூழையும் உணவாக ஆக்குவர். இதனை,

*"கவைக்கதிர் வரகி னவைப்புறு வாக்கல்*
*தாதெரு மறுகிற் போதொடு பொதுளிய*
*வேளை வெண்பூ வெண்டயிர்க் கொளீஇ*
*ஆய்மக ளட்ட வம்பளி மிதவை"* **(புறம்.215:1–4)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

செம்மறியாட்டினது பழுப்பு நிறம் வாய்ந்த முற்றிய தயிரை உலை நீராக்கிப் புது கொல்லையில் விளைந்த நன்கு குற்றிய வரகினது அரிசியை அதிற்போட்டு மழை மிகுதியாகப் பெய்தமையால் புற்றிலிருந்து வெளிவந்து அழிந்த ஈயலையும் அதில் இட்டுப் புளிப்பு வாய்ந்த சோற்றினை ஆக்குவர் என்பதை (அகம்.394) அறியலாம்.

நன்னனது மலைநாட்டு முல்லை நிலத்தார் அவரை விதைகளையும், மூங்கில் அரிசியையும், மேட்டு நிலத்தில் விளைந்த நெல்லின் அரிசியையும் புளி கரைக்கப்பட்ட உலையிற் பெய்து குழைந்த புளியங் கூழாக்கி உண்டனர். இதனை,

*"செவ்வீ வேங்கைப் பூவின் அன்ன*
*வேய்கொள் அரிசி மிதவை சொரிந்த*
*சுவல் விளை நெல்லின் அவரையும் புளிங்கூழ்"* **(மலை.434–436)**

என மலைபடுகடாம் தெளிவுறுத்தும்.

**"முல்லை நில மக்கள் வாழும் இடங்களில் மான்களும் முயல்களும் வான்கோழிகளும் வாழ்வன. அவற்றைக் கொண்டு அவர் உண்பர். பால் தயிர் முதலியவற்றைக் கொடுத்துப் பண்டமாற்றினால் பெறப்படும் தானிய வகைகளையும் உண்பர்."**[32]

என்பார் சே. நமசிவாயம்.

## 4.17. விருந்தோம்பல்

ஆனின் இனிய பாலையும் மேட்டு நிலத்தில் விளைந்த நெல்லரிசி விரவி அவரை விதையாற் சமைத்த புளியங்கூழையும் விருந்தினர்க்கு அளிப்பர் என்பதை,

*"பகர்விரவு நெல்லின் பலவரி யன்ன*
*தகர்விரவு துருவை வெள்ளையொடு விரைஇக்*
*கல்லென் கடத்திடைக் கடலி னிரைக்கும்*
*பல்யாட் டினநிரை யெல்லினர் புகினே*
*பாலு மிதவையும் பண்ணாது பெறுகுவிர்"* **(மலை.413–417)**

என மலைபடுகடாம் மூலம் அறியலாம்.

ஆயர் மகளிர் விருந்தினரை எதிர்கொண்டு போற்றும் விருப்பம் மிகுந்தவர் என்பதை (நற்.142, 221) உணர்த்தும்.

நண்டினது சிறிய பார்ப்புத் திரளையொத்த தினைச் சோற்றையும் ஆவின் பாலையும் விருந்தினர்க்கு அளிப்பர் என்பதை,

*"மடிவாய்க் கோவலர் குடிவயிற் கேப்பி*
*னிருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப் பன்ன*
*பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்"* **(பெரும்.166–168)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

மண்ணாற் செய்த பானையில் வரகரிசியை இட்டுச் சுனை நீரை ஊற்றி, கற்களை அடுக்கி வைத்த அடுப்பில் உலை ஏற்றிச் சோற்றினை ஆக்கி, அச்சோற்றினைப் பாலுடன் கூட்டி வழிச் செல்வார்க்கு அளித்து அவர்தம் பசி போக்கினார் என்பதை (அகம்.393) அறியலாம். ஆய்ச்சியர் விருந்தினர்க்கு மகிழ்ந்து பால் சொரிவர். இதனை,

*"வளைஆன் தீம்பால் மிளைசூழ கோவலர்*
*வளையோர் உவப்பத் தருவனர் சொரிதலின்"* **(மலை.409–410)**

என்னும் அடிகள் மெய்ப்பிக்கும்.

## 4.18. ஏறுதழுவுதல்

காளையை அடக்குதல் ஏறுதழுவுதல் எனப்படும். ஆயர் மகளிர் காளையை அடக்கும் இளைஞனையே திருமணம் செய்து கொள்ள விரும்புவர். இதனை,

*"கொல்லேற்றுக் கோடு அஞ்சுவானை மறுமையும்*
*புல்லாளே ஆயமகள் . . . . . ."* **(கலித்.103:63–64)**

*". . . . . . . . . .உயிர்காவல் கொண்டு*
*நளிவாய் மருப்பஞ்சும் நெஞ்சினர்*
*தோய்தற்கு எளியவோ ஆயமகள் தோள்"* **(கலித்.103:69–71)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

> **"ஏறுதழுவுதல் என்பது கொல்லேறுகளைத் தழுவி அடக்குதலாகும். இது ஏறுகோள் என்றும் வழங்கும். இவ்வேறு தழுவலே இன்று காளைப்போர், சல்லிக்கட்டு, மஞ்சுவிரட்டு எனப்பல பெயர்களில் வழங்குகிறது. மேனாடுகளில் இவ்விழா Bull Fight என்று வழங்குகிறது. ஏறுதழுவி மணக்கும் இம்மணத்தினை நச்சினார்க்கினியர் எண்வகை மணத்துள் ஆசுரம் என்ற மணத்தின் பாற்படும் என்பர். ஆசுரமாவது கொல்லேறு கொண்டான் இவளை எய்தும்; வில்லேற்றினான் இவளை எய்தும்; இன்னதொரு பொருள் தந்தான் இவளை எய்தும் என இவ்வாறு சொல்லிக் கொடுப்பதாகும்."[33]**

என்பார் வி.சி. சசிவல்லி.

முல்லை நிலத்திற்கேயுரிய ஏறுதழுவலின் போது காளைகளை விரட்டப்பறை அறைவர். இதனை,

*"பறையெழுந் திசைப்பப் பல்லவ ரார்ப்ப"* **(கலித்.104:29)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

ஏறு தழுவச் செல்லும் ஆயர்கள் தங்கள் வீரச் செயலைச் செய்யும் முன் வழிபாடு செய்வர் என்பதை (கலித்.101) உணர்த்தும்.

ஏறு தழுவிய பின்னர் தனக்கு உரியவன் வென்றமைக்காக ஆய்ச்சி மாயோனை வணங்குதலை,

*"பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய*
*ஆடுகொள் நேமியாற் பரவுதும்"* **(கலித்.105:71–72)**

எனக் கலித்தொகை விளக்கும்.

ஆயர்கள் கொல்லேற்றுக் கொம்புகளைத் தழுவுகிறனிடத்து, சீர்வரிசை கேட்டுப் பெறுவதில்லை என்பதை,

***"விலைவேண்டா எம்மினத்து ஆயர் மகளிர்***
***கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்***

**(கலித்.103:71–72)**

என்னும் அடிகள் குறிப்பிடும்.

**"ஏறு தழுவுதல் முல்லைத்திணை பாற்படும் களவொழுக்க நிலையினதே. காளையினை அடக்கிய செயல் கற்பு வாழ்விற்கு வழியமைப்பதனையே முல்லைத்திணைப் பாடல்கள் உணர்த்து கின்றன."[34]**

என்பார் க. காந்தி.

**"முல்லை நில ஆயர்கள் ஆடு, மாடு போன்ற விலங்கினங்களைப் புலி முதலிய விலங்குகளிடமிருந்தும், கள்வரால் கவர்ந்து கொள்ளாமல் இருத்தல் பொருட்டும் இவர் தம் வீரம் இன்றியமையாததாயிற்று. இதனால் இந்நிலத்து ஆயர்கள் தம் மகளிரைத் திருமணம் செய்ய முன் வருவோரின் ஆற்றலை அறிந்தே மகட்கொடை நேரும் வழக்கத்தை உடையோராக இருந்தனர். இக்குல மகளிரும் காதல் வயப்பட்டாலும் அத்தகைய**

**தறுகண்மை உடையானையே கணவனாக ஏற்குமொரு கோட்பாடு உடையவராகவும் இருந்தனர்."[35]**

எனச் சசிவல்லி அவர்கள் முல்லை நிலமக்கள் ஏறுதழுவி மணம் செய்வதற்குரிய காரணத்தைக் குறிப்பிடுவார்.

ஏறு தழுவுவோர் வெற்றியினைப் பாராட்டி மன்றத்திடத்தே குரவைக் கூத்தாடுவர். இதனை,

*"காஞ்சித்தா துக்கன்ன தாதெரு மன்றத்துத்*
*தூங்குங் குரவையுள். . . . ."* **(கலித்.108:60–61)**

எனக் கலித்தொகை விளக்கும்.

**"முல்லை நிலத்தில் ஏறு தழுவிய பின்னர் மகளிரும் மைந்தரும் ஆடும் குரவை பழங்குடி மக்களின் சடங்கு எனலாம். சிலப்பதிகாரத்தில் காணும் ஆய்ச்சியர் குரவை சமயத் தொடர்பு கொண்டு மாறுதல் பெற்ற பிற்காலத்தது எனலாம். ஆய்ச்சியர் குரவையில் மந்திரம் இடம் பெறவில்லை. அது வணக்கமாக (Prayer) அமைந்தது"[36]**

என்னும் கருத்தும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

## 4.19. வழிபாடு

ஆயர்கள் தங்கள் வீட்டில் புது மணலைப் பரப்பி, இல்லத்திற்குச் செம்மண்ணைப் பூசி எருமையின் கொம்பைத் தெய்வமாக வைத்து வழிபட்டுப் பின்பு மணமகனுக்கும் மணமகளுக்கும் மணம் முடித்தனர். இதனை,

*"தருமணல் தாழப்பெய் தில்பூவ லூட்டி*
*எருமைப் பெடையோ டெமரீங் கயரும்*
*பெருமண மெல்லாந் தனித்தே யொழிய*
*வரிமணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த*

*திருநுத லாயத்தாயர் தம்முட் புணர்ந்த*

*ஒரு மணந் தானறி . . . . . "* **(கலித்.114:12–17)**

எனக் கலித்தொகை உணர்த்தும்.

## 4.19.1. நடுகல் வழிபாடு

நிரை மீட்டுத் தந்த கரந்தை வீரனை நன்றிக்கு அறிகுறியாகக் கோவலர் தொழுகின்றனர். அவ்வீரனை,

*". . . . . . கன்றொடு*

*கறவை தந்து பகைவ ரோட்டிய*

*நெடுந்தகை"* **(புறம்.264:4–6)**

எனப் புறப்பாடல் புகழ்கின்றது. அவ்வீரனுக்குக் கோவலர் வேங்கைப் பூவைப் பனையோலையாலே தொடுத்துத் தழைவிரவிக் கட்டிய மாலை சூட்டி வழிபாடு செய்கின்றனர். இதனை,

*"ஓங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப்*

*போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்*

*பல்லான் கோவலர் படலை சூட்டக்*

*கல்லாயினையே . . . . . . "* **(புறம்.265:2–5)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

நிரைகாத்துக் கல்லானவனுக்கு நீராட்டி, மஞ்சள் பூசி, அத்திப்பட்டை நாரினால் சிவந்த கரந்தைப் பூவைத் தொடுத்து மாலை அணிவித்ததை (அகம்.269) உணர்த்துகிறது.

## 4.20. மருதநில மக்கள்

வயலும் வயல் சார்ந்த பகுதியும் மருதம் ஆகும். இங்கு வாழும் மக்களை உழவர் என வழங்குவர். உழவரைக் 'களமர்' 'தொழுவர்' எனவும் வழங்குவர்.

## 4.21. தொழில்

மருதநில மக்கள் தொழில் வேளாண்மை ஆகும். இருள் புலருகின்ற விடியற் காலத்தில் எருதுகளைக் கொண்ட உழவர்கள் நெற்பயிர் நட்ட கழனியில் அரிதாளையடைய நிலவு பிளவுபடும்படி உழுவர். அவர்கள் ஏர் ஓட்டும் போது எழுப்பும் ஓசை இடந்தோறும் பரவியது. இதனை,

***"வைகுபுலர் விடியல் மைபுலம் பரப்ப***
***கருநனை அவிழ்ந்த ஊழுறு முருக்கின்***
***எரி மருள் பூஞ்சினை இனச்சிதர் ஆர்ப்ப***
***நெடு நெல் அடைச்சிய கழனி ஏர்புகுத்து***
***குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர***
***அரிகால் போழ்ந்த தெரிபகட்டு உழவர்"*** **(அகம்.41:1–6)**

***"பேர்உறை தலைஇய பெரும்புலர் வைகறை***
***ஏர்இடம் படுத்த இருமறுப் பூழிப்***
***புறம்மாறு பெற்ற பூவல் ஈரத்து"*** **(அகம்.194:1–3)**

என அகப்பாடல் உணர்த்தும்.

மழை பெய்தமையால் ஈரம் காய்வதற்கு முன்பே உழுது அந்நிலத்தைப் பயிர் செய்வதற்கு ஏற்ற விளைநிலமாகச் சமன்படுத்த விரைகின்ற உழவனின் மனதை,

***"ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத்து***
***ஓர்ஏர் உழவன் போல***
***பெருவி துப்பு உற்றன்றால்"*** **(குறுந்.131:4–6)**

எனக் குறுந்தொகை தெரிவிக்கும்.

### 4.21.1. ஆழ உழுதல்

உழவர் நன்கு நடைபயின்ற பெரிய எருதுகளை வீட்டின் வாயிலேயே நுகத்தில் பூட்டிக் கொண்டு செல்வர். கலப்பையின் முழுக்கொழுவும் மறையும்படி அமுக்கி உழுவர். இதனை,

*"குடிநிறை வல்சிச் செஞ்சா லுழவர்*
*நடை நவில் பெரும்பகடு புதவிற் பூட்டிப்*
*பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சி*
*லுடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றித்*
*தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை*
*யரிபுகு பொழுதி னிரியல் போகி"* **(பெரும்.197–202)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

### 4.21.2. மறுகால் உழுதல்

நெல் அறுத்து நீங்கப்பெற்ற அழகிய இடமகன்ற வயலின் கண்ணே மறுபடியுழுத ஈரமுடைய சேற்றில் விதைக்கும் வண்ணம் விதைகளை உழவர் கடகப் பெட்டியில் எடுத்துச் செல்வர். இதனை,

*"அரிகால் மாறிய அங்கண் அகல்வயல்*
*மறுகால் உழுத ஈரச் செறுவின்*
*வித்தொடு சென்ற வட்டி"* **(நற்.210:1–4)**

என நற்றிணை தெரிவிக்கும். உழவர் விதைப்பதற்குப் பயன்படுத்திய விதைகளைத் தொழிலாளர்கள் விதைத்து விட்டு நெல்லைப் பெற்றுச் செல்வர் என்பதை,

*"வித்திய உழவர் நெல்லொடு பெயரும்"* **(ஐங்.3:4)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

### 4.21.3. பல்கால் உழுதல்

உழவர்கள் நாற்று நடுவதற்காகப் பலமுறை உழுவர். அவ்வாறு உழுதலைச் **'செஞ்சால் உழவு'** என்பர். இதனை,

*"செஞ்சால் உழவர்"* **(நற்.340:7)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

### 4.21.4. நல்லேர்தெரிதல்

உழவர் நல்லெருதுகளைத் தேர்ந்தெடுத்து ஏர்களில் பூட்டுவர் என்பதை,

*“ஈரச் செவ்வி யுதவின வாயினும்*

*பல்லெருத் துள்ளு நல்லெருது நோக்கி*

*வீறுவீ றாயு முழவன்”* **(புறம்.289:1–3)**

என்பார் கழாத்தலையார்.

வயல்களில் நெல்லையும் கரும்பையும் பயிர் செய்தனர் என்பதை,

*“குறுந்தாள் வரகின் குறளவிழ்ச் சொன்றிப்*

*புகரிணர் வேங்கை வீகண் டன்ன”* **(பெரும்.193–194)**

எனப் பெரும்பாணாற்றுப்படை மூலம் அறியலாம்.

### 4.21.5. ஏர்ப்பாட்டு

எருதுகளை அடித்து உழும்போது உழவர் ஏர்மங்கலப்பாட்டு பாடுவர் என்பதை,

*“எருதெளி களமர் ஓதை”* **(மலை.469)**

என மலைபடுகடாம் தெரிவிக்கும்.

### 4.21.6. நாற்று நடுதல்

எருதுகளை உடைய உழவர் விடியற்காலத்தே வரால்மீன் குழம்புடன் அரிசிச் சோற்றை உண்டு உழத்தியரோடு நீர்மிக்க சேற்றிலே நாற்றுகளை நடுவதற்குச் செல்வர் என்பதை,

*“. . . . . . . . . . . . தன்புலர் விடியல்*

*கருங்கண் வராஅற் பெருந்தடி மிளிர்வையொடு*

*புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு*

*கவர்படு கையை கழும மாந்தி*

*நீருறு செறுவின் நாறுமுடி அழுத்தநின்*

*நடுநரோடு சேறி . . . . . .”* **(நற்.60:3–8)**

என நற்றிணை தெளிவுறுத்தும். உழவர் சேற்றில் முடியாக வீசிய நாற்றை நடுவர் என்பதை,

*"உழாஅ நுண்டொளி நிரவிய வினைஞர்*

*முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவிற்"* (பெரும்.211–212)

எனப் பெரும்பாணாற்றுப்படை மூலம் அறியலாம். நாற்று நடும்போது நன்கு இடைவெளி விட்டு நடுவர். அவ்விடைவெளியினால் பயிர்கள் கிளைத்துச் செழித்துப் பால்கட்டி வளர்ந்தன என்பதை (மலை.110) அறியலாம்.

### 4.21.7. களையெடுத்தல்

களைக்கொட்டினைக் கையிற் கொண்டு களையை வெட்டி எறிபவரைத் '**துளர் எறி வினைஞர்**' என்கிறது அகநானூறு. இவர்கள் கள்ளை அருந்திக் களிப்புடன் திரிந்தனர் என்பதை,

*"கோடுடைக் கையர் துளர் எறி வினைஞர்*

*அரியல் ஆர்க்கையர் விளைமகிழ் தூங்க"* (அகம்.184:13–14)

என அகப்பாடல் உணர்த்தும்.

### 4.21.8. நண்டு, எலித்தொல்லைகள்

முற்றிய நெற்கதிர்களை நண்டுகளும் எலிகளும் கொய்து கொண்டு அவற்றின் வளைகளில் வைத்துக் கொள்ளுதலை,

*"செந்நெல்அம் செறுவில் கதிர்கொண்டு களவன்*

*தண்ணகமண் அளைச் செல்லும்"* (ஐங்.27:1–2)

*"விளைபதச் சீறிய நோக்கி வளைகதிர்*

*வல்சி கொண்டளை மல்க வைக்கும்*

*எலி . . . . . . . . "* (நற்.190:1–3)

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 4.21.9. பறவைகளின் தொல்லை

மயில் கூட்டம் கதிர்களில் உள்ள நெல்மணிகளைக் கொத்தி விடுதலும் உண்டு. அதை உழவர் மகளிர் விரட்டுவதை,

*"செந்நெ லுண்ட பைந்தோட்டு மஞ்ஞை*

*செறிவளை மகளி ரோப்பலிற்"* (புறம்.344:1–2)

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

### 4.21.10. காவல்

வயலை மாடுகள் மேயாமல் காவல் காக்கக் காவலர் இருப்பர். அக்காவலர்கள் நெல்லின் இளங்கதிரைத் தின்னும் பசுவின் பசியினைப் பார்த்து அதற்குக் கரும்பினை உண்பித்துப் பின்னர் பாகர் கொடியறுத்து அத்துடன் பகன்றைக் கொடியையும் சேர்த்துக் காஞ்சி மரத்தில் கட்டி வைத்தனர். இதனை,

*"செழுஞ்சேய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்*

*மூதா தின்றல் அஞ்சி காவலர்*

*பாகல் ஆய்கொடிப் பகன்றையொடு பரீஇ*

*காஞ்சியின் அகத்து கரும்பு அருத்தி யாக்கும்"*

(அகம்.156:3–6)

என்னும் அடிகள் மெய்ப்பிக்கும்.

### 4.21.11. நெல்லரிதல்

உழவர்கள் பயிரிடப்பட்ட நெல் யானை நின்றாலும் மறையக்கூடிய அளவிற்கு மூங்கிலென உயரமாக வளர்ந்ததை,

*"களிறு மாய்க்கும் கதிர்க்கழனி"* (மது.247)

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

உழவர்கள் அறுவடை செய்யத் தொடங்கும் போது நெற்கதிர்களுள் கூடுகட்டி வாழும் சிறு பறவைகளும் பிற உயிரினங்களும் ஓடி உய்யும் பொருட்டு பறையை முழக்குவர். தண்ணுமை என்னும் கருவியையும் கொட்டுவர் என்பதை (அகம்.40, மலை.471, நற்.350, அகம்.204, புறம்.348) உணர்த்தும்.

விளைந்த நெல்லினைக் கூறிய வாயுடைய அரிவாளால் அரிவர் என்பதை,

*"நெல்லரி தொழுவர் கூர்வா ளுற்றென"* **(நற்.195:6)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

உழவர்கள் நெற்கதிர்களை அறுத்துக் கொண்டு தேவையற்ற களைகளை விட்டுவிடுவர் என்பதை,

*"நீடின வரம்பின் வாடிய விடினும்"* **(குறுந்.309:3)**

எனக் குறுந்தொகை உணர்த்தும்.

## 4.21.12. நெற்கட்டுகளும் நெற்களமும்

நெல்லினை அறுத்த பிறகு நெற்கதிர் கட்டுக்களை இறுக்கிக் கட்டி களங்களுக்குக் கொண்டு செல்வர். இதனை,

*"அரிஞர் யாத்த அலங்குதலைப் பெருஞ்சூடு*
*கள்ளார் வினைஞர் களஞ்தொறும் மறுகும்"* **(அகம்.84:12–13)**

என்னும் அடிகள் குறிப்பிடும்.

நீண்ட கதிர்களைக் கொண்ட நெற்கட்டுக்களைக் களத்தில் வெற்றிடம் இல்லாதவாறு கொண்டு வந்து குவிப்பர். இதனை,

*"வெண்ணெல் அரிநர் பெயர்நிலைப் பின்றை*
*இடைநிலம் நெரிதரு நெடுங்கதிர்"* **(அகம்.236:2–3)**

என்பார் பரணர். முற்றின செந்நெல்லை அறுத்து அகன்ற களங்களில் போராக உயர்த்துவர் என்பதை,

*"பைதற விளைந்த பெருஞ்செந் நெல்லின்*
*றூம்புடைத் திரடா டுமித்த வினைஞர்*
*பாம்புறை மருதி னோங்குசினை நீழற்*
*பலிபெறு வியன்கள மலிய வேற்றிக்*
*கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந் தாடுந்"*

**(பெரும்.230–234)**

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

### 4.21.13. கடாவிடுதல்

கதிர் அடித்த நெற்தாளினைக் கீழே வட்டமாகப் பரப்பி அதில் நான்கைந்து மாடுகளை ஒன்றாகப் பிணைத்துச் சுற்றி வரச் செய்து, உதிர்ந்த நெல்லை ஒன்றாகக் குவிப்பர். இதனை,

*"நாட்கடா வழித்த நனந்தலைக் குப்பை"* **(புறம்.353:9)**

என்னும் அடியின் மூலம் அறியலாம். எருமைகள் கடாவிடப்படுதலால் மிதித்து உதிர்த்த செந்நெல்லின்கண் மரக்கால்களை அளத்தற்காக நெற்குவையில் செருகி வைத்திருப்பர் என்பதை,

*"பரூஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்*
*அம்பண வளவை யுறைகுவித் தாங்கு"* **(பதிற்.71:4–5)**

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

### 4.21.14. நெல்லடித்தலும் தூற்றலும்

இருள் புலர்கின்ற விடியற்காலத்தில் உழவர்கள் கூளங்களை மேகங்கள் போன்று மாதிரம் அனைத்தும் மறையும் வண்ணம் தூற்றினர் என்பதை,

*"கங்குல் ஓதைக் கலிமகிழ் உழவர்*
*பொங்கழி முகந்த தாஇல் நுண்துகள்*
*மங்குல் வானின் மாதிரம் மறைப்ப*
*வைகுபுலர் விடியல் வைபெயர்த்து ஆட்டி"* **(அகம்.37:2–5)**

என அகப்பாடல் உணர்த்தும்.

வைக்கோலையும் கூலத்தையும் அதனிடத்தினின்று நீக்கி அந்நெல்லை மேல் காற்றினால் கையால் தூவித் தூற்றுவர். அந்நெற்பொலி வடதிசைக்கண் உள்ள மேருமலை போலத் தோன்றும் என்பதை,

*"வையுந் துரும்பு நீக்கிப் பைதறக்*

*குடகாற் றெறிந்த குப்பை வடபாற்*

*செம்பொன் மலையிற் சிறப்பத் தோன்றும்"* **(பெரும்.239–241)**

எனப் பெரும்பாணாற்றுப்படை தெரிவிக்கும்.

கள்ளுண்டு களித்த உழவர் நெற்கதிரின் போரினைப் பிரித்துக் கடாவிட்டனர். பின்னர் அக்கடாக்களைக் கட்டவிழ்த்து விட்டு விரைய வீசும் காற்றில் நெல்லைத் தூற்றுவர். பறந்து சென்ற தூசும் தும்பும் அருகிலிருக்கும் உப்பு காயும் உப்பளத்திலுள்ள சிறிய பாத்திகளில் சென்று வீழ்ந்தது. இதனை,

*"நீர்சூழ் வியன்களம் பொலிய போர்புஅழித்து*

*கள்ஆர் களமர் பகடுதலை மாற்றி*

*கடுங்காற்று எறிய போகிய துரும்புஉடன்"* **(அகம்.366:2–4)**

என்பார் குடவாயிற் கீரத்தனார்.

### 4.21.15. உழுந்துப்பயிர்

சுழற்சி முறையில் நெல் மற்றும் தினை போன்றவற்றிற்கு அடுத்து உழுந்து பயிரிடப்பட்டதையும் தடியைப் பயன்படுத்தி அடித்து, உழுந்து பருப்பைப் பிரித்தெடுத்ததையும்,

*"பூழ்க்கா லன்ன செங்கால் உழுந்தின்*

*ஊழ்ப்படு முதுகாய் உழையினங் கவரும்*

*அரும்பனி அச்சிரந் தீர்க்கும்"* **(குறுந்.68:1–3)**

*"உழுந்துடைக் கழுந்தின்"* **(குறுந்.384:1)**

என்னும் அடிகள் உணர்த்தும். உழுந்து முன்பனிப் பருவத்தே மலரெடுத்துக் காய்க்கும் இயல்பிற்று என்பதை,

*"இரும்பனிப் பருவத்து மயிர்க்காய் உழுந்து"* **(நற்.89:5)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

## 4.22. உழவர் மகளிர் செயல்கள்

களையெடுத்தல், நெல் குற்றுதல் போன்றவை உழவர் மகளிர் செயல்களாகும்.

### 4.22.1. களையெடுத்தல்

உழத்தியர் பயிரிடத்தே வளர்ந்த ஆம்பலும் நெய்தலும் ஆகிய களையை எடுப்பர். இதனை,

*"கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்*
*சிறுமா னெய்த லாம்பலொடு கட்கும்"* **(புறம்.61:1–2)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

### 4.22.2. நெல்குற்றுதல்

உழவர் மகளிர் வேண்டும் பொழுது நெல்லை எடுத்துக் குற்றி அரிசியாக்குவர். இதனை,

*"அடுமகண் முகந்த வளவா வெண்ணெல்*
*கொடிமா ணுலக்கைப் பரூஉக்குற் றரிசி"* **(புறம்.399:1–2)**

எனப் புறப்பாடல் தெளிவுறுத்தும். நெல்லினை இரும்புப் பூணிட்ட உலக்கையால் குற்றி அரிசியாக்கினர் என்பதை,

*"விருங்கா முலக்கை யிரும்புமுகந் தேய்த்த*
*வவைப்புமா ணரிசி யமலைவெண் சோறு"* **(சிறு.193–194)**

எனச் சிறுபாணாற்றுப்படை மூலம் அறியலாம்.

## 4.23. உழவர் பழக்கவழக்கங்கள்

உழவர்களிடம் கள் குடிக்கும் பழக்கம் இருந்தது. உழவர்கள் நெற்களங்களில் தொழிற்களைப்புத் தீர மாமரத்தில் காய்களைக் கிளைகளினின்றும் கொத்தாகக் கிள்ளி எடுத்து அவற்றைப் புதிய குடங்களில் இட்டு அவற்றொடு புளிக்கும் பதனைச் சேர்த்து அவற்றை வெயிலில் வைத்துப் பதப்படுத்தி அதனை அருந்தினர். இதனை,

*"வளியோடு சினைஇய வண்தளிர் மாஅத்துக்*
*கிளிபோல் காய கிளைத் துணர் வடித்து*

*புளிப்பதன் அமைத்த புதுக் குடமலிர்நிறை*

*வெயில் வெரிந் நிறுத்த பயில்இதழ்ப் பசுங்குடை*

*கயம் மண்டு பகட்டின் பருகி. . . . ."* **(அகம்.37:7–11)**

என அகப்பாடல் உணர்த்தும்.

உழவர்கள் தாங்களே தயாரிக்கும் கள் மட்டும் அல்லாமல் கள் விற்கும் மகளிர் களங்களில் கொண்டு வந்து தரும் கள்ளையும் குடித்தனர் என்பதை,

*". . . . . . . . . . . . பசும் பொதித்தேறல்*

*இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கடொறும்"* **(மலை.463–464)**

என மலைபடுகடாம் தெளிவுறுத்தும்.

கள்விற்போர் கள்ளோடு வாளை மீனின் தடியை வரால் மீனின் தடியொடு கலந்து கொடுத்தனர் என்பதை,

*"வலையோர் தந்த விருஞ்சுவல் வாளை*

*நிலையோ ரிட்ட நெடுநாள் டூண்டிற்*

*பிடிக்கை யன்ன செங்கண் வராஅற்*

*றுடிக்க ணன்ன குறையொடு விரைஇப்*

*பகன்றைக் கண்ணி பழையர் மகளிர்"* **(மலை.455–459)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## 4.24. உழவர் உணவு

கொள்ளு பயறும் பாலுடன் கலந்து ஆக்கிய அவிழ்க்கஞ்சி, அவல், பழஞ்சோறு, அரிசிச்சோறு, நண்டுக்குழம்பு போன்றவை உழவரின் உணவாக அமைந்தன. உழவர்கள் கொள்ளும் பயறும் பாலுடன் கலந்து ஆக்கிய அவிழ்க்கஞ்சியை உண்பர். இதனை,

*"கொள்ளொடு பயறு பால்விரைஇ வெள்ளிக்*

*கோல் வரைந்தன்ன வால்அவிழ் மிதவை"* **(அகம்.37:12–13)**

என்னும் அடிகள் தெளிவுபடுத்தும்.

அடுப்பில் பாலை உலையாக வார்த்து, நெல்லின் வளைந்த கதிரை முறித்து உலக்கையால் பச்சை அவலை இடிப்பர் என்பதை (அகம்.141, குறுந்.238)அறியலாம். விடியற்காலையில் பழஞ்சோற்றை உணவாகக் கொள்வர் என்பதை,

*". . . . . . . . . வைகிற்*

*பழஞ்சோ றயிலும் . . . . . ."* **(புறம்.399:10–11)**

எனப் புறப்பாடல் மூலம் அறியலாம்.

வெண்ணெல் அரிசிச்சோறு சமைத்து அதனை நண்டின் கலவையோடு உண்பர் என்பதை,

***"அவைப்புமா ணரிசி யமலைவெண் சோறு***

***கவைத்தா ளலவன் கலவையொடு பெறுகுவிர்"*** **(சிறு.194–195)**

எனச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடும்.

கைக்குத்தலரிசிச் சோறும், புளிக்குழம்பும், வரால் இறைச்சியும், சுறாமீனின் கொழுத்த கறியும், வள்ளைக் கீரையும், பாகற்காயும், அவ்வவற்றின் இனத்தோடு கலந்து மூடி, ஆவியிலே சமைத்த சோறு உண்பர். இதனை,

***"ஓங்குசினை மாவின் றீங்கனி நறும்புளி***

***மோட்டிரு வராஅற் கோட்டுமீன் கொழுங்குறை***

***செறுவின் வள்ளை சிறுகொடிப் பாகற்***

***பாதிரி யூழ்முகை யவிழ்விடுத் தன்ன***

***மெய்களைந் தினனொடு விரைஇ"*** **(புறம்.399:4–8)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

வயலிடத்தே பொய்கையிற் கிடைத்த பருத்த வாளைமீனைத் துணைக்கறியாகக் கொண்டு புது நெல்லின் வெண்சோற்றை விலாப் புடைக்கத் தின்று மகிழ்வர் என்பதை,

***"மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட***

***பழன வாளைப் பரூஉக்கட் டுணியல்***

*புதுநெல் வெண்சோற்றுக் கண்ணுறை யாக*

*விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி"* (புறம்.61:3–6)

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

## 4.25. நெய்தல் நில மக்கள்

கடலும் கடல் சார்ந்த பகுதியாகிய நெய்தல் நில மக்களைப் பரதவர் என வழங்குவர்.

**"பரதவர் என்ற சொல் 'பர' என்ற பகுதி அடியாகப் பிறந்த பரவை (கடல்) என்ற சொல்லோடு தொடர்புடையது. பரவை, பரப்பு என்ற சொற்கள் விரிதல் என்று பொருள்படும். பொருட் சிறப்புக் குறிக்கும் 'து' என்ற உறுப்புப் 'பர' என்னும் அடிச்சொல்லோடு சேரப் 'பரது' என்ற சொல் பிறக்கும். இதனோடு 'அர்' விகுதி சேர்ந்தமையால் 'பரதர்' என்னும் சொல் பிறந்திருக்கலாம்."[37]**

என்பார் மொ. அ. துரை அரங்கசாமி.

பரதவர் வலைகொண்டு மீன்பிடிப்பதால் வலைவர், வலைஞர் எனவும் அழைக்கப்பட்டனர்.

## 4.26. பரதவர் குடியிருப்பு

பரதவர் குடியிருப்புகள் பாக்கம் என அழைக்கப்பெறும். காய்ந்த புல்லால் வேயப்பட்ட குறிய இறப்பினையுடைய (தாழ்வாரம்) குடிசைகளில் வாழ்வர். இதனை,

*"புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்து*

*இனமீன் வேட்டுவர். . . . . "* (அகம்.270:2–3)

*"குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்"* (அகம்.210:1)

எனவும், அவர்களின் குடிகள் புலால் நாற்றம் கமழும் என்பதை,

*"புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை"* (அகம்.200:2)

*"இரும் புலாக் கமழும் சிறுகுடி பாக்கத்து"* (அகம்.70:2)

எனவும் வரும் அடிகள் உணர்த்தும். முள்ளிச் செடிகளால் வேய்ந்த குறுகிய கூரையுடைய சிறுகுடிகளிலும் வாழ்ந்தனர் என்பதை,

*"முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்*
*கொழுமீன் கொள்பவர் பாக்கம்"* **(நற்.207:2–3)**

என நற்றிணை குறிப்பிடும்.

**"கடற்கரை ஓரங்களில் இவர்கள் வாழ்ந்த குடியிருப்புகள் பட்டினம் எனப்படும். சிறு குடியிருப்புகள் பாக்கம் எனப்படும்."[38]**

எனச் சு. வித்தியானந்தன் அவர்கள் நெய்தல் நில மக்களின் குடியிருப்புப் பற்றிக் குறிப்பிடுவார். வேழக்கோலை நிரைத்து மரக்கொம்புகளை இடையிடையே கலந்து, தாழை நாரால் கட்டித் தருப்பைப் புல்வேயப்பட்ட குறிய தாழ்வாரமுடைய குடில் பரதவர் குடில் என்பதை,

*"வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇ*
*தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த*
*குறியிறைக் குரம்பை பறியுடை முன்றில்*
*கொடுங்காற் புன்னை கோடுதுமித்து இயற்றிய*
*பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தர்"* **(பெரும்.263–267)**

எனப் பெரும்பாணாற்றுப்படை தெரிவிக்கும். ஓங்கி உயர்ந்ததும், கள்ளினைத் தருவதுமான பனை மரங்களின் நடுவில் உள்ளது பரதவர் சிறுகுடிப் பாக்கம் என்பதை,

*"ஓங்கித் தோன்றும் தீம்கள் பெண்ணை*
*நடுவண துவே . . . . . . . .*
*. . . . . . . சிறுகுடிப்பாக்கம்"* **(நற்.323:1–6)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## 4.26.1. குடிலைச் சுற்றி தூண்டிற்கோல்கள்

போரில் இறந்துபட்ட மறவர்க்கு வீரக்கல் நட்டுப் பலியுணவு படைக்கும் போதும், அக்கல்லினைச் சூழ வேல்களை நிரலே நட்டு, உட்புறமாகக் கேடயங்களை

வரிசை ஒழுங்கிற் பொருத்தியது போன்று பரதவர் சிறுகுடில் தூண்டிற் கோல்கள் சார்த்தப்பட்டிருக்கும் குறுகிய கூரையுடையது. இதனை,

*"கிடுகு நிரைத்து எஃது ஊன்றி*
*நடுகல்லின் அரண் போல*
*நெடுந்தூண்டிலின் காழ்சேர்த்திய*
*குறுங்கரைக் குடிநாப்பண்*
*நிலவு அடைந்த இருள் போல*
*வலை உணங்கும் மணல் மூன்றில்"* **(பட்.78–83)**

எனப் பட்டினப்பாலை குறிப்பிடும்.

### 4.26.2. வீட்டைச் சுற்றி வேலி

பரதவர் பாக்கம் முற்றிய பனையோலைகளையும் முட்களையும் சேர்த்துக் கட்டப்பட்ட வேலிக்குள் உயர்ந்த பனைமரங்கள் சூழ்ந்த வெண்மணல் மேட்டிலுள்ளது. இதனை,

*"ஒலிகா வோலை முள்மிடை வேலி*
*பண்ணை இவரும் ஆங்கண்*
*வெண்மணல் படப்பை எம்அழுங்கல் ஊரே"* **(நற்.38:8–10)**

*"பூவிரி புன்னை மீதுதோன்று பெண்ணைக்*
*கூஉம் கண்ணஃதே. . . . . . .*
*. . . . . . . . . . . . நல் ஊரே"* **(அகம்.310:12–17)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 4.27. பரதவர் தொழில்

மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல், முத்தெடுத்தல், வாணிகத்தொழில், பயிர்த்தொழில் முதலிய தொழில்களில் பரதவர் ஈடுபட்டிருந்தனர்.

### 4.27.1. மீன்பிடித்தல்

பரதவர் தோணியில் சென்று மீன் வேட்டையாடுதலை,

*"வாள்வாய்ச் சுறவின் பணித்துறை நீந்தி*
*நாள்வேட்டு எழுந்த நயனில் பரதவர்*
*வைகுகடல் அம்பி . . . . . ."* **(அகம்.187:21–23)**

என அகப்பாடல் தெரிவிக்கும்.

பரதவர் கடல், கழிமுகங்கள் என்ற இரண்டு இடங்களில் மீன் பிடித்தனர். கடலில் மீன் பிடிக்கும்போது பெருவலைகளைப் பயன்படுத்தி மீன் பிடித்தனர். மீன் பிடித்தலை மீன் வேட்டம் என்றே குறிப்பிடுகின்றனர்.

## 4.27.1.1. பெருவலை

வலிய கயிற்றால் பின்னிய பெரிய வலையைக் கொண்டு மீன்பிடிக்கச் செல்லுதலை,

*"வடிக்கதிர் திரித்த வன்ஞாண் பெருவலை*
*இடிக்குரல் புணரிப் பௌவத் திடுமார்"* **(நற்.74:1–2)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

உறுதிமிக்க வலையினை வெஞ்சுறா முன்னாளில் கிழித்துச் சிதைத்ததனால், அதனைப் பழிவாங்கும் பொருட்டு விரட்டி அடித்துப் பிடித்து வெற்றியோடு வீடு திரும்பினர் என்பதை,

*". . . . . . . . . . . . . செங்கோல்*
*கொடுமுடி அவ்வலை பரியப் போகிய*
*கோட்சுறாக் குறித்த முன்பொடு*
*வேட்டம் வாயாது எமர்வா ரலரே"* **(நற்.215:9–12)**

என நற்றிணை விளக்கும்.

## 4.27.1.2. தூண்டிலால் மீன்பிடித்தல்

காற்று கடுமையாக வீச, பரதவர் அக்காற்றுக்கு ஏற்பத் தோணியைப் பதமாய் இயக்கிக் கொண்டிருந்தனர். அளவற்ற சுறாமீன்கள் அகப்பட்டன. இரவு முழுவதும்

தூண்டிலைக் கொண்டு வேட்டையாடிப் பின்னர் வைகறைப்பொழுதில் மீன் வளத்தோடு கரை திரும்பினர் என்பதை,

*". . . . . . . . . . . . . வளைநீர்க்*
*கடுஞ்சுறா எறிந்த கொடுந்திமிற் பரதவர்*
*வாங்குவிசை தூண்டில் ஊங்குஊங்கு ஆகி*
*வளிபொரக் கற்றை தாஅய் நளிசுடர்*
*நீல்நிற விசும்பின் மீனொடு புரைய"* **(நற்.199:5–10)**

என்னும் அடிகள் குறிப்பிடும்.

### 4.27.1.3. மீன்பிடித் தொழிலில் சிக்கல்கள்

பெருங்காற்று, சுறாமீன் முதலியவற்றால் வலை கிழிந்து மீன்பிடித்தொழிலில் சிக்கல்கள் ஏற்படும். பரதவர் தம் படகுகளில் வலைகளையேற்றிக் கொண்டு கடலுக்குச் சென்றனர். உறுதி வாய்ந்த முறுக்கிய கயிற்றால் முடிக்கப்பட்ட வலையினைக் கடலில் பாய்ச்சினர். சிறிது நேரத்தில் வலையைப் பற்றி இழுக்க வலை மிகக் கனத்துத் தோன்றியது. மேலும் மேலும் இழுக்க வலை மிக இலேசாகத் தோன்றியது. வலையைச் சுறாமீன் சிதைத்துவிட்டது. ஏமாற்றமுற்ற பரதவர் கிழிந்த வலையினை மனை முற்றத்திலிருந்த தாழைமரத்தில் விரித்துப்போட்டுத் தொழிலுக்குப் போகாமல் இருந்தனர். இதனை,

*". . . . . . . . . திண்திமில்*
*எல்லுத் தொழில் மடுத்த வல்வினைப் பரதவர்*
*கூர்வளிக் கடுவிசை மண்டலிற் பாய்புஉடன்*
*கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை*
*தண்கடல் அசைவளி எளிதொறும் வினைவிட்டு*
*முன்றில் தாழை தூங்கும்"* **(அகம்.340:18–23)**

என அகப்பாடல் தெரிவிக்கும்.

### 4.27.1.4. கூட்டமாகச் செல்லுதல்

இளையரும் முதியருமாகிய பரதவர்கள் தம் சுற்றத்துடன் சேர்ந்து கடலில் மீன் பிடிக்கச் செல்வர். ஆரவாரித்து வலைகளை இழுத்து மீன்களைத் தொகுப்பர். தொகுத்த மீன்களைத் தம்மிடம் வந்து இரந்தோரின் வெற்றுக் கலங்கள் நிறையுமாறு வழங்குவர். எஞ்சியவற்றைப் பல கூறுகளாகப் பகுத்து விலை கூறி விற்பர். இதனை,

*"நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலை*
*கூல்பாடு அழிய இனமீன் முகந்து*
*துணைபுணர் உவகையர் பரதமாக்கள்*
*இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி*
*உப்புஒய் உமணர் அருந்துறை போக்கும்*
*ஒழுகை நோன்பகடு ஒப்பக் குழீஇ*
*அயிர் திணி அடைகரை ஒலிப்ப வாங்கி*
*பெருங்களம் தொகுத்த உழவர் போல*
*இரந்தோர் வறுங்கலம் மல்க வீசி*
*பாடுபல அமைத்து கொள்ளை சாற்றி"* **(அகம்.30:1–10)**

என்னும் அடிகள் குறிப்பிடும்.

### 4.27.1.5. கழிமுகங்களில் மீன்பிடிக்கும் வலை

கழிகளில் மீன் பிடிக்கும் வலைகளில் நேரிய சிறுகோல்களைப் பொருத்திப் பிணைப்பர். அக்கோல்கள் வலையின் அடிப்பகுதியும் மேற்பகுதியும் மடிந்து இணைந்து விடாமல் விரித்துப் பிடித்திருக்கும். விரித்திருக்கும் வலை வாயினுள் மீன்களும் இறாக்களும் சென்று சிக்கிக் கொள்ளும் என்பதை,

*"இருங்கழி முகந்த செங்கோல் அவ்வலை*
*முடங்குபுற இறவொடு இனமீன் செறிக்கும்"* **(அகம்.220:16–17)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 4.27.1.6. பரதவச்சிறுவர் மீன்பிடித்தல்

பரதவச் சிறுவர் ஆழமற்ற கழிமுகங்களில் மீன் பிடித்துப் பழகியதை,

*“. . . . . . . . . . நாட்புலம் போகிய*
*கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்*
*நுண்ஞாண் அவ்வலைச் சேவல் பட்டென*
*அல்குறு பொழுதின் மெல்குஇரை மிசையாது*
*பைதல் பிள்ளை தழீஇ ஒய்யென*
*அம்கண் பெண்ணை அன்புற நரலும்*
*சிறுபல் தொல்குடிப் பெருநீர்ச் சேர்ப்பன்”* **(அகம்.290:1–8)**

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

### 4.27.1.7. பகலில் மீன்பிடித்தல்

பரதவர் பகல், இரவு ஆகிய இரு நேரங்களிலும் மீன் பிடிப்பர். பரதவ இளைஞர் மீன் பிடிக்கும் படகில் மேலேறிக் கடலில் சென்று சுறாமீனையும் மற்றும் பிற மீன்களையும் பிடித்து அவற்றைத் துண்டித்து இறைச்சிகளை நிரப்பிய தோணியராய் மணற்பரப்பில் இறங்குவர். இதனை,

*“வெந்திறல் இளையவர் வேட்டெழுந் தாங்குத்*
*திமில்மேற் கொண்டு திரைச்சுரம் நீந்தி*
*வாள்வாய்ச் சுறவொடு வயமீன் கெண்டி*
*நிணம்பெய் தோணியர் இகுமணல் இழிதரும்*
*பெருங்கழிப் பாக்கம் . . . . . . .”* **(நற்.111:5–9)**

என நற்றிணை உணர்த்தும். பரதவர் பகலில் சில சமயம் மீன் பிடிக்கச் செல்லாதிருந்தமையை,

*“. . . . . . . திமில் தொழில் மறப்ப”* **(அகம்.260:4)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

### 4.27.1.8. இரவில் மீன்பிடித்தல்

பரதவர் இரவில் விளக்குகளுடன் படகில் மீன் பிடிக்கச் செல்வர். இதனை,

*“எல்லிமிழ் பனிக்கடல் மல்குசுடர்க் கொளீஇ*
*எமரும் வேட்டம் புக்கனர்”* (நற்.67:8–9)

*“திண்திமில் பரதவர் ஒண்சுடர்க் கொளீஇ*
*நடுநாள் வேட்டம் போகி”* (நற்.388:4–5)

எனவும், இரவில் மீன்பிடிக்கப் படகில் தீச்சுடர் ஏற்றுவர். அவ்வாறு ஏற்றிய விளக்கு இளங்கதிரின் ஒளி போல விளங்கும் என்பதை (அகம்.65, 100, நற்.219) அறியலாம்.

பரதவர் தாம் பிடித்து வந்த கொழுவிய மீன்களை மீன் கொழுப்பாலாகிய நெய்யை வார்த்துக் கிளிஞ்சலில் ஏற்றிய சிறிய சுடர்விளக்கின் ஒளியில் மணற்பரப்பில் வந்து குவிப்பர். இதனை,

*“நெடுங்கடல் அலைத்த கொடுந்திமில் பரதவர்*
*கொழுமீன் கொள்கை அழிமணல் குவைஇ*
*மீன்நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய*
*சிறுதீ விளக்கில் . . . . .”* (நற்.175:3–4)

என நற்றிணை தெளிவுறுத்தும்.

### 4.27.1.9. கரைகளில் தீச்சுடர்

இரவில் கடலில் சென்ற பரதவர் திசை மாறிச் சென்று விடா வண்ணம் கரையின் உயர்ந்த இடத்தில் தீச்சுடர் கொளுத்துவர். இதனை இப்பொழுது கலங்கரை விளக்கம் என்கிறோம். கடலில் சென்ற பரதவர் நீண்ட தூண்களையுடைய மாடத்தில் எரியும் தீச்சுவாலையை நோக்கி வருவர் என்பதை,

*“நெடுங்கால் மாடத் தொள்ளெரி நோக்கி”* (பட்.111)

எனப் பட்டினப்பாலை குறிப்பிடும்.

### 4.27.1.10. எறியுளி கொண்டு மீன்பிடித்தல்

பெரிய மீன்களை எறியுளி கொண்டு தாக்கிப் பிடிப்பர். இதனை,

*"எறியுளி பொருத ஏமுறு பெருமீன்"* (அகம்.210:2)

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

வளைந்த திமிலையுடைய பரதவர் ஆரவாரத்தோடு கொம்புடைய சுறாமீனை எறியுளியை வீசி எறிந்து பிடிப்பர் என்பதை,

*"கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறியுளி*
*முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்*
*தாங்குஅரு நீர்ச்சுரத்து எறிந்து வாங்குதிசைக்*
*கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய"* (குறுந்.304:1–4)

எனக் குறுந்தொகை விளக்கும்.

### 4.27.1.11. பகுத்துண்ணும் மரபு

பரதவர்கள் மணலையுடைய கரைப்பக்கத்தில் வந்து ஒதுங்கிக் கிடக்கும் சுறா மீனை அறுத்துத் தாமும் தின்று பாக்கத்தில் பலர்க்கும் பகுத்துக் கொடுப்பர் என்பதை,

*"பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்*
*மோட்டு மணல் அடைகரைக் கோட்டுமீன்கெண்டி*
*மணம் கமழ் பாக்கத்துப் பகுக்கும்"* (அகம்.10:10–12)

எனவும், மீன்வேட்டை நன்கு வாய்த்ததால் பரதவர் அயிலை மீன்களை எல்லார்க்கும் பகுத்துக் கொடுத்ததை,

*"கொடுந் திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென*
*இரும்புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்*
*குறுங்கண் அவ்வலைப் பயம் பாராட்டி*
*கொழுங்கண் அயிலை பகுக்கும்"* (அகம்.70:1–3)

எனவும் வரும் அடிகளின் மூலம் பரதவர்களின் பகுத்துண்ணும் மரபை அறிய முடிகிறது.

### 4.27.1.12. படகுகளைப் பிணைக்கும் துறைகள்

மீன்பிடித்துத் திரும்பிய படகுகள் பனைமரத்தின் ஓலைகளைக் கொண்டு வேலியமைக்கப்பட்ட மணல் பரந்த முற்றத்தருகேயுள்ள புன்னையின் அடிமரத்தில் நீளக்கயிறு கொண்டு கட்டப்பட்டு அசைந்து நிற்கும் என்பதை,

*“. . . . . . . . . . . . . கானல்*
*ஆடரை ஒழித்த நீடிரும் பெண்ணை*
*வீழ்கா வோலைச் சூழ்சிறை யாத்த*
*கானல் நண்ணிய வார்மணல் முன்றில்*
*எல்லி அன்ன இருள்நிறப் புன்னை*
*நல்அரை முழுமுதல் அவ்வயின் தொடுத்த*
*தூங்கல் அம்பி . . . . ”* **(நற்.354:1–9)**

என நற்றிணை விளக்கும்.

### 4.27.1.13. பயனற்ற படகுகள்

கடலின் அலைகள் அடிக்கடி மோதுவதாலும் மணலில் தேய்வதாலும் முறிந்து பழுதடைந்து பயனற்றுப் போகும். அத்தகைய படகுகள் அருகிலுள்ள புன்னை மரத்தில் கட்டப்பட்டு இருக்கும் என்பதை,

*“ஈண்டுபெருந் தெய்வத்து யாண்டுபல கழிந்தென*
*பார்த்துறைப் புணரி அலைத்தலின் புடைகொண்டு*
*மூத்துவினை போகிய முரிவாய் அம்பி . . . .*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*. . . . . . . புன்னைஅம் கொழுநிழல்*
*முழவுமுதல் பிணிக்கும் துறைவ”* **(நற்.315:1–8)**

என்னும் அடிகள் குறிப்பிடும்.

### 4.27.1.14. மீன் உணக்கல்

மீன்களை அதிகமாகப் பிடித்து வந்த பரதவர் அவற்றை நுண்ணிய மணலிடத்தே புலர்த்துவர் என்பதை,

*"நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்*

*நுணங்குமணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்"*

**(அகம்.300:1–2)**

என அகப்பாடல் தெளிவுறுத்தும். பரதவர் பிடித்து வந்த மீன்களும் இருங்கழியில் முகந்து வந்த இறாக்களும் நிலவொளி போலும் எக்கர் மணலில் புலர்ந்து, பாக்கம் எங்கணும் புலால் நாற்றம் வீசுவதை,

*"பெருங்கடற் பரதவர் கோள்மீன் உணங்கலின்*

*இருங்கழிக் கொண்ட இறவின் வாடலொடு*

*நிலவுநிற வெண்மணல் புலவப் பலவுடன்*

*எக்கர் தோன்றும் பரிக்கும் துறைவன்"* **(குறுந்.320:1–4)**

எனக் குறுந்தொகை விளக்கும்.

புன்னையின் நறுமணம் அப்புலால் நாற்றத்தை மாற்றும் என்பதை,

*"உரவுக்கடல் உழந்த பெருவலைப் பரதவர்*

*மிகுமீன் உணக்கிய புதுமண லாங்கண்*

*கல்லென் சேரிப் புலவல் புன்னை*

*விழவுநாறு விளங்கிணர் விரிந்துடன் கமழும்*

*அழுங்கல் ஊர் . . . ."* **(நற்.63:1–5)**

என வரும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 4.27.2. உப்பு விளைவித்தல்

பரதவர் உப்பு விளைவித்தல் தொழிலிலும் ஈடுபட்டனர்.

**"கடற்கரையிலும், கழிக்கரையிலும் உள்ள உவர் நிலத்தில் சிறுசிறு பாத்திகளமைத்து அவற்றில் கடல் நீரினையும், உப்பங்கழி**

**நீரையும் பாய்ச்சி உப்பு விளைப்பர். சிலவிடங்களில் உவர் நிலத்தடியிலேயே மிகுந்த உப்புச் சத்துள்ள நீரூற்றுக்கள் உள்ளன. அங்கெல்லாம் அந்நீரை வெளியே கொணர்ந்து பாத்திகளில் பாய்ச்சுவர். ஞாயிற்றின் வெம்மையால் நீர் வற்றி உப்புப் பூத்துக்காணும். இவ்வாறு விளையும் இடங்கள் உப்பளம் என வழங்கப் பெறும்.''[39]**

என்பார் தி. முத்துகண்ணப்பன். பரதவர் உப்பளத்தில் சிறுசிறு பாத்திகளில் உப்பினை விளைவிப்பர். இதனை,

***"காயல் சிறுதடிக் கண்கெடப் பாய்தலின்"*** **(அகம்.366:5)**

என்பார் குடவாயிற் கீரத்தனார்.

கடல்நீரைப் பாய்ச்சி உப்பு விளைவிப்பர் என்பதை,

***"நேர்கட் சிறுதடி நீரின் மாற்றி***
***வானம் வேண்டா வாழ்வின்எம்***
***கானலஞ் சிறுகுடி . . . . . "*** **(நற்.254:10–12)**

என நற்றிணை குறிப்பிடும்.

பரதவர் உப்பினை ஏரால் உழாமலே கையால் பாத்தி கட்டி விளைவிப்பர். இதனை,

***"உவர்விளை உப்பின் உழாஅ உழவர்"*** **(நற்.331:1)**
***"இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த***
***வெண்கல் உப்பு . . . . . "*** **(அகம்.140:2–3)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 4.27.2.1. உமணர்

உப்பு விற்கும் தொழிலில் ஈடுபட்டுள்ளவரை உமணர் என்பர். அவர்கள் எப்பொழுதும் ஊர்ந்து செல்லும் உப்பு வண்டியோடு கூட்டங்கூட்டமாய் காடும் மலையும் கடந்து செல்லும் நிலையிலா வாழ்க்கையினை உடையவர்கள் என்பதை,

*"உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை*
*மலையுய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கைக்*
*கணங்கொள் உமணர் . . . .* " **(நற்.138:1–3)**

என நற்றிணை குறிப்பிடும்.

வெங்கதிர் வெயிலால் விளைந்த கல்லுப்பினை ஏற்றிக்கொண்டு வண்டிகள் வரிசையாக மெல்லச் செல்ல உமணர்கள் ஆரவாரத்தோடு உடன் சென்று கொண்டிருப்பர். இதனை,

*" . . . . . . . . . புன்னை*
*நல்லரை முழுமுதல் அவ்வயிற் றொடுத்த*
*தூங்கல் அம்பித் தூவலஞ் சேர்ப்பில்*
*கடுவெயில் கொதித்த கல்விளை யுப்பு*
*நெடுநெறி யொழுகை நிலைசெலப் பார்ப்போர்"* **(நற்.354:5–9)**

என்னும் அடிகள் உணர்த்தும். உமணர் உப்பினை விலை கூறி விற்றுக் கொண்டே கதிரவனின் வெம்மையால் வெடித்த குன்றங்களையும் கடந்து செல்வர். கையில் வண்டியில் பூட்டிய கடாக்களை விரைந்து ஓடத் தூண்டும் தாற்றுக்கோலினை ஏந்தி இருப்பர் என்பதை,

*"பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடி பரதவர்*
*இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த*
*வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி*

*என்றூழ் விடர குன்றம் போகும்*

*கதழ்கோல் உமணர் . . . . . "* (அகம்.140:1–5)

என அகப்பாடல் குறிப்பிடும்.

### 4.27.2.2. உப்பு விற்கும் தொழிலில் ஏற்படும் சிக்கல்

உமணர் கல்லுப்பை வண்டியில் ஏற்றி மணல் வழியைக் கடக்கும் போது சக்கரங்கள் அடிக்கடி புதைந்து விடும். புதைந்த சக்கரத்தை மீண்டும் தூக்கிப் பெயர்த்து முன்னோக்கிச் செலுத்துங்கால் பேரொலி எழுப்புவர். அவ்வோசைக்கு அஞ்சி வெண்குருகு பறந்தோடும். இதனை,

*". . . . . . . . . . . . . உமணர்*

*வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்*

*கணநிரை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்*

*மணல் மடுத்து உரறும் ஓசைக் கழனிக்*

*கருங்கால் வெண்குருகு வெரூஉம்"* (நற்.4:7–11)

என நற்றிணை தெரிவிக்கும்.

### 4.27.2.3. பண்டமாற்று

உமணரின் இளமகள் ஒருத்தி வீதியின் மருங்கே கையிலுள்ள ஒளிவளை ஒலிக்க வீசி நடந்து உப்பு விற்கப் புறப்பட்டாள். கல்லுப்புத் தருவேன் நெல்லினைக் கொடுங்கள் என்று விலை கூறி விற்றலை,

*"உமணர் காதல் மடமகள்*

*சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி*

*'நெல்லின் நேரே வெண்கல் உப்பு' எனச்*

*சேரி விலைமாறு கூறலின்"* (அகம்.140:5–8)

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

### 4.27.3. முத்துக்குளித்தல்

பரதவர்கள் முத்துக்குளிக்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர்.

**“பரதவர்கள் தமிழகக் கடற்கரையில் பேராதிக்கம் கொண்டு வாழ்ந்தவர்கள். முத்துக் குளிக்கும் தொழிலிலும், வாணிகத்திலும் முழு உரிமை பூண்டிருந்த ஓராற்றல் மிகு இனமாகப் பல்லாண்டுகள் இருந்துள்ளனர்.”[40]**

என்னும் கூற்றும் அதை மெய்ப்பிப்பதைக் காணலாம்.

பரதவர்கள் கடற்பரப்பில் தம்மைத் தாக்காவாறு கொல்லும் தன்மை வாய்ந்த சுறாமீனை ஒதுக்கி விட்டு நீருள் மூழ்கி வலம்புரிச் சங்கினை எடுப்பர். இதனை,

***“இலங்கு இரும் பரப்பின் எறிசுறா நீக்கி***
***வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவற்”*** **(அகம்.350:10–11)**

என்பார் சேந்தன் கண்ணனார்.

முத்தின் விலை கூறி விற்றலை,

***“வளைபடு முத்தம் பரதவர் பகரும்”*** **(ஐங்.195:1)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

கடலில் முத்துக்களை வாரிக்கொண்டு வந்து கரையிடத்து ஊர்ப்பாக்கம் பலருக்கும் பகுத்துக் கொடுப்பர். இதனை,

***“. . . . . . . . . . . . . . . விரிதிரைக்***
***கண்திரள் முத்தம் கொண்டு ஞாங்கர்த்***
***தேன்இமிர் அகன்கரைப் பகுக்கும்***
***கானல்அம் பெருந்துறைப் பரதவர்”*** **(அகம்.280:11–14)**

என்பார் அம்மூவனார்.

முத்தும் சங்கும் மூழ்கித் திரட்டியதுடன் பரதவர்கள் கடலில் விளையும் பவளத்தையும் எடுத்தனர் என்பதை,

*"தாழ்அடும்பு மலைந்த புணரிவளை ஞரல*

*இலங்குநீர் முத்தமொடு வார்துகிர் எடுக்கும்*

*தண்கடற் பரப்பை. . . . ."* **(பதிற்.30:6–8)**

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

### 4.27.4. வாணிகத்தொழில்

பரதவர் வாணிகத்தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர்.

**"வாணிகத்தொழில் புரிபவர் வணிகர் எனப்பட்டனர். பரதவர்கள் மீன், உப்பு, சங்கு, முத்து இவற்றைக் கொண்டு வணிகம் செய்வதால் அவர்களும் வணிகர்களே. வாணிகர்களுக்குப் பொதுவாகச் 'செட்டி' என்ற பட்டம் உண்டு. அவர்கள் பெயருக்கு இறுதியில் இச்செட்டி என்ற பட்டப்பெயரையும் சேர்த்தே வழங்குவர். அங்ஙனமே, பரதவர்களில் ஒரு பகுதியினரான பட்டினவர் என்பார் இன்றும் 'செட்டி' என்ற பட்டத்தையே தம் பெயருக்குப் பின் சேர்த்து வழங்குகின்றனர். பூணூல் அணியும் வழக்கமும் சிலர் மேற்கொண்டுள்ளனர்."**[41]

என்பார் தி. முத்துகண்ணப்பன்.

கடல் தந்த ஒளிமிகு முத்துக்களும், வாளரம் கொண்டு அறுக்கப்பட்ட நேரியதாய் விளங்கும் வளையல்களும் பரதர் கொண்டு வந்த பல்வேறு பண்டங்களையும் பற்றி,

*"முழங்குகடல் தந்த விளங்குகதிர் முத்தம்*

*அரம்போழ்ந் தறுத்த கண்ணேர் இலங்குவளை*

*பரதர் தந்த பல்வேறு கூலம்"* **(மது.315–317)**

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

## 4.27.5. பயிர்த்தொழில்

நெய்தல் நிலத்தில் பயிர்த்தொழிலும் நடைபெற்றன. பரதவர் மழை பெய்யுங்காலத்து நெற்பயிர்களைப் பயிரிட்டனர். மழை இல்லாக் காலத்து உப்பை விளைவித்தனர் என்பதை,

*"பெயினே, விடுமான் உழையினம் வெறுப்பத்தோன்றி*
*இருங்கதிர் நெல்லின் யாணர் அஃதே*
*வறப்பின் மாநீர் முண்டகந் தாஅய்ச் சேறுபுலர்ந்து*
*இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்"* **(நற்.311:1–4)**

என நற்றிணை விளக்கும்.

## 4.28. பரதவர் வலிமை

பாண்டியப் பெருமன்னர்களும், சோழப் பேரரசர்களும் பரதவர்களின் வன்மையையும், திண்மையையும் படை வலிமையையும் கண்டு பெருங்கவலை கொண்டிருந்த செய்தியை,

*"செற்றதெவ்வர் கலங்கத் தலைச்சென்று*
*அஞ்சுவரத் தட்கும் அணங்குடைத் துப்பின்*
*கோழூஉன்குறைக் கொழுவல்சி*
*புலவுவில் பொலிகூவை*
*ஒன்றுமொழி ஒலி இருப்பின்*
*தென் பரதவர்"* **(மது.139–144)**

*"தென்பரதவர் மிடல்சாய*
*வடவடுகர் வாள் ஓட்டிய*
*தொடைஅமை கண்ணித் திருந்துவேல் தடக்கை*
*கடுமா கடைஇய விடுபரி வடிம்பின்*
*நல்தார் கள்ளின் சோழன்"* **(புறம்.378:1–5)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

**“பரதவர்கள் மீன்பிடித்தல், முத்துக்குளித்தலோடு வணி கத்தையும் தலைமையும் கொண்டிருந்தனர். அதே சமயம் கடல் சார்ந்த பகுதிகளுக்குச் சிற்றரசர்களாகவும், குறுநில மன்னர்களாகவும் விளங்கி உள்ளனர். இவர்களின் வண்மை யையும், திண்மையையும் அறிவாற்றல் படை வலிமையைக் கண்டு சங்க காலத்து பாண்டியர் சோழர் அரசர்களும் பெருங்கவலை கொண்டிருந்தனர்.”[42]**

என்பார் கோ. கிருட்டினமூர்த்தி.

## 4.29. பரதவர் மகளிர் செயல்கள்

பரதவ மகளிர் மீன் உணக்கல், மீன் விற்றல், உப்பு விற்றல், திமில் எண்ணல், சுடர் எண்ணல் போன்ற செயல்களில் ஈடுபட்டிருந்தனர்.

### 4.29.1. மீன் உணக்கல்

பரதவ மகளிர் தந்தை கொண்டு வந்த மீன் உலர்ந்து வற்றலாய்க் காயும் போது, அதனைக் கவர வரும் பறவைகளை ஓட்டுவர். இதனை,

*“பெருநீர் அழுவத்து எந்தை தந்த*
*கொழு மீன் உணங்கற் படுபுள் ஓப்பி”* **(அகம்.20:1–2)**
*“. . . . . . . . . . . . . . . யாமே எந்தை*
*புணர்திரைப் பரப்பகம் துழைஇத் தந்த*
*பன்மீன் உணங்கற் படுபுள் ஒப்புதும்”* **(அகம்.80:4–6)**
*“படுபுள் ஓப்பலின் பகல்மாய்ந் தன்றே”* **(நற்.49:4)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

சுறாமீனை அறுத்திட்ட தசைகளைக் காயவைத்தல் வேண்டி வெயிலில் போடுவர். அதனைக் கவர வரும் பறவைகளை ஓட்டிக் காவல் செய்வர் என்பதை,

*"நினைச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி*
*இனப்புள் ஓப்பும் . . . ."* (நற்.45:6–7)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 4.29.2. மீன் விற்றல்

பரதவர் பிடித்துவந்த மீன்களை அவர்கள் தங்கைமார் திருவிழாக்கள் நடைபெறும் தெருக்களில் விற்று வருவர். இதனை,

*"ஓங்குதிரைப் பரப்பின் வாங்குவிசைக் கொளீஇ*
*திமிலோன் தந்த கருங்கண் வயமீன்*
*தழைஅணி அல்குல் செல்வத் தங்கையர்*
*விழவு அயர் மறுகின் விலைஎனப் பகரும்"* (அகம்.320:1–4)

என அகப்பாடல் குறிப்பிடும்.

#### 4.29.2.1. பண்டமாற்று

மீனை விற்று அதற்கு ஈடாக வெண்ணெல்லைப் பெறுவர். இதனை,

*"பசுமீன் நொடுத்த வெண்ணெல்"* (அகம்.340:14)
*"மீனொடுத்து நெற்குவைஇ"* (புறம்.343:1)

என்னும் அடிகள் உணர்த்தும்.

உப்பினை விற்று வெண்ணெல்லைப் பெற்று வருவர் என்பதை,

*". . . . . . . . . . . . . . யாயும்*
*உப்பை மாறி வெண்ணெல் தரீஇய*
*உப்புவிளை கழனிச் சென்றனள்"* (குறுந்.269:4–6)

எனக் குறுந்தொகை விளக்கும்.

### 4.29.3. திமில் எண்ணல்

பரதவ மகளிர் உப்புமேட்டில் ஏறி நின்று இருண்ட மாலைப்பொழுதில் கரைக்குத் திரும்பி வரும் படகுகளை எண்ணுவர். இதனை,

*"திரை உழந்து அசைஇய நிரைவளை ஆயமொடு*
*உப்பின் குப்பை ஏறி எல்பட*
*வருதிமில் எண்ணும்"* (அகம்.190:1–3)

*"மடநோக்கு ஆயமொடு உடன் ஊர்பு ஏறி*
*'எந்தை திமில் இது நுந்தை திமில்' என*
*வளைநீர் வேட்டம் போகிய இளைஞர்*
*திண்திமில் எண்ணும்"* (நற்.331:5–8)

என்னும் அடிகள் தெளிவுறுத்தும்.

### 4.29.4. சுடர் எண்ணல்

இரவு நேரங்களில் மனையில் இருந்து கொண்டே கடலில் சென்று துழாவி மீன்பிடிக்கும் திமிலின் சுடர் விட்டெரியும் விளக்கினை எண்ணுவர் என்பதை,

*"மனை இருந்து இருங்கழி துழவும் பனித்தலைப் பரதவர்*
*திண்திமில் விளக்கம் எண்ணும்*
*கண்டல் வேலிக் கழிநல் ஊரே"* (நற்.372:10–13)

என நற்றிணை குறிப்பிடும்.

## 4.30. பரதவர் பழக்கவழக்கம்

கள் குடித்தல், குரவையாடல், மீன்பிடிக்க அற்றம் பார்த்துச் செல்லல், மீன்பிடிக்கச் செல்லும் பொழுது சிறுவரை மனையிலே விட்டுச்செல்லல், பனை நுங்கின் நீரும் கருப்பஞ்சாறும் இளநீருடன் கலந்து உண்ணல், புன்னைக் காயிலிருந்து நெய் எடுத்தல், போன்றவை பரதவரின் பழக்கவழக்கங்களாயிருந்தன.

### 4.30.1. கள்ளுண்ணல்

பரதவர் கள்ளை உண்டு களிப்பர். இதனை,

*"வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்ப*
*பாட்டம் பொய்யாது பரதவர் பகர*
*இரும்பனந் தீம்பிழி உண்போர் மகிழும்"* (நற்.38:1–3)

*"தேம்கமழ் தேறல் கிளையொடு மாந்தி"* **(நற்.388:8)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

## 4.30.2. குரவையாடல்

திமிலையுடைய பரதவர்கள் வெப்புடைய மதுவை உண்டு குரவை ஆடினர் என்பதை,

*"திண்டிமில் வன்பரதவர்*
*வெப்புடைய மட்டுண்டு*
*தண்குரவைச் சீர்தூங்குந்து"* **(புறம்.24:3–6)**

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

## 4.30.3. அற்றம் பார்த்ததுச் செல்லல்

கடலில் மீன் பிடிக்கச் செல்லும் பரதவர் புன்னையின் நிழலிலே தங்கி கடலில் செல்வதற்கு நல்ல அற்றம் பார்த்து அவ்விடத்து முறுக்குண்டு கிடக்கும் வலையைப் பிரித்துச் செம்மைப்படுத்துவர். இதனை,

*"கானல்அம் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்*
*நீனிறப் புன்னைக் கொழுநிழ லசைஇத்*
*தண்பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி"* **(நற்.4:1–3)**

என நற்றிணை தெளிவுறுத்தும்.

## 4.30.4. சிறுவரை மனையில் விட்டுச்செல்லல்

கொடிய சுறாமீனை வலையிட்டுப் பிடிக்கும் பரதவர் வேட்டைக்குச் செல்லும் பொழுது தம்முடைய சிறுவரை மனையிலே விட்டுச் செல்வர் என்பதை,

*"கடுஞ்சுறா எறிந்த கொடுந்தாள் தந்தை*
*புள்இமிழ் பெருங்கடல் கொள்ளான் சென்றென*
*மனையழுது ஒழிந்த புன்தலைச் சிறாஅர்"* **(நற்.392:1–3)**

என்னும் அடிகள் குறிப்பிடும்.

### 4.30.5. பனைநுங்கின் நீரும் கருப்பஞ்சாறும் இளநீருடன் கலந்து உண்ணல்

பரதவ மகளிர் பனை நுங்கின் நீரும் கருப்பஞ்சாறும் இளநீருடன் கலந்து உண்டு, பின் கடல் நீரிலே பாய்ந்து ஆடி மகிழ்வர் என்பதை,

*"..... ஒண்தொடி மகளிர்*
*இரும்பனையின் குரும்பை நீரும்*
*பூங்கரும்பின் தீஞ்சாறும்*
*ஓங்குமணற் குவவுத் தாழைத்*
*தீநீரோ டுடன்விரா அய்*
*முந்நீ ருண்டு முந்நீர்ப் பாயும்"* (புறம்.24:11–16)

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

### 4.30.6. புன்னைக்காயிலிருந்து நெய் எடுத்தல்

பரதவர்கள் புன்னைக் காயிலிருந்து நெய் எடுக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பதை,

*"நெய்கனி பசுங்காய் தூங்குந் துறைவனை"* (நற்.278:5)

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

### 4.31. பரதவர் பொழுதுபோக்கு

பரதவர் மணல் மேடுகளில் தங்கள் சுற்றத்தார்களுடன் குழுமிக் கையாலும் படைக்கலங்களாலும் குத்தியும் அடித்தும் விளையாட்டுப் போர் நிகழ்த்தி மகிழ்ச்சியடைவர். உள்ளத்தே எழும் செருக்கினால் தருக்கிப் பக்கத்தில் உள்ள பனைமரங்களிலே இலக்கு வைத்துக் கற்களை எறிந்து தங்கள் ஆற்றலை அளந்து ஆரவாரமிட்டுக் களித்துக் காலம் கழிப்பர். இதனை,

*"மலர்தலை மன்றத்துப் பலர்உடன் குழீஇக்*
*கையிலும் கலத்திலும் மெய்உறத் தீண்டி*
*பெருஞ்சினத்தல் புறங்கொடா அது*

*இருஞ்செருவின் இகல் மொய்ம்பினோர்*

*கல்எறியும் கவண்வெரீஇப்*

*புள்இரியும் புகர்ப் போந்தை"* (பட்.68–73)

எனப் பட்டினப்பாலை குறிப்பிடும்.

பரதவ மகளிர் சிறுகுடியில் ஊதுகொம்பு ஒலிக்க வண்டல் விளையாட்டுக்குரிய பாவையை நீர் உண்ணும் துறையில் கொண்டு வந்து வைத்துக் குரவைக் கூத்தாடுவர் என்பதை,

*"வண்டற்பாவை உண்துறைத் தரீஇ*

*திருநுதல் மகளிர் குரவை அயரும்"* (அகம்.269:19–20)

என அகப்பாடல் உணர்த்தும்.

பேதை மகளிர் இவள் கணவன் இவள் மனைவி என்று தம்முட் கூறிக்கொண்டு சிறு வீடு கட்டிச் சோறாக்கியும் உண்டும் விளையாடுவர். இவ்விளையாட்டைப் பொய்யாடல் என்பர். இவ்விளையாட்டு சலிப்படைந்தால் குரவையும் ஆடுவர். இதனை,

*"மையாடல் ஆடன்மழுபுலவர் மாறெழுந்து*

*பொய்யாட லாடும். . . ."* (பரி.11:88–89)

*"பொய்த லாடிய பொய்யா மகளிர்*

*குப்பை வெண்மணற் குரவை நிறூஉம்"* (ஐங்.181:2–3)

என்னும் அடிகள் உணர்த்தும்.

தாழையின் விழுதுகளாலான கயிற்றால் ஞாழல் மரத்தினது உயர்ந்த கிளையில் கட்டி ஊசல் ஆடினர் என்பதை,

*"ஞாழல் ஓங்கு சினைத் தொடுத்த கொடுங்கழித்*

*தாழைவீழ் கயிற்று ஊசல் தூங்கி"* (அகம்.20:3–8)

என அகப்பாடல் மெய்ப்பிக்கும்.

மணலிலே வண்டல் இழைத்து அங்கு வைத்து விளையாடும் வண்டல் பாவைக்குப் பூச்சூட்டிக் குளிர்ந்த பொய்கையிலே மகளிரோடு கைகோர்த்து ஆடினர் என்பதை,

*“. . . . . . . . . . . . . திணிமணற்*
*செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்*
*தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து*
*தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி*
*மறையெனல் அறியா மாயமில் ஆயமொடு”* **(புறம்.243:1–5)**

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

## 4.32. வழிபாடு

கடல் கொந்தளிப்பால் மீன் அகப்படாத அன்று வெண்டாளியின் மலரால் மாலை தொடுத்து அணிந்து, கருவுற்ற சுறாமீனின் கொம்பினைக் கடற்றுரையிலே நட்டு, அதற்கண் தம் மனைத் தெய்வமாகிய வருணனை ஏற்றுவித்து, அதற்குத் தாழை மலர் சூட்டிப் பனையின் கள்ளையும் பிற பலியுணவையும் படைத்துத் தம் பெண்டிரோடும் மக்களோடும் வணங்கி வழிபட்டு உணவு சமைத்து மனம் போல் ஆடிப்பாடி மகிழ்வர். இதனை,

*“வீழ்த் தாழைத் தாட்தாழ்ந்த*
*வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர்*
*சினைச் சுறவின் கோடு நட்டு*
*மனைச் சேர்த்திய வல் அணங்கினான்*
*மடல்தாழை மலர் மலைந்தும்*
*பிணர்ப் பெண்ணைப் பிழிமகிழ்ந்தும்*
*புன்தலை இரும் பரதவர்*
*பைந்தழைமா மகளிரொடு*

*பாய்இரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது*

*உவவுமடிந்து உண்டு ஆடியும்"* (பட்.84–93)

எனப் பட்டினப்பாலை குறிப்பிடும்.

## 4.33. பரதவர் உணவு

இறால் மீன்களின் சுடப்பட்ட தசையினையும் ஆமையைப் புழுக்கின இறைச்சியையும் பரதவர் உணவாகக் கொள்வர் என்பதை,

*"கருந்தொழிற் கலிமாக்கள்*

*கடலிறவின் சூடுதின்றும்*

*வயலாமைப் புழூக்குண்டும்"* (பட்.62–64)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

காய்ச்சி அரித்த தேறலையும் உலர்ந்த குழல் மீனையும் எப்பொழுதும் தன் மனையில் செய்து வைத்திருப்பர் என்பதை,

*"நுதிவே னோக்கி னுளைமக ளரித்த*

*பழம்படு தேறல் பரதவர் மடுப்ப"* (சிறு.158–159)

எனச் சிறுபாணாற்றுப்படை மூலம் அறியலாம்.

பரதவ மகளிர் உப்பு விற்று வாங்கி வந்த நெல்லாலே ஆக்கப்பட்ட மூரலாகிய வெண்சோற்றை அயிலை மீனை இட்டு ஆக்கிய சுவை மிகுந்த புளிங்கறியை அதிலே ஊற்றிக் கொழுமீன் கருவாட்டுடன் தன் தந்தைக்கு உணவாகக் கொடுப்பாள். இதனை,

*". . . . . . . . . . . . . . தந்தைக்கு*

*உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு*

*அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து*

*கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்"*

(அகம்.60:36)

என அகப்பாடல் உணர்த்தும்.

## 4.34. பாலை நில மக்கள்

பாலை நில மக்களை எயினர், மழவர், மறவர் என வழங்குவர்.

## 4.35. பாலைநில மக்கள் குடியிருப்புகள்

எயினர் குனிந்து செல்லும்படியான தலை குவிந்துள்ள குடிசைகளைக் கொண்ட குடியிருப்புகளில் வாழ்ந்தனர் என்பதை,

***"குவிந்த குரம்பை அங்குடிச் சீறூர்"*** **(அகம்.329:4)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

புலால் நாறும் வில்லேந்தி உயிர்க்கொலை புரியும் மறவர் பனையோலை வேய்ந்த குடிசைகளில் வாழ்ந்தனர் என்பதை,

***"புலவுவில் லுழவிற் புல்லாள் வழங்கும்***
***புல்லிலை வைப்பிற் புலஞ்சிதை யரம்பின்"*** **(பதிற்.15:12–13)**

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

## 4.36. உணவு

எயினர் மேட்டுநிலத்திலே விளைந்த செந்நெற் சோற்றை நாய்களால் பிடித்துக் கொண்டு வந்த உடும்புப் பொறியலுடன் ஒன்று சேர்த்து உண்பர். இதனை,

***"கொடுவி லெயினக் குறும்பிற் சேப்பிற்***
***களர்வள ரீந்தின் காழ்கண் டன்ன***
***சுவல்விளை நெல்லின் செவ்வவிழ்ச் சொன்றி***
***ஞமலி தந்த மனவுச்சூ லுடும்பின்***
***வறைகால் யாத்தது வயின்றொறும் பெறுகுவிர்"***

**(பெரும்.129–133)**

எனப் பெரும்பாணாற்றுப்படை மூலம் அறியலாம்.

புளிங்கறி இடப்பட்ட சோற்றையும் ஆமாவின் சூட்டிறைச்சியையும் தன்னை நாடி வரும் கலைஞர்களுக்கு அளிப்பர். முட்பன்றியின் ஊனை உணவாகக் கொள்வர் என்பதை,

*"எயிற்றிய ரட்ட வின்புளி வெஞ்சோறு*
*தேமா மேனிச் சில்வளை யாயமொ*
*டாமான் சூட்டி னமைவரப் பெறுகுவிர்"* **(சிறு.175–177)**
*"முளவுமா வல்சி யெயினர்"* **(ஐங்.364:1)**

என்னும் அடிகள் உணர்த்தும். பழைய பானையில் உலையை வார்த்து சமைத்து அதனைக் கருவாட்டோடு உண்பர். இதனை,

*"குறுங்கா மூலக்கை யோச்சி நெடுங்கிணற்று*
*வல்லூற் றுவரி தோண்டித் தொல்லை*
*முரவுவாய்க் குழிசி முரியமுப் பேற்றி*
*வாரா தட்ட வாடூன் புழுக்கல்"* **(பெரும்.97–100)**

எனப் பெரும்பாணாற்றுப்படை மூலம் அறியலாம்.

புலியானது கொன்று உண்டு கைவிட்டுப் போன பெரிய யானையினது ஊனை, மறவர்கள் தம் கோலிற் கோத்துக் கொண்டு செல்வர், இதனை,

*"புலிதொலைத்து உண்ட பெருங்களிற்று ஒழிஊன்*
*கலிகெழு மறவர் காழ்கோத்து ஒழிந்ததை"* **(அகம்.169:3–4)**

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

உப்பு வணிகர் கூட்டம் சமைத்து விட்டுச் சென்ற கல் அடுப்பில் மழவர்கள் இறைச்சியைச் சமைத்து உண்பர் என்பதை,

*"உமண்சாத்து இறந்த ஒழிகல் அடுப்பில்*
*நோன்சிலை மழவர் ஊன்புழுக்கு அயரும்"* **(அகம்.119:8–9)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

ஊன் கலந்து சமைத்த சோற்றுடன் துவரைத் துவையலை உணவாகக் கொள்வர். இதனை,

*"செவ்வூன் றோன்றா வெண்டுவை முதிரை*
*வாலூரன் வல்சி மழவர்"* **(பதிற்.55:7–8)**

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

## 4.37. எயிற்றியர் செயல்கள்

புல்லரிசியினைக் கொணர்தல், ஊன் உணக்கல், பூக்களை விற்றல் முதலியவை எயிற்றியர் செயல்கள் ஆகும்.

### 4.37.1. புல்லரிசியினைக் கொணர்தல்

கரம்பு நிலத்தைக் குத்திக் கிளரிப் புல்லரிசியினை வாரிக் கொண்டு வருவர். அவற்றைப் பனையின் முற்றத்தே தோண்டப்பட்ட நிலவுரலில் பெய்து வயிரமேறிய உலக்கையால் குற்றித் தீட்டுவர். இதனை,

*". . . . . . . . . . . . . . நோன்கா*
*ழிரும்புதலை யாத்த திருந்து கணை விழுக்கோ*
*லுளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி*
*யிருநிலக் கரம்பைப் படுநீறாடி*
*நுண்பு லடக்கிய வெண்ப லெயிற்றியர்"* (பெரும்.90–94)
*"பார்வை யாத்த பறைதாள் விளவி*
*னீழன் முன்றி னிலவுரற் பெய்து*
*குறுங்கா ழுலக்கை யோச்சி"* (பெரும்.95–97)

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

### 4.37.2. ஊன் உணக்கல்

வேட்டையில் கொன்று வந்து குவித்த விலங்குகளின் தசைத்துண்டங்களை வெயிலில் காயப்போடுவர். அவ்வூனை உண்ணவரும் பறவையை எயிற்றியர் ஓட்டுவர் என்பதை,

*"கணமா தொலைச்சித் தன்னையர் தந்த*
*நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பும்*
*நலமா ணெயிற்றி . . . . "* (ஐங்.365:1–3)

என ஐங்குறுநூறு உணர்த்தும்.

### 4.37.3. பூக்களை விற்றல்

இருப்பை மரங்களின் வெண்மையான பூக்களைக் கரடிக்கூட்டம் கிளைகளில் ஏறி அவற்றைப் பறித்துத் தின்னும். அவை உண்டது போக எஞ்சியவற்றை எயினர் மகளிர் குன்றின்கண் உள்ள சிற்றூரிலுள்ள தெருக்களில் விற்பர். இதனை,

*"பைங்குழைத் தழையர் பழையர் மகளிர்*
*கண்திரள் நீள்அமைக் கடிப்பின் தொகுத்து*
*குன்றகச் சிறுகுடி மறுகுதொறும் மறுகும்"* **(அகம்.331:5–7)**

என அகப்பாடல் தெரிவிக்கும்.

### 4.38. பாலைநில மக்கள் தொழில்

ஆறலைத்தல், வேட்டையாடுதல், ஆநிரைகவர்தல் முதலிய தொழிலில் ஈடுபட்டனர்.

### 4.38.1. ஆறலைத்தல்

மறவர்கள் வழிச் செல்லும் வணிகர் கூட்டத்தைக் கொன்று அவர் பொருளைக் கொள்ளையாகக் கொண்டு உண்பர் என்பதை,

*". . . . . . . . . . . சாத்தெறிந்து*
*அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்*
*கொடுவில் ஆடவர். . . . . "* **(அகம்.167:7–9)**

என அகப்பாடல் உணர்த்தும்.

மறவர் செலுத்தும் அம்பானது வழிப்போவார் உயிர்போகக் கொல்லும் என்பதை,

*". . . . . . . . . . வன்கண் ஆடவர்*
*விடுதொறும் விளிக்கும் வெவ்வாய் வாளி*
*ஆறுசெல் வம்பலர் உயிர்செலப் பெயர்ப்பின்"* **(அகம்.175:2–4)**

என்னும் அடிகள் தெளிவுறுத்தும்.

மறவர்களின் அம்பினால் எண்ணில் அடங்கார் இறந்துபட்டனர். அவர் தம் உடல்களைத் தழையிட்டு மூடி மறைத்து விடுவர். இதனை,

*"வெண்நுனை அம்பின் விசைஇட வீழ்ந்தோர்*
*எண்ணு வரம்பு அறியா உவல் இருபதுக்கை"* **(அகம்.109:7–8)**

என அகப்பாடல் குறிப்பிடும்.

## 4.38.1.1. பொருள் பங்கீடு

மறவர்கள் வணிகச் சாத்தரை வாட்டி அவர்களின் அரிய தலைகளைத் துணிப்பர். தம் துடியினைக் கொட்டி முழக்கியவாறே அவ்வணிகர்பால் உள்ள அணிகலன்களைக் கொள்ளையிட்டு அவற்றை அவரவர்க்குரிய பங்குகளாக முறையே தமக்குள் பகுத்துக் கொள்வர். இதனை,

*"விளர் ஊன் தின்ற வீங்குசிலை மறவர்*
*மைபடு திண்தோள் மலிர வாட்டி*
*பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய*
*திருந்து வாள் வயவர் அருந்தலை துமித்த*
*படுபுலாக் கமழும் ஞாட்பில் துடி இகுத்து*
*அருங்கலம் தெறுத்த பெரும்புகல் வலத்தர்*
*வில்கெழு குறும்பில் கோள்முறை பகுக்கும்"* **(அகம்.89:10–16)**

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

## 4.38.1.2. படைக்கலன்களை நீரில் கழுவுதல்

வழிப்போக்கராகிய புதியவரைக் கொன்ற மறவர்கள் தாம் எறிந்த படைக்கலன்களை நீரில் கழுவுவர் என்பதை,

*"நெறிசெல் வம்பலர்க் கொன்ற தெவ்வர்*
*எறிபடை கழீஇய சேயரிச் சின்னீர்"* **(அகம்.113:18–19)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 4.38.1.3. ஆறலை மரபு

வழி வந்தோரிடம் பொருள் இல்லையாயின் மறவர் அவர் தம் உயிரைக் கொல்லாது விடுவதுமுண்டு. அங்ஙனம் கொல்லாராய் விட்டு அகன்று போன தவற்றுக்காகப் பெரிய களிற்றின் கொம்பொடு புலியின் தோலைத் தண்டமாக விதிப்பான் அவர்களின் தலைவன். இதனைக் கீழ்க்கண்ட அடிகள் மெய்ப்பிக்கும்.

*"கைப்பொருள் இல்லை ஆயினும் மெய்க்கொண்டு*
*இன்உயிர் செகாஅர்விட்டு அகல் தப்பற்குப்*
*பெருங்களிற்று மருப்பொடு வரிஅதள் இறுக்கும்*
*அறன்இல் வேந்தன் ஆளும். . . ."* **(அகம்.109:11–14)**

மறவர் வழிச் செல்வோரை வருத்தித் தண்ணுமையை முழக்குவர் என்பதை,

*"வம்ப மாக்கள் வருதிறம் நோக்கிச்*
*செங்கணை தொடுத்த செயிர்நோக்கு ஆடவர்*
*மடிவாய்த் தண்ணுமைத் தழங்குகுரல் கேட்ட"* **(நற்.298:1–3)**

என நற்றிணை குறிப்பிடும்.

மறவர் தமக்கு வேட்டம் வாய்க்கப் பெற்ற நன்னாளில் சுற்றத்துடன் எழுந்து வழிச் செல்வோரிடம் வழிப்பறி செய்தனர் என்பதை,

*"பெருநாள் வேட்டம் கிளைஎழ வாய்த்த"* **(அகம்.193:3)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

மறவர் தாம் குறித்த இலக்குத் தவறுமானால் அம்பினைத் தொடுத்த தம் கைவிரலைக் கடித்துக் கொள்ளுவர். இதனை,

*"கடுத்தது பிழைக்குவது ஆயின் தொடுத்த*
*கைவிரல் கவ்வும் கல்லாக் காட்சி"* **(அகம்.215:7–8)**

என அகப்பாடல் தெரிவிக்கும்.

அம்புகளை வில்லோடு பிடித்துக் கிளையின் கண்ணே ஏறி நின்று வழிச் செல்வார் ஊரோ என்று ஆராயும் மறவர் அம்மரத்தினது நாரை மென்று நீர் வேட்கையைப் போக்கிக் கொள்வர் என்பதை,

*"வருநர்ப் பார்க்கும் வன்கண் ஆடவர்*

*நீர்நசை வேட்கையின் நார்மென்று தணியும்"* **(குறுந். 274:4–5)**

எனக் குறுந்தொகை விளக்கும்.

## 4.38.1.4. வருதிறம் காணல்

மறவர் யாமரத்தின் கிளைகளில் வழிப்போவார் வருகின்ற தன்மையினை அவர் காணாதவாறு மறைந்திருந்து கண்டறிவர் என்பதை,

*"ஆறுசெல் வம்பலர் வருதிறம் காண்மார்*

*வில்வல் ஆடவர் மேல் ஆள் ஒற்றி*

*நீடுநிலை யாஅத்துக் கோடுகொள் அருஞ்சுரம்"*

**(அகம்.263:6–8)**

என்னும் அடிகள் உணர்த்தும். மழவர்கள் வில்லினைத் தமது இடப்பக்கத்தே தழுவிக் கொண்டு ஆறலைத்தற் பொருட்டு வழிப்போவாரை எதிர்பார்த்திருப்பர் என்பதை,

*"கல்லா மழவர் வில்இடம் தழீஇ*

*வருநர்ப் பார்க்கும் வெருவரு காலை"* **(அகம்.127:12–16)**

என அகப்பாடல் குறிப்பிடும்.

## 4.38.1.5. பறவைக்கு உண்பித்தல்

மறவர்கள் தாம் அம்பு விடுத்தலின் சிறப்பினைக் காணும் பொருட்டு வழிச் செல்வோரிடம் அணிகலன்கள் இல்லையாயினும் அவர்தம் உடல்களைப் பறவைகட்கு உண்பிப்பர். இதனை,

*"அம்புதொடை அமைதி காண்மார் வம்பலர்*
*கலன்இலர் ஆயினும் கொன்று புள்ஊட்டும்*
*கல்லா இளையர் கலித்த கவலை"* **(அகம்.375:3–5)**

என்னும் அடிகள் தெளிவுறுத்தும்.

## 4.38.1.6. பிறர் துன்பங்கண்டு மகிழ்தல்

வழிச் செல்வோரிடம் பொருள் இல்லையாயினும் தங்கள் அம்பு பட்டுப் பதைப்பாரைக் கண்டு மனம் மகிழ்வர் என்பதை,

*". . . . . . . . . . . . . . . . . . . . . . மறவர் தாங்*
*கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்*
*துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற்"*

**(கலித்.4:3–5)**

எனக் கலித்தொகை விளக்கும்.

வழிப்போவோருடைய பொருள்களைப் பறித்துக் கொண்டு மறவர் அவர்களுக்குப் புண்ணைக் கொடுப்பர் என்பதை,

*". . . . . . . . . . . . . . மறவர்*
*பொருள்கொண்டு புன்செயின்"* **(கலித்.15:7–8)**

எனக் கலித்தொகை குறிப்பிடும்.

## 4.38.1.7. கொல்லுதல் – முதன்மை

பாலை வழியில் பலமுறை தூது செல்லும் பார்ப்பான் ஒருவன் கையில் வெண்ணிற ஓலைச் சுருளுடன் வந்தான். அதனைக் கண்ட மறவர் அவன் கையில் உள்ளது பொன்னாகவும் இருக்கலாம் என எண்ணி அவனை அவ்விடத்திலேயே கொன்றனர். அவன் கையில் பொருள் ஒன்றும் இல்லாமையால் அவ்விடத்தை விட்டு அகன்று போயினர். இதனை,

*"தூதுஒய் பார்ப்பான் மடிவெள் ஓலைப்*
*படையுடைக் கையர் வருதொடர் நோக்கி*

*உண்ணா மருங்குல் இன்னோன் கையது*

*பொன்ஆ குதலும் உண்டுஎன கொன்னே*

*தடிந்து உடன் வீழ்த்த கடுங்கண் மழவர்*

*திறன்இல் சிதாஅர் வறுமை நோக்கி*

*செங்கோல் அம்பினர் கைந்நொடியாப் பெயர*" **(அகம்.337:7–13)**

என்பார் பெருங்கடுங்கோ.

### 4.38.1.8. ஆறலைத்தலே வாழ்க்கை

பிறர் பொருளை வழிப்பறி செய்யாவிட்டால் மறவர் வாழ இயலாது மடிந்து விடுவர் என்பதை,

"*. . . . . . . . . . . . .யாவரும்*

*வழங்குநர் இன்மையின் வெளவுநர் மடிய*" **(அகம்.1:13–14)**

என அகப்பாடல் தெரிவிக்கும்.

### 4.38.1.9. மறவர் – அறவர் ஆவதும் உண்டு

மறவர் யாழினின்றும் எழும் இன்னோசை கேட்டு, தம் கொலைத் தொழிலுக்குரிய படைக்கலங்களைக் கைவிட்டு மறநெறியினின்று நீங்கி அருள்நெறிப் படர்வர். இதனை,

"*ஆறுஅலை கள்வர் படைவிட அருளின்*

*மாறுதலை பெயர்க்கும் மருவின் பாலை*" **(பொரு.21–22)**

எனப் பொருநராற்றுப்படை தெளிவுறுத்தும்.

### 4.38.2. வேட்டையாடுதல்

யாமரத்தின் கிளைகளில் உள்ள பார்ப்புகளை மறவர்கள் வில்லால் அம்பினை எய்து வேட்டையாடுவர் என்பதைக் கீழ்க்கண்ட அடிகள் குறிப்பிடும்.

"*இலைஇல ஓங்கிய நிலை உயர் யாஅத்து*

*மேற்கவட்டு இருந்த பார்ப்பினங்கட்கு*

*கல்லுடைக் குறும்பின் வயவர் வில்இட*" **(அகம்.31:5–7)**

### 4.38.3. ஆநிரை கவர்தல்

மறவர்கள் தேனை வார்த்துச் செய்த மணங்கமழும் கள்ளினை உண்டு பின்னர் போர் முனைகளுக்குச் சென்று ஆநிரைகளைக் கவர்ந்து வருவர். இதனை,

*“. . . . . . . . . . . . . . மறவர்*

*தேம்பிழி நறுங்கள் மகிழின் முனைகடந்து*

*வீங்குமென் சுரைய ஏற்றினம் தரூஉம்”* (அகம்.105:13–15)

என அகப்பாடல் உணர்த்தும். மழவர்கள் ஆநிரைகளைக் கவர்தலை,

*“. . . . . . . . . . . . . மழவர்*

*முனை ஆத்தந்து முரம்பின் வீழ்த்த”* (அகம்.35:4–5)

*“வீளை அம்பின் விழுத்தொடை மழவர்*

*நாள்ஆ உய்த்த நாமவெஞ் சுரத்து”* (அகம்.131:6–7)

என்னும் அடிகள் உணர்த்தும்.

கவர்ந்து கொண்டு வந்த பசுக்களுள் கொழுவிய பசுவினைக் கொன்று, அதன் குருதியை வேப்பமரத்தின் மேல் தெளித்து பலியிட்டு, அதன் புலாலைச் சமைத்து உண்டனர் என்பதை,

*“. . . . . . . . . . . . . . கடுங்கண் மழவர்*

*அம்புசேண் படுத்து வன்புலத்து உய்த்தென*

*தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்*

*கொழுப்புஆ எறிந்து குருதி தூஉய்*

*புலவுப்புழுங்கு உண்ட வான்கண் அகல்உறை”* (அகம்.309:2–6)

என அகப்பாடல் தெரிவிக்கும்.

## 4.39. மழவர் தோற்றம்

மழவர்கள் ஆட்டுக்கிடாயின் கொம்பினைப் போன்று சுற்றிச் சுருண்ட பிடரியை மறைக்கும் தலை மயிரினையும், சிவந்த கண்களையும் உடையவர்கள். அவர்கள்

ஆநிரையைக் கவரும்போது எழும் இருமலாகிய பகையைத் தீர்க்கும் மருந்தாகிய மண்ணை வாயில் அடக்கிக்கொள்வர். இதனை,

> ***"தகர் மருப்பு ஏய்ப்பச் சுற்றுபு சுரிந்த***
> ***சுவல்மாய் பித்தை செங்கண் மழவர்***
> ***வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறல்"*** **(அகம்.101:4–6)**

என்னும் அடிகள் தெளிவுறுத்தும்.

> **"வீரர்களில் இளையவர் மழவர் என்றும் அவர்களை விட நெஞ்சுரமிகுந்தவர்கள் மறவர் என்றும் கூறுவர்."[43]**

என்பார் எம். ஆரோக்கியசாமி.

## 4.40. அரசமரபு உருவாதல்

மழவர்கள் ஆறலை கள்வர்களாக இருந்ததோடு மட்டுமல்லாமல், பெரும்பாலோர் அரசரிடம் தலைமைசால் வீரராயும் அமர்ந்திருந்தனர். அதியனை,

> ***"ஒளிறிலங்கு நெடுவேன் மழவர் பெருமகன்"*** **(புறம்.88:3)**

என அழைப்பதைக் காணலாம்.

> **"பாலை நிலத்திற்குரிய மக்கள் எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் எனவும் மீளி, விடலை, காளை எனவும் கூறப்படுவர். அவர்கட்குரிய தொழில் வழிப்பறி செய்தலும் கொள்ளையடித்தலும் என்று கூறுவது பொருத்தமுடைத்தன்று. சூழ்நிலை காரணமாகச் சிலர் அத்தொழிலில் ஈடுபட்டிருக்கக் கூடும். ஆனால் அவ்வாறு ஈடுபடுதலை நாட்டு மக்கள், குறிப்பிட்ட பகுதிக்குரிய தொழிலென ஏற்றுக் கொண்டனர் என்று கூறுதல் இயலாது."[44]**

என்பார் சி. இலக்குவனார்.

## 4.41. பழக்கவழக்கம்

நரையினையுடைய முதியோர் பெரிய மன்றத்தின் கண் 'வல்லு' என்னும் கருவி கொண்டு சூதாடுவர். இதனை,

*"நரைமூ தாளர் அதிர்தலை இறக்கி*
*கவைமனத்து இருத்து வல்லுவனப்பு அழிய"* **(அகம்.377:7–8)**
*"நரைமூ தாளர் நாயிடக் குழிந்த*
*வல்லி னல்லக நிறைய"* **(புறம்.52:14–15)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

## 4.41.1. உணவுப் பழக்கவழக்கம்

மறவர் எருதினைக் கொன்று அதன் தசையை நெருப்பிலிட்டுச் சுட்டுத் தின்பர். அதனால் உண்டான நீர் வேட்கை நீங்கும் பொருட்டு நெல்லாற் சமைத்த தோப்பிக் கள்ளினைக் குடிப்பர். புலால் நாறும் கையினராய், கழுவாத வாயினராய் இடைவிடாது குழறும் கோட்டானின் குழலுடன் கூடி சிற்றூரின்கண் கூத்தாடுவர். இதனை,

*"நிணம்பொதி விழுத்தடி நெருப்பின் வைத்து எடுத்து*
*அணங்குஅரு மரபின் பேஎய் போல*
*விளர்ஊன் தின்ற வேட்கை நீங்க*
*துகள்அற விளைந்த தோப்பி பருகி*
*குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்*
*புலாஅல் கையர் பூசா வாயர்*
*ஒராஅ உருள்துடி குடுமிக் குராலொடு*
*மராஅஞ் சீறூர் . . . . ."* **(அகம்.265:13–20)**

என அகப்பாடல் உணர்த்தும்.

## 4.41.2. பலியிடுதல்

வான் பொய்த்தமையால் தினமும் இறைவர்க்கு இடுகின்ற விடியற்காலைப் பலியை இடாது மறந்தனர் மறவர். அதனால் பலிபீடம் பொலிவின்றிப் பாழ்பட்டுக் கிடந்தது. இதனை,

*"நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகை*
*புரிசை மூழ்கிய பொரிஅரை ஆலத்து"* (அகம்.287:6–7)

என்பார் குடவாயிற் கீரத்தனார்.

### 4.41.3. நடுகல் வழிபாடு

நடுகல்லுக்கு விடியற்காலத்துப் பலியைப் படைத்து நீராட்டி நெய் விளக்கேற்றி தினமும் பூக்கள் தூவி வழிபடுவர். இதனை,

*"புடைநடு கல்லி னாட்பலி யூட்டி*
*நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇய*
*மங்குன் மாப்புகை மறுகுடன் கமழும்"* (புறம்.329:2–4)
*"நெடுநிலை நடுகல் நாட்பலி"* (அகம்.289:3)

என்னும் அடிகள் உணர்த்தும்.

## 4.42. தொகுப்புரை

ஐவகை நிலங்களில் வாழும் மக்கள் அவர்கள் வாழும் இடத்திற்கு ஏற்ப அவர்களின் தொழிலும் வாழ்க்கையும் மாறுபட்டிருக்கின்றன.

குறிஞ்சி நில மக்கள் குறவர், கானவர் என அழைக்கப்பட்டனர். வீடுகள் குரம்பை என அழைக்கப்பட்டன. குறவர்களின் வீடுகள் காட்டுப்புல், வரகினது வைக்கோலால் வேயப்பட்டிருந்தன. அவர்கள் வாழ்ந்த ஊர் பாக்கம் எனவும் சிறுகுடி எனவும் அழைக்கப்பெற்றன.

தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், தினைப் பயிரிடுதல், தினைப்புனங்காத்தல், தினை அறுத்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களில் குறவர்கள் ஈடுபட்டிருந்தனர்.

உழவுத் தொழில் குறிஞ்சி நிலத்திலேயே தோன்றிய முறையை அறிய முடிகிறது. யானை, பன்றி, கிளி முதலியவற்றிலிருந்து தினைக் கதிர்களைக் காத்துள்ளனர். குறமகளிர் தினைகளைக் கவர வரும் பறவைகளை ஓட்டுவதில் ஈடுபட்டிருந்தனர்.

மருத நிலத்தில் காணப்படும் கதிரடிப்பது முதலில் குறிஞ்சி நிலத்திலே வந்துள்ளதை அறியலாம்.

யானை, புலி, பன்றி, முள்ளம்பன்றி, உடும்பு, மான், முயல் முதலிய விலங்குகளை குறவர்கள் வேட்டையாடியுள்ளனர். வேட்டைக்குச் செல்வோர் வில், அம்பு முதலியவற்றுடன் வேட்டை நாயையும் அழைத்துக் கொண்டு சென்றதை அறிய முடிகிறது.

தினைச்சோறு, பழவகைகள், மான் தசை, பன்றிதசை, ஆட்டிறைச்சி முதலியவை குறவர்களின் உணவாக அமைந்துள்ளன.

இரவில் விளக்கேற்றல், கூத்து, பண்பாடுதல், கள்ளுண்ணல் முதலியவை குறவரின் பழக்கவழக்கங்களாக இருந்தன.

முல்லை நிலமக்கள் ஆயர், கோவலர், இடையர், பொதுவர் என அழைக்கப்பட்டனர். முல்லை நிலத்தில் தான் முதன் முதலில் அரசமரபு தோன்றிற்று என்பதை அறியலாம். ஆயர்கள் குடியிருந்த ஊர் பாடி என்றும் சிறுபான்மை பாக்கம் என்றும் அழைக்கப்பட்டன. அவர்களின் குடில்கள் வரகுப்புல்லால் வேயப்பட்டிருந்தன.

ஆயர்கள் நிரை மேய்த்தலைத் தொழிலாகக் கொண்டவர். அவரவர் மேய்த்த நிரை இனத்தின் அடிப்படையில் பசுக்கூட்டங்களை மேய்த்தவர் நல்லினத்தாயர் அல்லது கோவினத்தாயர் எனவும், எருமைகளை மேய்த்தவர் கோட்டினத்தாயர் எனவும், ஆடுகளை மேய்த்தவர் புல்லினத்தாயர் அல்லது இடைமகன் எனவும் ஆயர் மூவகைப்படுவர்.

ஆயர்கள் நிரைகளை ஓட்டிச் செல்லும் போது உணவு மற்றும் பிற பொருள்களை எடுத்துச்செல்லல், எடுத்துச் சென்ற உணவைப் பகிர்ந்துண்ணல், நிரைகளைப் புல் மிகுந்த இடங்களில் மேய விடுதல், வேனிற்காலத்தில் பிற நிலங்களுக்கு ஓட்டிச் செல்லல், நீருக்காகப் பள்ளம் தோண்டுதல், ஆறலை கள்வர்களிடமிருந்தும், விலங்குகளிடமிருந்தும் நிரைகளைப் பாதுகாத்தல் போன்றவை நிரை மேய்த்தல் முறைமைகளாக அமைந்தன.

முல்லை நில ஆயரில் சிலர் உழவராகவும் திகழ்ந்துள்ளனர். மகளிர் நிரை மேய்த்தல், மோர் விற்றல் முதலிய தொழில்களில் ஈடுபட்டனர்.

வரகுச்சோறு, செம்மறியாட்டினது தயிர், வேளைப்பூ, அவரை விதையின் பருப்பு முதலியவை ஆயர் உணவாக அமைந்தன. ஏறு தழுவும் இளைஞனுக்கே ஆயர் மகளிரைத் திருமணம் செய்து கொடுப்பர்.

மருதநில மக்கள் உழவர், களமர் என அழைக்கப்பட்டனர். உழவரைத் தொழுவர் எனவும் வழங்குவர். இவர்களின் தொழில் வேளாண்மை ஆகும். நல்லெருதுகளைத் தேர்ந்தெடுத்து ஆழ உழுதுள்ளனர். பலமுறை உழுவதைச் 'செஞ்சால் உழவு' என்றழைத்துள்ளனர்.

நாற்றுகளை நன்கு இடைவெளி விட்டு நற்றனர். கதிர்கள் முற்றியவுடன் நண்டு, எலி, பறவைகள் முதலியவற்றால் தொல்லைகள் ஏற்படுவதை அறிய முடிகிறது.

உழவர்கள் அறுவடை செய்யத் தொடங்குமுன் நெற்கதிர்களுள் கூடுகட்டி வாழும் சிறு பறவைகளும், விலங்கினங்களும் ஓடி உய்யும் பொருட்டு தண்ணுமை என்னும் இசைக்கருவியை இசைப்பதன் மூலம் அவர்களின் அறஉணர்வை அறியலாம்.

களையெடுத்தல், நெல்குற்றுதல் போன்றவை உழவர் மகளிர் செயல்களாகும். உழவர்கள் நெற்களங்களில் தொழிற்களைப்பு தீர மது அருந்தியுள்ளனர். கொள்ளும் பயறும் பாலுடன் கலந்து ஆக்கிய அவிழ்க்கஞ்சி, அவல், பழஞ்சோறு, அரிசிச்சோறு, நண்டுக்குழம்பு போன்றவை உழவரின் உணவாக அமைந்தன.

நெய்தல் நிலத்தில் வாழும் மக்களைப் பரதவர் என்றழைப்பர். பரதவர் குடியிருப்புகள் பாக்கம் என்று அழைக்கப்படும். மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், முத்தெடுத்தல், வாணிகத்தொழில், பயிர்த்தொழில் முதலியவை பரதவர் தொழில்களாக அமைந்தன.

பரதவர்கள் கடல், கழிமுகங்கள் என்ற இரு இடங்களிலும் மீன் பிடித்துள்ளனர். கடலில் மீன் பிடிக்கும்போது பெருவலையைப் பயன்படுத்தியுள்ளனர்.

பரதவர் சிறுசிறு பாத்திகளில் உப்பினை விளைவித்துள்ளனர். பரதவரிடமிருந்து உமணர் என்ற வணிகர் உப்பினை வாங்கிச் சென்று விற்றுள்ளனர். நெய்தல் நிலத்தில் உமணர் என்ற வணிக மரபு உருவானதை அறிய முடிகிறது.

பரதவர்களின் வண்மையையும், திண்மையையும், படை வலிமையையும் கண்டு பாண்டியர், சோழ அரசர்கள் பெருங்கவலை கொண்டிருந்ததை அறியலாம்.

மீன் உணக்கல், மீன் விற்றல், உப்பு விற்றல், கடலில் வரும் திமில்களை எண்ணல் முதலிய செயல்களில் பரதவ மகளிர் ஈடுபட்டனர்.

கள் குடித்தல், குரவையாடல், மீன் பிடிக்க அற்றம் பார்த்துச் செல்லல், மீன் பிடிக்கச் செல்லும் பொழுது சிறுவரை மனையிலே விட்டுச் செல்லல், புன்னைக் காயிலிருந்து நெய் எடுத்தல் முதலியவை பரதவரின் பழக்கவழக்கங்களாயிருந்தன. இறால் மீன்களின் சுடப்பட்ட தசை, ஆமையைப் புழுக்கின இறைச்சி, அயிலை மீனை இட்டு ஆக்கிய புளிங்கறி முதலியவை பரதவரின் உணவாக அமைந்தன.

பாலை நில மக்கள் எயினர், மழவர், மறவர் என அழைக்கப்பட்டனர். செந்நெற்சோறு, உடும்புப் பொறியல், ஆமாவின் சூட்டிறைச்சி, முட்பன்றியின் ஊன் முதலியவை அவர்களின் உணவாக அமைந்தன. புல்லரிசியினைக் கொணர்தல், ஊன் உணக்கல், பூக்களை விற்றல் முதலியவை எயிற்றியர் செயல்களாக அமைந்தன.

ஆறலைத்தல், வேட்டையாடுதல், ஆநிரை கவர்தல் முதலியவை பாலை நில மக்கள் தொழில்களாகும். பிறர் பொருளை வழிப்பறி செய்யாவிட்டால் மறவர் வாழ இயலாது மடிந்து விடுவர் என்பதையும் அறிய முடிகிறது.

மழவர்கள் ஆறலைகள்வர்களாக இருந்ததோடு மட்டுமல்லாமல் பெரும்பாலோர் அரசரிடம் தலைமைசால் வீரராயும் அமர்ந்திருந்தனர் என்பதை அதியனை 'மழவர் பெருமகன்' என்றழைப்பதன் மூலம் அறியலாம்.

மறவரிடம் பலியிடும் பழக்கம் இருந்துள்ளது. பலியிடாது மறந்ததனால் பலிபீடம் பொலிவின்றிப் பாழ்பட்டுக் கிடந்ததை அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. தொல். அகத். நூ.எண்.22.
2. மேலது, நூ.எண்.23.
3. மேலது, இளம்பூரணர் உரை, ப.32.
4. தொல். அகத். நூ.எண்.24.
5. மேலது, இளம்பூரணர் உரை, ப.32.
6. கு. முத்துராசன், சங்ககாலம், ப.382.
7. அ. ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப.41.
8. க. ஆறுமுகம், 'தொல்காப்பியர்க்கு முன்னும் பின்னும்', தமிழ் இலக்கியத்தில் சமுதாய மறுமலர்ச்சி மலர், ப.2.
9. மா. செல்வராசன், சங்க காலச் சமூகவியல் கோட்பாடு, ப.172.
10. எ. சுவாமிநாதன், தமிழ் நாட்டுச் சமுதாயப் பண்பாட்டு வரலாறு, ப.43.
11. ந.சி. கந்தையாபிள்ளை, தென்னிந்திய குலங்களும் குடிகளும், ப.31.
12. இரா. குருநாதன், சங்க இலக்கியத்தில் குறிஞ்சி (இயற்கையும், காதல் வாழ்க்கையும்), ப.146.
13. சீ. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.476.
14. வி.சி. சசிவல்லி, பண்டைத்தமிழர் தொழில்கள், ப.121.
15. க. வெள்ளைவாரணனார், சங்க காலத் தமிழ் மக்கள், ப.51.
16. ஐ. அண்ணாமலை, சங்க இலக்கியத்தில் முல்லைத்திணை, சென்னைப் பல்கலைக்கழக டாக்டர் பட்டத்திற்கான மறு ஆய்வுரை, ப.42.
17. அ. முத்துசாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப.12.
18. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.133.
19. லெ.ப. கரு. இராமநாதன் செட்டியார், சங்ககாலத் தமிழர் வாழ்வு, ப.64.

20. எஸ்.எஸ். சஷி, இந்தியாவின் ஆயர் சமுதாயம், ப.36.
21. அ. முத்துசாமி, மேலது, ப.15.
22. சி.ஈ. இராமச்சந்திரன், சங்க கால வரலாறு, ப.166.
23. ந.சி. கந்தையாபிள்ளை, மேலது, ப.5.
24. கு. முத்துராசன், மேலது, ப.406.
25. P.T. Srinivasa Iyangar, History of the Tamils, PP.9–10.
26. மு. வரதராசன், முல்லைத்திணை, ப.5.
27. சிலம்பு. கொலை.46.
28. இராஜீ. காளிதாஸ், இரா. இராசகோபாலன், தமிழக வரலாறும் பண்பாடும், ப.76.
29. எட்கர் தர்ஸ்டன், தென்னிந்திய குலங்களும் குடிகளும், தொகுதி–3, (மொழி பெயர்ப்பு) க. ரத்தினம், ப.393.
30. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.608.
31. சீ. பக்தவத்சல பாரதி, மேலது, ப.471.
32. சே. நமசிவாயம், தமிழர் உணவு, ப.12.
33. வி.சி. சசிவல்லி, முல்லை, ப.89.
34. க. காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.37.
35. சசிவல்லி, தமிழர் திருமணம், பக்.57–58.
36. கா. சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம், ப.26.
37. மொ. அ. துரை அரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள் (இலக்கியச் சிறப்புப் பெயர்களும் குடி பற்றிய சிறப்புப் பெயர்களும்) ப.272.
38. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.213.
39. தி. முத்து கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.200.
40. T.M. Kannappan, The Treatment of meritime region in Sangam literature, Ph.D., Thesis, P.184.

41. தி. முத்து கண்ணப்பன், மேலது, பக்.232–233.

42. கோ. கிருட்டினமூர்த்தி, மீனவர் வாழ்வியல், ப.12.

43. M. Arokiasamy, The Kongu Country, P.18.

44. சி. இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், (சங்க காலம்), ப.31.

# இயல் – 5

# சங்க இலக்கியத்தில் கலைஞர்களும் பிற தொழிலாளர்களும்

5.0. முன்னுரை

5.1. தொல்காப்பியம்

5.2. கூத்தர் – விளக்கம்

5.3. கூத்தர் வகையினர்

5.3.1. தெருக்களில் பாடுதல்

5.3.2. அரசவையில் பாடுதல்

5.3.2.1. சிறப்பு பெறுதல்

5.3.3. இடத்திற்கேற்பப் பண்பாடுதல்

5.3.4. இசைக்கருவிகளை இசைப்போர்

5.3.5. கழைக்கூத்தினர்

5.4. புலம்பெயர் மக்கள்

5.4.1. புலம்பெயர் மக்கள் – வழிச்செலவு

5.5. தீதில் வாழ்க்கையினர்

5.6. இனக்குழு வாழ்க்கை

5.7. விருந்தோம்பப்படுதல்

5.8. புலவராய் விளங்குதல்

5.9. தெய்வ வழிபாடு

5.10. பாணர் – விளக்கம்

5.11. பாணர்கள் – வகை

5.11.1. மூவகைப் பாணரில் உட்பிரிவு

5.11.1.1. யாழ்ப்பாணர் மரபு

5.11.2. மீன்பிடித் தொழில் செய்வோர்

5.11.2.1. கடலில் சென்று மீன்பிடித்தல்

5.11.2.2. ஆற்றில் மீன்பிடித்தல்

# இயல் – 5
# சங்க இலக்கியத்தில் கலைஞர்களும் பிற தொழிலாளர்களும்

## 5.0. முன்னுரை

சங்க காலத்தில் மக்கள் செய்யும் தொழிலின் தன்மைக்கேற்ப பல்வேறு வகைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். அவ்வகையில் இசை, கூத்து முதலிய தொழில்களில் ஈடுபட்டிருந்தோரும் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை ஈட்டுவதற்கு ஒவ்வொருவரும் ஒவ்வொரு தொழிலை மேற்கொண்டிருந்த பல்வேறு தொழிலாளர்களும் இருந்தனர். அவ்வகையில் அவர்கள் மேற்கொள்ளும் தொழில்களினால் அவர்கள் பெயர் பெற்றிருந்தனர். கலைகள் மக்கள் வாழ்வோடு நெருங்கிய தொடர்புடையவை ஆகும். ஆற்றுப்படைக்கு இலக்கணம் கூறும் தொல்காப்பியர்,

**“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியரும்”**[1]

என நால்வகை கலைஞர்களைக் குறிப்பிடுவார். அவ்வகையில் சங்க இலக்கியத்தில் வரும் கூத்தர், பாணர், பொருநர், விறலியர் முதலிய கலைஞர்களைப் பற்றித் தொல்காப்பியத்தில் கலைஞர்கள், கூத்தர் – விளக்கம், கூத்தர் வகையினர், புலம்பெயர் மக்கள், இனக்குழு வாழ்க்கை, தீதில் வாழ்க்கையினர், விருந்தோம்பப்படுதல், புலவராய் விளங்குதல், தெய்வ வழிபாடு, பாணர் – விளக்கம், பாணர் – வகையினர், பாணர் குடியிருப்பு, புலம்பெயர் மக்கள், பாணர் – பாடினி காலம், பாணரும் வறுமையும், அகவாழ்வுத் தொடர்பு, புறவாழ்வுத் தொடர்பு, இனக்குழு வாழ்க்கை, தெய்வ வழிபாடு, பொருநர் – விளக்கம், புலம்பெயர் மக்கள், பொருநர் வறுமை, துயிலெழுப்புநர், வேளாண்மை வாழ்த்தல், தோற்கருவிகளை இசைத்தல், அரசரால் பெறும் சிறப்பு, விறலியர் – விளக்கம், புறவாழ்வுத் தொடர்பு, அகவாழ்வுத் தொடர்பு, சார்ந்து வாழும் மரபினர் போன்ற தலைப்புகளிலும் சங்க

இலக்கியத்தில் வரும் பல்வேறு தொழிலாளர்களைப் பற்றிக் கொல்லர், பொற்கொல்லர், குயவர், தச்சர், மருத்துவர், நெசவாளர், புலையர், புலைத்தி, சாணைக்கல் செய்வோன் போன்ற தலைப்புகளிலும் இவ்வியல் ஆய்கிறது.

## 5.1. தொல்காப்பியம்

கலைஞர்கள் அரசனைப் பாடிப் பரிசில் பெறுதல், தத்தம் இனத்தவரைப் பரிசில் பெற்ற புரவலர் பால் ஆற்றுப்படுத்துதல் அவர்களின் இயல்பாகும். தொல்காப்பியர்,

*"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியரும்*
*ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்*
*பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்*
*சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்"*[2]

என்பார். தொல்காப்பியர் கற்பில் கூற்றுக்குரிய மாந்தரைக் கூறும் போது,

*"பாணன் கூத்தன் விறலி பரத்தை*
*யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்*
*பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா*
*முன்னுறக் கிளந்த அறுவரொடு தொகைஇத்*
*தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்"*[3]

எனக் குறிப்பிடுவார். இதிலிருந்து கலைஞர்கள் அக வாழ்க்கையிலும் பங்கு கொண்டுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. கற்பின்கண் தோழிக் கூற்று வகைகளைத் தொல்காப்பியர்,

*"பாணர் கூத்தர் விறலியர் என்றிவர்*
*பேணிச் சொல்லிய குறைவினை எதிரும்"*[4]

என்பார்.

*"தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும்*
*பல்லாற் றானும் ஊடலில் தகைத்தலும்*
*உறுதி காட்டலும் அறிவுமெய்ந் நிறுத்தலும்*

*ஏதுவின் உரைத்தலும் துணியக் காட்டலும்*

*அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன*"[5]

எனக் கூத்தர்க்குரிய கூற்று வகைகளைத் தொல்காப்பியர் குறிப்பிடுவார்.

தலைவன் பிரிந்தவிடத்துச் சென்று கூறுதல், அவள் நின்ற நிலையைத் தலைவற்குக் கூறுதல் கூத்தருக்கும் பாணருக்கும் உரிய பொதுக்கூற்றாகும். இதனைத் தொல்காப்பியர்,

"*நிலம் பெயர்ந் துரைத்தல் அவள்நிலை உரைத்தல்*

*கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய*"[6]

என்பார்.

தலைவன் தலைவியைக் கூட்டுவிக்கும் வாயில்களாகவும் கலைஞர்கள் செயல்படுவர். இதனை,

"*தோழி தாயே பார்ப்பான் பாங்கன்*

*பாணன் பாட்டி இளையர் விருந்தினர்*

*கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்*

*யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப*"[7]

எனக் கற்பின் கண் வாயில்களைக் குறிப்பிடுவர்.

## 5.2. கூத்தர் – விளக்கம்

கூத்து நிகழ்த்துவோர் கூத்தர் எனப்படுவர். இவர்கள் முழவும், பலவகை இசைக்கருவிகளையும் இசைத்து ஆடிப்பாடுவர். கூத்தரைக் கண்ணுளர் (மலை.50) மள்ளர் (அகம்.189:5) வயிரிய மாக்கள் (பதிற்.23:6, 29:8) கோடியர் (அகம்.111:9) எனப் பல பெயர்களால் சுட்டப்பெறுவர். இரவு வேளையில் விளக்கொளியில் கூத்துக்கள் நிகழ்ந்துள்ளதை,

"*சுடரும் பாண்டிற் றிருநூறு விளக்கத்து*

*முழாவிமிழ் துணங்கைக்கு*" (பதிற்.52:13–14)

எனப் பதிற்றுப்பத்து தெளிவுறுத்தும்.

### 5.3. கூத்தர் வகையினர்

பாடுவோர், இசைக்கருவிகளை இசைப்போர், கழைக்கூத்தர் எனக் கூத்தர் மூவகையினர் ஆவர்.

#### 5.3.1. தெருக்களில் பாடுதல்

கூத்தர்கள் முதற்கண் ஊர்மன்றத்தை அடைந்து தலைவன் புகழ்களை எல்லாம் தொகுத்துரைத்துப் பின்னர்த் தெருக்களிலும் இருமருங்கிலும் சென்று பாடுவர். இதனை,

*"மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குத்*
*தண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்*
*அகலவன் பெறுக மாவே யென்றும்"* (பதிற்.43:26–28)

*". . . . . . . . . . . . இழியாத் திவவின்*
*வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ*
*மன்ற நண்ணி மறுகுசிறை பாடும்"* (பதிற்.29:7–9)

என்னும் அடிகள் உணர்த்தும்.

#### 5.3.2. அரசவையில் பாடுதல்

கூத்தர்கள் அரசவையில் முதலில் புதுவதாக அமைந்த இசைப்பாடல்கள் பலவற்றை இனிதாகப் பாடிப் பின் அவ்வரசன் குடிப்பெருமைகளையும், கொடைச் சிறப்புகளையும், அவனது புகழையும் பெருமைகளையும் பாடுவர். இதனை,

*"குன்றா நல்லிசைச் சென்றோர் உம்பல்*
*இன்றிவட் செல்லா துலகமொடு நிற்ப*
*இடைத்தெரிந் துணரும் பெரியோர் மாய்ந்தெனக்*
*கொடைக்கட னிறுத்த செம்ம லோயென*
*வென்றிப் பல்புகழ் விறலோ டேத்தி"* (மலை.540–544)

என மலைபடுகடாம் குறிப்பிடும்.

### 5.3.2.1. சிறப்பு பெறுதல்

கூத்தர் நன்னனிடம் களிறு, தேர், ஏறுடைய பசு நிரைகள், அணிகலன்கள் பூட்டிய குதிரை ஆகிய பலவற்றைப் பரிசிலாகப் பெறுவர். கூத்தர் தலைவன் பொற்றாமரை மலர் சூடுவான். விறலியர் உயர்ந்த அணிகலன்களைப் பெறுவர். இதனை,

*"தலைவன் தாமரை மலைய விறலியர்*
*சீர்கெழு சிறப்பின் விளங்கிழை அணிய*
*நீரியக் கன்ன நிரைசெலல் நெடுந்தேர்*
*வாரிக் கொள்ளா வரைமருள் வேழம்*
*கறங்குமணி துவைக்கும் ஏறுடைப் பெருநிரை*
*பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி*
*நிலந்தினக் கிடந்த நிதியமோ டனைத்தும்"* **(மலை.569–575)**

என்னும் அடிகள் தெளிவுறுத்தும்.

### 5.3.3. இடத்திற்கேற்பப் பண் பாடுதல்

கூத்தர்கள் நெடுந்தொலைவு செல்லும் பொழுது வழியில் உள்ள ஊரில் இரவில் தங்கி விடியற்காலையில் செல்வர். அவ்வாறு மருத நிலத்தில் உழவரோடு தங்கும் பொழுது யாழில் மருதப்பண் பாடுவர். அது உழவர் பாடும் ஏர் மங்கலப்பாட்டுடன் இயைய இருக்கும். இதனை,

*"ஒருதெறி களமர் ஓதையொடு நல்யாழ்*
*மருதம் பண்ணி அசையினிர்"* **(மலை.469–470)**

என்னும் அடிகள் குறிப்பிடும்.

### 5.3.4. இசைக்கருவிகளை இசைப்போர்

மத்தளம், சிறுபறை, கஞ்சதாளம், கொம்பு, நெடுவங்கியம், தூம்பு, குழல், கரடிகை, சல்லி, ஒருகண் மாக்கிணை ஆகிய பல்வேறு இசைக்கருவிகளைக் கூத்தர் இசைப்பர் என்பதை (மலை.1–11) அறியலாம். கூத்தர் வைத்திருக்கும் பேரியாழினை,

*“வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்”* **(மலை.37)**

என்கிறது மலைபடுகடாம்.

நன்னனின் முன்றிலை அடைந்து மத்தளம் முழங்கப் பெருவங்கியம் என்னும் வேய்ங்குழலை இசைத்து கூத்தர் மருதப்பண் எழுப்ப, அவ்வின்னிசைக்கு மிகாமல் அதனோடு ஒன்று பட்டு நடக்குமாறு விறலியர் முதலில் இறையை வாழ்த்திப் பின் நன்னன் புகழ் பாடுவர். இதனை,

*“மழையெதிர் படுகண் முழவுகண் இகுப்பக்*
*கழைவளர் தூம்பின் கண்ணிடம் இமிர*
*மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்*
*நரம்புமீ திறவா துடன்புணர்ந் தொன்றிக்*
*கடவ தறிந்த இன்குரல் விறலியர்*
*தொன்றொழுகு மரபிற் றம்மியல்பு வழாஅது*
*அருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை”* **(மலை.532–538)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

கூத்தர் புரவலரின் புகழினைத் தொகுத்துக் கூறும் போது தூம்பு என்னும் இசைக்கருவியை ஒலிப்பர். இதனை,

*“தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும்”* **(அகம்.111:9)**

என்பார் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

## 5.3.5. கழைக்கூத்தினர்

கழையிற் கட்டிய கயிற்றின் மேல் ஆடுபவர் கழைக்கூத்தினர் ஆவர். இவர்கள் ஆரிய நாட்டைச் சேர்ந்தவர்கள். ஆகையினால் ஆரியக் கூத்தர் எனவும் அழைக்கப் பெறுவர்.

> **"கூத்தர்களுள் ஆரியக் கூத்தர் ஒரு வகையினர். இவர்கள் ஆரிய நாட்டைச் சேர்ந்தவர்களாகையால் இப்பெயர் பெற்றுள் ளனர். இவர்கள் ஆடும் கூத்து ஆரியக் கூத்து எனப்படும். இவர்கள் கழையிற் கட்டிய கயிற்றின் மேல் நின்று பறை கொட்டி ஆடியுள்ளனர்."[8]**

என்பார் உ.வே. சாமிநாதையர்.

> **"ஆரிய நாட்டினின்று வந்த ஒருவகைக் கூத்தர் கழையை நட்டு, அதில் கயிறு கட்டி, அக்கயிற்றின் மேல் ஆடுவர். அப்பொழுது பறையும் கொட்டப்படும்."[9]**

என்பார் மு. சண்முகம்பிள்ளை.

கழைக்கூத்தர் ஆடுமிடம் ஆடுகளம் எனப்படும். அவர்கள் ஆடும் பொழுது பறை முழக்குவர். இடையிடையே தங்கள் வித்தைச் சிறப்பைக் கூறுங்கால் பறை முழக்காமல் விட்டு மீண்டும் முழக்குவர் என்பதை,

> ***"வாடல் உழுஞ்சில் விளைநெற்று அந்துணர்***
> ***ஆடுகளப் பறையின் அரிப்பன ஒலிப்ப"*** **(அகம்.45:1–2)**

என அகப்பாடல் உணர்த்தும்.

பல்லியங்கள் ஒலிக்க ஆடுமகள் கயிற்றில் நடத்தலை,

> ***"அரிக்கூட்டு இன்னியம் கறங்க ஆடுமகள்***
> ***கயிறு ஊர் பாணியில் தளரும் சாரல்"*** **(குறிஞ்.193–194)**

எனக் குறிஞ்சிப்பாட்டின் மூலம் அறியலாம்.

ஒரு பக்கத்தே மூங்கிலால் அமைந்த புல்லாங்குழல் ஒலிக்க, பலவகை வாச்சியங்களும் முழங்க, ஆடுகின்ற கழைக்கூத்தி முறுக்குண்ட புரியையுடைய வன்மையான கயிற்றின் மீது நடத்தலை,

***"கழைபா டிரங்கப் பல்லியம் கறங்க***
***ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று"*** **(நற்.95:1–2)**

என நற்றிணை விளக்கும்.

ஆரியக் கூத்தர்கள் கயிற்றில் ஏறி ஆடுங்கால் முழங்கும் பறையின் ஒலி வாகையின் நெற்றொலி போலக் கேட்கும். இதனை,

***". . . . . . . . . . . . . ஆரியர்***
***கயிறாடு பறையிற் கல்பொரக் கலங்கி***
***வாகை வெண்ணெற் றொலிக்கும்"*** **(குறுந்.7:3–5)**

என்பார் பெரும்பதுமனார்.

கழைக்கூத்தர் பிள்ளைகள் மூங்கில் ஏறி ஆடுவதை,

***"கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன***
***நெடுங்கழைக் கொம்பர் கடுவன் உகளினும்"*** **(மலை.236–237)**

என மலைபடுகடாம் தெரிவிக்கும்.

## 5.4. புலம்பெயர் மக்கள்

கூத்தர் இசைக்கருவிகளைத் தொகுத்து கட்டின பையினை உடையவராய் ஓரிடத்தும் நிலைத்து தங்காது ஊர் ஊராகச் செல்லும் இயல்பினர் என்பதை,

***"வாங்குபு தகைத்த கலப்பைய ராங்கண்***
***மன்றம் போந்து மறுகுசிறை பாடும்***
***வயிரிய மாக்கள் . . . . . ."*** **(பதிற்.23:4–6)**

எனப் பதிற்றுப்பத்து பாடல் தெரிவிக்கும்.

தங்களது மத்தளத்தை உயர்த்தி எடுத்துக்கொண்டு வேற்று நாட்டு விழாவினை நினைத்த வண்ணம் செல்லுவர் என்பதை,

*"............ வேறுநாட்டு*

*விழவுப்படர் மள்ளரின் முழவெடுத் துயரி"* (அகம்.189:4–5)

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

இரு பக்கமும் சம எடை உடையனவாகச் சீர் செய்து காவில் கட்டித் தமது இசைக்கருவிகளைக் கூத்தர் தோளில் சுமந்து செல்வர். இதனை,

*"கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப*

*நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்"* (மலை.12–13)

என்னும் அடிகள் உணர்த்தும்.

## 5.4.1. புலம்பெயர் மக்கள் – வழிச்செலவு

நொய்ய மரமாகிய விறகில் கடைக்கொள்ளியை எரித்துப் பனி விட்டு நீங்கும்படி இனிதாகச் சேர்ந்து உறங்குவர். பறவைகளின் குரல் கேட்டு விடியற்காலையில் எழுந்து செல்வர் என்பதை,

*"நொய்ம்மர விறகின் ஞெகிழி மாட்டிப்*

*பனிசேண் நீங்க இனிதுடன் துஞ்சிப்*

*புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்"* (மலை.446–448)

என மலைபடுகடாம் குறிப்பிடும்.

காடு நெடுந்தொலைவினது என எண்ணாராய் கூத்தர்கள் செல்வதை,

*"காடுமிக நெடிய என்னார் கோடியர்"* (அகம்.309:9)

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

## 5.5. தீதில் வாழ்க்கையினர்

கூத்தர்கள் கொடைத் தன்மையுடையராய் தீதில் வாழ்க்கை வாழும் இயல்பினர் ஆவார். இஃது எம் ஊர் என்று சொல்லும்படியாகத் தமக்கென்று ஓர் ஊர் இல்லாதவராய் இருந்தாலும் துன்பமிலா இன்ப வாழ்வினர். பாலை நிலத்தே வெப்பத்தாலான வழிநடை வருத்தத்தை மரத்தடியில் தங்கிப் போக்கிக் கொள்வர். இதனை,

*"நல்குநர் ஒழித்த கூலிச் சில்பதம்*
*ஒடிவை இன்றி ஓம்பாது உண்டு*
*நீர்வாழ் முதலை ஆவித்தன்ன*
*ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடத்து*
*ஊர்இஃது என்னாஅர், தீதுஇல் வாழ்க்கை*
*சுரமுதல் வருத்தம் மரமுதல் வீட்டி"* **(அகம்.301:4–9)**

என்பார் அதியன் விண்ணத்தனார்.

## 5.6. இனக்குழு வாழ்க்கை

கூத்தர் பெரிய சுற்றமாக வாழ்வர். இவருக்குச் சுற்றமாகப் பாணரும் விறலியரும் விளங்குதலை,

*"துறைபல முற்றிய பைதீர் பாணர்"* **(மலை.40)**

*"இலங்குவளை விறலியர்"* **(மலை.46)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

கூத்தர் தலைவனை,

*"கண்ணுளர் ஒக்கல் தலைவ"* **(மலை.50)**

என மலைபடுகடாம் குறிப்பிடும்.

## 5.7. விருந்தோம்பப்படுதல்

கூத்தர் செல்லும் வழியில் தங்கும்போது அங்குள்ள மக்கள் அவர்களை அன்போடு விருந்தோம்புவர். மான், பன்றி, உடும்பு ஆகியவற்றின் தசைகளோடு புளியைக் கலந்து ஆக்கிய புலவுச் சோற்றைக் குறிஞ்சி நிலத்தில் தங்கும் பொழுது பெறுவர். பாலும் பாற்சோறும் முல்லை நிலத்தில் தங்கும் பொழுது பெறுவர். தசையோடு கலந்த சோற்றை மருத நிலத்தில் தங்கும் பொழுது பெறுவர். இதனை,

*"வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை*
*முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை*
*பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ*

*வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனி*

*னின்புளிக் கலந்து மாமோ ராகக்*

*கழைவளர் நெல்லி னரியுலை யூழ்த்து*

*வழையமை சாரல் கமழத் துழைஇ*

*நறுமல ரணிந்த நாறிரு முச்சிக்*

*குறமக ளாக்கிய வாலவிழ் வல்சி"* (மலை.175–183)

*"பாலு மிதவையும் பண்ணாது பெறுகுவிர்"* (மலை.417)

*"முள்ளரித் தியற்றிய வெள்ளரி வெண்சோறு"*(மலை.465)

என்னும் அடிகள் உணர்த்தும்.

## 5.8. புலவராய் விளங்குதல்

கூத்தர்கள் பலரும் புலவர்களாகவும் விளங்கியுள்ளனர். மதுரைக் காருலவியங்கூத்தனார் (நற்.325), மதுரைக் கூத்தனார் (அகம்.334), மதுரைத் தமிழக்கூத்தனார் (புறம்.334), மதுரைத் தமிழக்கூத்தன் நாகன் தேவனார் (அகம்.164), முதுகூத்தனார் (அகம்.137, 329, குறுந்.221, 353, 371, 390, நற்.28, 58, புறம்.331), வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தன் (குறுந்.362) முதலியோர் புலவர்களாக விளங்கியுள்ளதை அறியலாம்.

## 5.9. தெய்வ வழிபாடு

கூத்தர்கள் நெடுந்தொலைவு செல்லும் பொழுது அவ்வழியில் அவர்களுக்குத் தீங்கு நேராமல் இருக்கவும், கூத்தாடத் தொடங்குவதற்கு முன்னும் தெய்வத்தை வணங்குவர்.

புரவலரை நாடிக் கூத்தர் நெடுந்தொலைவு செல்லும் பொழுது அவ்வழியில் தமக்குத் துன்பம் நேரா வண்ணம் மலையில் உறையும் தெய்வங்களைப் பாடிப் பரவுவதை,

*“. . . . . . . . . . . . . . . இன்குரல் விறலியர்*

*நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடிக்*

*கைதொழூஉப் பரவிப் பழிச்சினிர் கழிமின்”* **(மலை.358–360)**

என மலைபடுகடாம் தெளிவுறுத்தும்.

கூத்தர் திருவிழா நாளில் மன்றத்தில் நாடகமாடுவர். கூத்தாடத் தொடங்குவதற்கு முன்னால் மலர் தூவிக் கடவுளை வாழ்த்துவர். இதனை,

*“அருவிலை நறும்பூத் தூஉய்த் தெருவின்*

*முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த*

*திரிபுரி நரம்பின் தீந்தொடை யோர்க்கும்*

*பெருவிழா. . . . . .”* **(பட்.252–255)**

எனப் பட்டினப்பாலை குறிப்பிடும்.

## 5.10. பாணர் – விளக்கம்

பண் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்தது பாண் என்பதாகும். பண் இசைப்போர் பாணர் எனப் பெற்றனர்.

**“பண் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்து முதல் நீண்டது தான் பாண் என்பதாகும். பாண் என்பது பாண்குடி, பாண்சேரி, பாண்கடன் எனப் பல சொற்களின் வேர்ச் சொல்லாகும். பாண் என்பது ‘அர்’ என்னும் பலர்பால் ஈறு பெற்றுப் பாணர் என்றாயிற்று. பண் இசைப்போர் பாணர் எனத் தொழிலாகு பெயராகுவோ பண்பாகு பெயராகவோ அமைந்து உள்ளது.”[10]**

என்பார் வெ. வரதராசன்.

பாணர்கள் தம் கலைத்திறனால் பெற்ற பொருளைத் தமக்கென வைத்துக் கொள்ளாது அப்பொழுதே எல்லோர்க்கும் வழங்கி பிறர்க்குதவியாளராக விளங்கியுள்ளனர். இதனை,

**"பாணர்கள் பாடுவதிலும், இசைக்கருவிகள் இசைப்பதிலும் கூத்துக் கலையிலும் ஈடுபாடு கொண்டு அவற்றின் வளர்ச்சியிலும் தம்பெரும் பொழுதைக் கழித்தனர். சிறுபான்மையினர் வேறுபல தொழில்களைச் செய்தனர். கலைத்துறையில் ஈடுபட்டவர்களைக் குறிப்பாக வேந்தர்களும், குறுநில மன்னர்களும், வள்ளல்களும் ஆதரித்தனர். இவர்கள் தம் கலைத்திறனால் பொன்னும் பொருளும் பெற்றாலும் அவற்றைத் தமக்கெனப் பாதுகாவாது அவ்வப்பொழுதே எல்லோர்க்கும் வழங்கி வாழ்வித்தனர்."[11]**

என வி.சி. சசிவல்லி அவர்களின் கூற்று மெய்ப்பிப்பதைக் காணலாம்.

### 5.11. பாணர்கள் – வகை

பாணர்கள் ஐவகையினராக இருந்துள்ளனர். இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர், மீன்பிடித் தொழில் செய்வோர், குறுநில அரசனாக இருத்தல் என ஐவகையினர் ஆவர்.

***"பாணரும் இசைப் பாணரும், யாழ்ப்பாணரும்***
***மண்டைப் பாணருமெனப் பலராம்"[12]***

என்பார் நச்சினார்க்கினியர்.

வாய்ப்பாட்டு இசைப்போர் இசைப்பாணர் எனப்படுவர். நரம்புக்கருவி இசைப்போர் யாழ்ப்பாணர் எனப்படுவர். தோற்கருவி இசைப்போர் மண்டைப்பாணர் எனப்படுவர்.

**"மண்டை என்னும் பெயர் கொண்ட உண்கலத்தை வைத்திருப்பவர் மண்டைப்பாணர் ஆவர்."[13]**

என்பார் மா. இராசமாணிக்கனார்.

### 5.11.1. மூவகைப் பாணரில் உட்பிரிவு

யாழ்ப்பாணன் யாழினை இசைக்கும் முறையறிந்து இசைத்தலில் வல்லவன் என்பதை,

*"கடனறி மரபிற் கைவல் பாண"* **(பதிற்.67:3)**

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

யாழ்ப்பாணர் பயன்படுத்தும் யாழைக் கொண்டு சீறியாழ்ப்பாணர், பேரியாழ்ப்பாணர் எனப் பெயர் பெறுவர் என்பதை,

*"சீறியாழ் இடவயின் தழீஇ"* **(சிறு.35)**

*"பேரியாழ் முறையுளிக் கழிப்பி"* **(பெரும்.462)**

என்னும் அடிகள் விளக்கும்.

### 5.11.1.1. யாழ்ப்பாணர் மரபு

காலையில் மருதப்பண்ணும் மாலையில் செவ்வழிப் பண்ணும் இசைத்தல் யாழ்ப்பாணர் மரபாகும். யாழ்ப்பாணர் மாலைக்காலத்தில் செவ்வழிப் பண்ணைப் பாடிப் பரிசில் பெறுவதை,

*". . . . . . . . . . . . . இருள்வரச்*
*சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்*
*காரெதிர் கானம் பாடினே மாக"* **(புறம்.144:1–3)**

எனப் புறநானூறு குறிப்பிடும்.

நள்ளி என்னும் அரசன் பாணர்க்கு வறுமை புலனாகா வண்ணம் வேண்டுவன நிரம்ப அளித்து ஓம்புதலால் அம்முறையினை மறந்து செவ்வழிப் பண்ணைக் காலையிலும், மருதப்பண்ணை மாலையிலும் முறை பிறழ்ந்து இசைத்தனர் என்பதை,

*"நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்*
*மாலை மருதம் பண்ணிக் காலைக்*
*கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி*
*வரவெமர் மறந்தன ரதுநீ*
*புரவுக்கடன் பூண்ட வண்மை யானே"* **(புறம்.149)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 5.11.2. மீன்பிடித்தொழில் செய்வோர்

பாணர்கள் மீன் பிடிக்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர்.

**"பாணர்களில் கீழ் நிலையில் இருந்தவர்கள் மீன்பிடிக்கும் தொழிலையும் செய்து வந்தனர்."[14]**

என்பார் வெ. வரதராசன். பாணர்கள் கடலிலும், ஆறுகளிலும் சென்று மீன்பிடித்துள்ளனர்.

### 5.11.2.1. கடலில் சென்று மீன்பிடித்தல்

பாண்மகளின் அண்ணன்மார் கரிய இருளினையுடைய நள்ளிரவில் சென்று வாளை மீனைப் பிடித்து மறுநாள் விடியலில் கொண்டு வந்து தருவர் என்பதை,

*"மால் இருள் நடுநாட் போகி, தன்ஐயர்*
*காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு*
*அவ்வாங்கு உந்தி அம்சொல் பாண்மகள்"* **(அகம்.126:7–9)**

என அகப்பாடல் குறிப்பிடும். பாணர் சேரியை,

*"மீன் சீவும் பாண்சேரி"* **(மது.269)**

என மதுரைக்காஞ்சியும்,

*". . . . . .. சிறுசின்*
*மீன்சீவும் பாண்சேரி"* **(புறம்.348:3–4)**

எனப் புறநானூறும் குறிப்பிடுவதைக் காணலாம்.

### 5.11.2.2. ஆற்றில் மீன்பிடித்தல்

பாணர்கள் ஆற்றில் தூண்டில்களைக் கொண்டு மீன் பிடித்தனர். பாணர்களின் இச்செயலை,

*"பச்சூன் பெய்த சுவல்பிணி பைந்தோல்*
*கோள்வல் பாண்மகன் தலைவலித் தியாத்த*
*நெடுங்கழைத் தூண்டில் நடுங்க நாண்கொளீஇக்*

*கொடுவாய் இரும்பின் மடிதலை புலம்பப்*

*பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை"* (பெரும்.283–287)

எனப் பெரும்பாணாற்றுப்படை விளக்கும்.

பாணர்கள் வைகறை வேட்டையில் துறையிடத்து அகப்பட்ட வரால் மீனின் துண்டத்தினை விற்று, அப்பொருள் கொண்டு கள்ளுண்டு களித்து ஆடினர். மீண்டும் வேட்டைக்குச் செல்லுதலை மறந்து உறங்கினர். உறங்கிய கணவன்மார்க்கு அவரவர் மனைவியராகிய பாண்மகளிர் விடியற்காலத்தே ஆம்பலது அகன்ற இலையில் சுடுகின்ற சோற்றுத் திரளோடு பிரம்பின் புளிப்பும் இனிப்பும் கலந்த திரட்சியான பழத்தினைக் கொண்டு ஆக்கிய புளியங்கறியை இட்டு உண்பிப்பர். இதனை,

*"நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து*
*நாள்துறைப் பட்ட மோட்டு இருவராஅல்*
*துடிக்கண் கொழுங்குறை நொடுத்து உண்டுஆடி*
*வேட்டம் மறந்து துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டி*
*ஆம்பல் அகல்இலை அமலை வெஞ்சோறு*
*தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து*
*விடியல் வைகறை இடூஉம். . . . "* (அகம்.196:1–7)

என்பார் பரணர்.

### 5.11.2.3. பாணர் குலப்பெண்

பாண் மகளும் மீன்பிடித் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். பாண்மகள் தூண்டிற் கோலினால், தான் பிடித்து வந்த மீனைத் தன் தந்தைக்கு வஞ்சி மரத்தின் விறகினால் சுட்டு உண்பித்தாள். இதனை,

*"நாண்கொள்நுண் கோலின் மீன்கொள் பாண்மகள்*
*தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்*

*நாரரி நறவுண் டிருந்த தந்தைக்கு*

*வஞ்சி விறகிற் சுட்டுவா யறுக்கும்”* (அகம்.216:1–4)

என அகநானூறு சுட்டும்.

### 5.11.2.4. பண்டமாற்று நெறியில் பாண்மகள்

பாணர் பிடித்து வரும் மீன்களைப் பாண்மகளிர் கொண்டு சென்று விற்று வருவர். வரால்மீனைக் கொணர்ந்து கொட்டிய கூடையில் அதற்கு விலையாக உழவர் மனைக்கிழத்தியிடம் முந்தைய ஆண்டு விளைந்த பழைய வெண்ணெல்லை நிறையப் பெறுவர் என்பதை,

*“வலைவல் பாண்மகன் வால்எயிற்று மடமகள்*

*வராஅல் சொரிந்த வட்டியுள், மனையோள்*

*யாண்டுகழி வெண்ணெல் நிறைக்குடம்”* (ஐங்.48:1–3)

*“அம்சி லோதி யசைநடைப் பாண்மகள்*

*சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்”* (ஐங்.49:1–2)

என்னும் அடிகள் உணர்த்தும்.

கெடிற்று மீனைக் கொண்டு வந்து கொடுத்து அதற்குப் பதிலாக அறுவடை செய்த நெல் வயலில் விளைந்த பெரும்பயற்றைப் பெற்றுச் செல்வர் என்பதை,

*“முள்எயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த*

*அகன்பெரு வட்டி நிறைய மனையோள்*

*அரிகாற் பெரும் பயறு நிறைக்கும்”* (ஐங்.47:1–3)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

பாண்மகள் மீனுக்கு விலையாகப் பழைய செந்நெல்லைக் கொள்ளாமல் கழற்சிக்காய் போன்ற பெரிய முத்துக்களுடன் நல்ல அணிகலன்களையும் பெற்றுள்ளனர். இதனை,

*“. . . . . . . . . . . . . பாண்மகள்*

*நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி மறுகில்*

*பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்*

*கழங்கு உறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்"*

**(அகம்.126:9–12)**

என்பார் நக்கீரர்.

## 5.11.3. பாணரும் அரச மரபு உருவாக்கமும்

பாணர்கள் வீரம் மிக்கவர்களாகவும் குறுநில அரசனாகவும் விளங்கியுள்ளார்கள். பாணன் என்பவன் கரிய பூணினையும், கனிந்த தண்டையினையும் கொண்ட நீண்ட வேற்படையை உடையவன். இறைச்சி உணவுகளை உடையவன். போரில் புறமுதுகிட்டார் மேல் படையெடுத்துச் செல்லாதவன். மறவர் பலரோடு தன் நாட்டு எல்லையைக் கடந்து சென்று பகைப்புலத்து ஆக்களைச் செவ்வி பார்த்துக் கவர்ந்து வருவான். இதனை,

*"கல்பொரூஉ மெலியாப் பரட்டின் நோன்அடி*

*அகல்சூல் அம்சுரைப் பெய்த வல்சியர்*

*இகந்தனர் ஆயினும் இடம்பார்த்துப் பகைவர்*

*ஓம்பினர் உறையும் கூழ்கெழு குறும்பில்*

*குவைஇமில் விடைய வேற்றுஆ ஒய்யும்*

*கனைஇருஞ் சுருணைக் கனிகாழ் நெடுவேல்*

*விழவு அயர்ந்தன்ன கொழும் பல்திற்றி*

*எழாஅப் பாணன் நல்நாட்டு உம்பர்"* **(அகம்.113:10–17)**

என்பார் கல்லாடனார்.

*"நல்வேற் பாணன் நல்நாட்டு உள்ளதை"* **(அகம்.325:17)**

என்னும் பாடலடியிலிருந்து பாணன் குறுநில அரசனாகவும் விளங்கினான் என்பதை அறிய முடிகிறது.

## 5.12. பாணர் குடியிருப்பு

பாணர் குடியிருப்பு **'பாண்சேரி'** (மது.269) என வழங்கப்பெறும்.

மதுரையில் வையைப் பேரியாற்றின் துறைகள்தோறும் சோலைகள் சூழ நெடுங்காலம் வாழ்ந்துள்ளனர் என்பதை,

*"அவிரறல் வையைத் துறைதுறை தோறும்*
*பல்வேறு பூத்திரள் தண்டலை சுற்றி*
*அழுந்து பட்டிருந்த பெரும்பாண் இருக்கையும்"* **(மது.340–342)**

என மதுரைக்காஞ்சி மூலம் அறியலாம்.

நீண்ட கொடிகள் அசைந்தாடிக் கொண்டிருக்கும் கள் மிகுந்த பாக்கத்தில் வாழ்ந்து இருந்தனர் என்பதை,

*"நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து"* **(அகம்.196:1)**

என அகப்பாடல் குறிப்பிடும்.

## 5.13. புலம்பெயர் மக்கள்

கலைத்தொழிலில் ஈடுபட்டுள்ள பாணர்கள் ஓரிடத்தில் தங்காது புரவலரை நாடிச் சென்றுள்ளனர்.

பாணர் புரவலரை நாடிச் செல்லும் பொழுது சுற்றமாகச் செல்வர். ஏவலிளையர் யாழினைச் சுமப்பர். முழவு, ஒருகண் மாக்கிணை, மூங்கிற் கணுவையிடை விட்டறுத்துச் செய்யப்படும் பெருவங்கியம், பிற இசைக்கருவிகள் ஆகிய அனைத்தையும் ஒருங்கு சேர்த்துக் கட்டி காவடியின் ஒரு பக்கத்தில் தொங்கவிட்டுப் பாண் சுற்றத்தினர் சுமந்து வருவர். காவடியின் மறுபக்கத்தில் பாடல் துறைக்கு வேண்டிய கருவி எல்லாம் கூடின மூடையைத் தொங்கவிட்டு வருவர் என்பதை,

*"புணர்புரி நரம்பின் தீந்தொடை பழுனிய*
*வணரமை நல்யா ழிளையர் பொறுப்பப்*
*பண்ணமை முழவும் பதலையும் பிறவும்*
*கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக்*
*காவற் றகைத்த துறைகூடு கலப்பையா"* **(பதிற்.41:1–6)**

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

விறலி பின்னே வர சிறிய யாழை தளர்ந்த நெஞ்சத்துடனே ஒரு மருங்கிலே அணைத்துக் கொண்டு வேள் ஆய் அண்டிரனின் புகழை நினைந்து வந்தேன் என பாணன் கூறுவதை,

*"வளைக்கை விறலியென் பின்னாளாகப்*
*பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்*
*வரிநவில் பனுவல் புலம்பெயர்ந் திசைப்பப்*
*படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ்*
*ஒல்க லுள்ளமொ டொருபுடைத் தழீஇ"* **(புறம்.135:3–10)**

என்னும் புறப்பாடலடிகள் மூலம் அறியலாம்.

படைவீரர்கள் தங்கியிருக்கும் பாசறைக் கண்ணும் பாணர்கள் சென்றுள்ளனர். அங்கு அவர்களுக்குத் தசையோடு கூடிய பெருஞ்சோறு அளிக்கப்பட்டதை,

*"ஊன்சோற் றமலை பாண்கடும் பருத்தும்*
*செம்மற் றம்நின் வெம்முனை யிருக்கை"* **(புறம்.33:14–15)**

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

## 5.14. பாணர் – பாடினி காலம்

பாணர் – பாடினியர் காலத்தை இலக்கிய வளர்ச்சிக் காலம் எனலாம். பாணர், பாடினியர் இலக்கியத்தை இசையோடு பாடி அதன் புகழை வளர்த்தனர்.

**"பாணரும் பாடினியரும் நாளும் இன்னிசையால் நற்றமிழ் இலக்கியத்தைப் போற்றி வளர்த்தனர்."[15]**

என்பார் க.த. திருநாவுக்கரசு.

**"நாகரிகம் வளர்ச்சியுறத் தொடங்கிய காலத்தில் பல்வேறு நாடுகளிலும் முதன்முதல் பாணரும் பாடினியரும் இலக்கிய வளர்ச்சிக்கு மூலகாரணமாக இருந்துள்ளனர். அவர்கள் மாவீரர்களின் புகழை ஊர்ப்பொது மன்றங்களிலும், திருவிழா நடைபெற்ற இடங்களிலும், மன்னரின் அவைகளிலும் இசையோடு**

**பாடிக் கேட்போரை மகிழ்வித்தனர். அவர்களுடைய பாடல்கள் வீர உணர்ச்சியை ஊட்டியதோடு மகிழ்ச்சி அளிப்பதாயும் இருந்தன. அவர்களுடைய பாடல்களில் மூதுரைகளும், பழமொழிகளும், அறவுரைகளும் அறிவுரைகளும் இலைமறை காய்போல் இங்குமங்குமாக இடம் பெற்றிருந்தன. இவ்வாறு இலக்கியம் அரும்பத் தொடங்கிய காலத்தைப் 'பாணர் – பாடினியின் காலம்' எனலாம்."[16]**

என்பார் வெ. வரதராசன்.

## 5.15. பாணரும் வறுமையும்

பாணரின் வறுமை நிலையை அவர்களின் புறத்தோற்றம் மூலமே காணலாம். உடல் வற்றிப் பசி மிகுந்த சுற்றத்தாரின் உடம்பு உடும்பு உரித்தாற் போன்ற எலும்பெழுந்த விலாப்புடையை உடையவர்களாகக் காணப்பட்டனர். இதனை,

***"உடும்புரித் தன்ன வெண்பெழு மருங்கிற்"*** **(புறம்.68:1)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

### 5.15.1. உணவின்மை, போதிய உடையின்மை

பாணர் சுற்றம் முழுமையும் பசியால் வருந்தும் தன்மையை,

***"பழம்பசி கூர்ந்தவெம் இரும்பே ரொக்கல்"*** **(பெரும்.25)**

***"வருந்தலு முண்டென் பைதலங் கடும்பே"*** **(புறம்.139:15)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

பாணர் கையில் இலக்கண முறைமை நிரம்பிய யாழுடனும் கொடுப்போர் இல்லாமையால் உடம்பில் பசியுடனும் வேர்வையில் நனைந்த ஆடையுடனும் காணப் பெறுவர் என்பதை,

*“கையது கடனிறை யாழே மெய்யது*
*புரவல ரின்மையிற் பசியே யரையது*
*வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்”* (புறம்.69:1–3)

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

பசியால் உலர்ந்த மருங்குலில் சீறியாழினைத் தழுவிக் கொண்டு வருதலை,

*“வணர்கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ”* (புறம்.155:1)

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

பரிசில் பெறாத பாணனை,

*“காரே னொக்கற் கடும்பசி யிரவல”* (புறம்.141:6)

என்பார் பரணர்.

## 5.16. அகவாழ்வுத் தொடர்பு

அகவாழ்வில் பாணர் தலைவனைப் பரத்தையரிடம் கூட்டுவிப்பவராகவும், தலைவன் தலைவிக்குத் தூது செல்பவராகவும் உள்ளனர்.

**“சாதித் தோற்ற காலத்தில் இப்பாணர் ‘இழிசனர்’ ஆயினர். கணவன் மனைவி ஊடலைத் தீர்க்க உதவினர். பரத்தையர் தொழிலுக்கு உதவினர். பிரிந்தவரைக் கூட்டி வைப்பது அவர்களது தொழிலாகி விட்டது.[17]**

என்பார் கா. சுப்பிரமணியன்.

### 5.16.1. தூது செல்லல்

தலைவியைப் பிரிந்து வந்த தலைவன் குறித்த காலத்தில் திரும்ப இயலாத நிலையில் பெருந்துயரம் எய்தி பொறுத்தற்கரிய நினைவுகளால் அல்லலுறும் தலைவிக்குத் துணையாக இருக்கப் பாணனைத் தூது அனுப்புவான். இதனை,

*“பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்*
*துனிமலி துயரமொ டரும்பட ருழப்போள்*

*கையறு நெஞ்சிற் குயவுத்துணை யாகச்*

*சிறுவரைத் தங்குவை"* (ஐங்.477:1–4)

என ஐங்குறுநூறு குறிப்பிடும்.

தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாமையால் பாணனிடம் தலைவனுக்குச் செய்தி சொல்லி அனுப்புவாள். பாணன் தலைவிக்காகத் தலைவனிடம் தூது செல்வதை,

*" 'நீடினம்' என்று கொடுமை தூற்றி*

*வாடிய நுதலள் ஆகி பிறிது நினைந்து*

*யாம்வெம் காதலி நோய்மிகச் சாஅய்*

*சொல்லியது உரைமதி நீயே"* (ஐங்.478:1–4)

*"சொல்லுமதி பாண! சொல்லுதோறு இனிய*

*நாடு இடை விலங்கிய எம்வயின் நாள்தோறும்*

*அரும்பணி கலந்த அருள்இல் வாடை*

*தனிமை எள்ளும் பொழுதில்,*

*பனிமலர்க் கண்ணி கூறியது எமக்கே"* (ஐங்.479:1–5)

என்னும் அடிகள் உணர்த்தும்.

தலைமகட்குத் தூதாகத் தலைவன் தங்கியிருக்கும் பாசறைக்குச் செல்லும் பாணன் அவனைக் கடிந்து கொள்வதன் மூலம் பாணனுக்கும் தலைவனுக்கும் இடையே உள்ள நட்புறவை அறிய முடிகிறது. இதனை,

*"நினக்கியாம் பாணரு மல்லே மெமக்கு*

*நீயுங் குருசிலை யல்லை மாதோ*

*நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி*

*யீரித முண்க ணுகுத்த*

*பூசல் கேட்டு மருளா தோயே"* (ஐங்.480:1–5)

என ஐங்குறுநூறு விளக்கும்.

**“சங்க இலக்கியத்தில் பெரும்பாலும் மருதநிலத்தில் தலைவனின் பரத்தமை நிலையிலும், பரத்தமையினால் ஊடல் ஏற்படும் சந்தர்ப்பத்திலும் பாணர் வாயில்களாகச் செயற்பட்டுள்ளமையைக் காண முடிகின்றது. முல்லை நிலத்தில் குடும்ப உறவில் தலைவன் தலைவியரின் உறவு நெருக்கத்தைப் பேசுவதற்கு உரியனவாகவும் பாலையில் தலைவன் தன்னிலையைப் பற்றிப் பேசுவதற்கு உரிய வாயிலாகவும் பாணர் காட்டப்படுகின்றனர். (நற்.127) பெரும்பாலும் பாணன் தன் தலைவனின் நண்பன் போலச் செயற்பட்டுள்ளதைக் காண முடிகிறது.”[18]**

என அம்மன் கிளி முருகதாஸ் அவர்களின் கூற்றின் மூலமும் பாணனுக்கும் தலைவனுக்கும் இடையே உள்ள நட்புறவை அறிய முடிகிறது.

வேற்று நாட்டில் இருக்கும் தலைவனைக் காணப்போவதாகப் பாணன் தலைவியிடம் கூற, தலைவி தன் நிலையை எடுத்துக் கூறுமாறு வேண்டுவாள். இதனை,

***“பலர் புகழ் சிறப்பின் நும்குரிசில் உள்ளிச்***
***செலவுநீ நயந்தனை ஆயின் மன்ற***
***இன்னா அரும்படர் எம்வயின் செய்த***
***பொய்வலாளர் போல***
***கைவல் பாண! எம் மறவாதீமே”*** **(ஐங்.473:1–5)**

என்னும் அடிகள் உணர்த்தும். தன் துன்பம் கண்டு வருந்தும் பாணனைத் தலைவி தலைவனைவிடத் தம்பால் பேரன்பு கொண்டவன் எனப் பாராட்டுதலை,

***“தொடிநிலை கலங்க வாடிய தோளும்***
***வடிநல னிழந்தவென் கண்ணு நோக்கிப்***
***பெரிதுபுலம் பின்னே சீறியாழ்ப் பாணன்***

*எம்வெம் காதலொடு பிரிந்தோர்*

*தம்மோன் போலான் பேரன் பினனே"* **(ஐங்.475:1–5)**

என ஐங்குறுநூறு பாடல் தெரிவிக்கும்.

## 5.16.2. பரத்தமை கூட்டுவிப்பு

தலைவனோடு புதிய பரத்தியரைக் கூட்டுவிக்கும் பொருட்டு பாணன் வந்தான் எனத் தலைவி கூறுவதை,

*"வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய*

*பரிவொடு வரூஉம் பாணன்"* **(அகம்.56:9–10)**

எனவும்,

*"கொண்டுசெல் பாணநின் தண்துறை ஊரனை"*

**(நற்.380:9)**

எனவும் வரும் பாடலடிகள் மூலம் பாணன் தலைவனைப் பரத்தையரிடம் கூட்டுவிக்கும் இயல்பினன் என்பதை அறியலாம்.

## 5.16.3. தலைவி பாணனைப் புகழ்தலும், பழித்தலும்

போரின் பொருட்டுப் பிரிந்து சென்ற தலைவனைப் பாணன் இப்பொழுதே சென்று அழைத்து வருவதாகக் கூறும் பொழுது அவனது பண்பினைத் தலைவி பாராட்டுவாள். இதனை,

*"மைஅறு சுடர் நுதல் விளங்க கறுத்தோர்*

*செய் அரண் சிதைத்த செருமிகு தானையோடு*

*கதழ் பரி நெடுந் தேர் அதர் படக்கடைஇச்*

*சென்றவர்த் தருகுவல் என்னும்*

*நன்றால் அம்ம, பாணனது அறிவே!"* **(ஐங்.474:1–5)**

என்னும் ஐங்குறுநூறு பாடல் மூலம் அறியலாம்.

பரத்தையின் பொருட்டுப் பிரிந்த தலைவன் தலைவியைக் கூடும் பொருட்டுப் பாணனைத் தூதாக விடுக்கும் போது அவனது பண்பினைப் பழிப்பதைக் காணலாம். இதனை,

*"பாணன் பொய்யன்"* (ஐங்.43:4)

*"பாணன் போலப் பல பொய்த்தல்லே"* (ஐங்.47:5)

*"யார் நலம் சிதையப் பொய்க்குமோ"* (ஐங்.49:4)

*"நாணிலை மன்ற பாண"* (ஐங்.136:1)

*"பண்பிலை மன்ற பாண"* (ஐங்.138:1)

*"ஒருநின் பாணன் பொய்யனாக*
*உள்ள பாண ரெல்லாம்*
*கள்வர் போல்வர்நீ யகன்றிசி னோர்க்கே"* (குறுந்.127:4–6)

என்னும் அடிகள் உணர்த்தும்.

ஊர்க்குயவன் திருவிழா நிகழ்வதை அறிவிக்கத் தலைப்படுகிறான். அவனைத் தோழி அழைத்துத் தலைவனின் வாயிலாக வரும் பாணனின் பொய்மொழியை ஊரெல்லாம் அறியுமாறு கூறுக என்பாள். இதனை,

*"கைகவர் நரம்பிற் பனுவற் பாணன்*
*செய்த அல்லல் பல்குவ வையெயிற்று*
*ஐதகல் அல்குல் மகளிர் இவன்*
*பொய்பொதி கொடுஞ்சொல் ஓம்புமின் எனவே"*

(நற்.200:8–11)

என நற்றிணை பாடல் தெளிவுறுத்தும்.

### 5.16.4. குடும்பச் சூழலில் பாணர்

தலைவன் மனைவி மக்களோடு மகிழ்ந்திருக்கும் வேளையில் உடனிருந்து யாழிசைத்து மகிழ்வூட்டும் சூழலில் பாணனைக் காண முடிகிறது. இதனை,

*“நயந்த காதலித் தழீஇ பாணர்*
*நயம்படு முரற்கையின் யாத்த பயன்தெரிந்து*
*இன்புறு புணர்ச்சி நுகரும்*
*மென்புல வைப்பின் நாடுகிழவோனே”* (ஐங்.407:1–4)

என ஐங்குறுநூறு குறிப்பிடும்.

## 5.17. புறவாழ்வுத் தொடர்பு

பாணர் தம் வறுமையைப் போக்கிக் கொள்ள எப்பொழுதும் புரவலரை நாடிச் செல்லும் பறவை போலத் தம்மை ஆதரிக்கும் புரவலரை நாடிச் செல்வர் என்பதை,

*“பழுமரந் தேரும் பறவை போலக்*
*கல்லென் சுற்றமொடு கல்கிளர்ந்து திரிதரும்”*(பெரும்.20–21)

எனப் பெரும்பாணாற்றுப்படை தெரிவிக்கும்.

## 5.18. பரிசிலராகவே வாழ்தல்

பாணர் அரசனைப் பற்றிப் பாடிப் பல்வேறு பரிசில்களைப் பெறுவர். சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ வீரத்தைப் பாடிய பாடினி பல கழஞ்சால் செய்யப்பட்ட பசும்பொன் அணிகலன்களைப் பரிசாக அவனிடமிருந்து பெற்றாள். பாணன் பொன்னால் செய்து வெள்ளி நாரால் தொடுக்கப்பெற்ற தாமரைப் பூமாலையினைப் பரிசாகப் பெற்றான். இதனை,

*“மறம்பாடிய பாடினியும்மே*
*ஏருடைய விழுக்கழஞ்சிற்*
*சீருடைய விழைபெற்றிசினே*
*இழைபெற்ற பாடினிக்குக்*
*குரல்புணர்ச்சீர்க் கொளைவல் பாண் மகனும்மே*
*எனவாங்கு*

*ஒள்ளழல் புரிந்த தாமரை*

*வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே"* (புறம்.11:11–18)

எனப் புறப்பாடல் உணர்த்தும்.

## 5.18.1. அரசனால் வரிசை பெறுதல்

பாணர் பொற்றாமரை பெற்றதையும், அதைத் தலை பொலிவுறும்படி சூடியிருத்தலையும்,

*"பாணர் தாமரை மலையவும்"* (புறம்.12:1)

*"பாணர் சென்னி பொலியத் தைஇ*

*வாடாத் தாமரை"* (புறம்.126:2–3)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம். பாணர் பொற்றாமரை பூச்சூடியும், விறலியர் பொன்னரிமாலை சூடியும் பரிசில் பெற்றுத் திரும்பும் போதும் குதிரை பூட்டப்பெற்ற நெடிய தேரில் ஆங்காங்கே இளைப்பாறி வருவர். இதனை,

*"பாணன் சூடிய பசும்பொற் றாமரை*

*மாணிழை விறலி மாலையொடு விளங்க*

*கடும்பரி நெடுஞ்தேர் பூட்டுவிட் டசைஇ"* (புறம்.141:1–3)

என்பார் பரணர்.

## 5.19. நாண்மகிழ் இருக்கைச் சூழலில் பாணர்

பாணர் தம் கைதேர்ந்த சிறிய யாழை இசைத்துப் பாட இரவுப்பொழுது நீங்கி விடியற்பொழுதும் வந்தது. அக்காலைப் பொழுதில் சேரமான் வஞ்சனைக் காணப் பாணர் செல்வர் என்பதை,

*"பொறிமயிர் வாரணம் பொழுதறிந் தியம்பப்*

*பொய்கைப் பூமுகை மலரப் பாணர்*

*கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க*

*இரவுப்புறம் பெற்ற வேம வைகறை"* (புறம்.398:3–6)

எனப் புறப்பாடல் தெரிவிக்கும்.

பாணர் அரசன் அவைக்கு முதலில் சென்று இன்புறுத்துவர். அரசன் பாணர் சூழ இருத்தல் சிறப்பாகக் குறிப்பிடப்பெறும். இதனை,

***"பாண்முற் றுகநின் னான்மகி ழிருக்கை"*** **(புறம்.29:5)**

எனவும், பாணர் சூழ இருக்கும் அவையை,

***"பாணர் நாளவை"*** **(பதிற்.38:9)**

எனவும் குறிப்பிடப்பெறும்.

## 5.20. அரசரால் பெருஞ்சிறப்பு

பாணருக்குத் தரும் விருந்தில் அரசன் மட்டுமல்லாது அரசியும் பங்கேற்கிறாள் என்பதை,

***"............ மனைவியும்***
***வேட்டைச் சிறாஅர் சேட்புலம் படராது***
***படுமடைக் கொண்ட குறுந்தா நெடும்பின்***
***விழுக்கு நிணம் பெய்த தயிர்க்கண் விதவை***
***யாணர் நல்லவை பாணரொ டொராங்கு***
***வருவிருந் தயரும் விருப்பினள் கிழவனும்***
***அருஞ்சமந் ததையத் தாக்கிப் பெருஞ்சமத்***
***தண்ணல் யானை யணிந்த***
***பொன்செ யோடைப் பெரும்பரி சிலனே"*** **(புறம்.326:7–15)**

என்பார் தங்காற் பொற்கொல்லனார்.

## 5.21. போர்க்களத்திற்குச் சென்று பாடுதல்

பாண்டியன் வாட்படையினையும், படைக்கலப் பயிற்சியையும் கொண்டு மிக்குச் செல்லுகின்ற கொல்லும் போரினை வெல்லுந்தோறும் அவனை அப்போர்களத்துக்குச் சென்று பாணர் பாடிக் களிற்றைப் பரிசிலாகப் பெறுவர். இதனை,

***"ஒளிறுவாட் தானைக் கொற்றச் செழியன்***
***வெளிறுஇல் கற்பின் மண்டுஅமர் அடுதொறும்***

*களிறு பெறு வல்சிப் பாணன் எறியும்*

*தண்ணுமை . . . .* ” (அகம்.106:10–13)

என்பார் ஆலங்குடி வங்கனார்.

விச்சியர்களுக்குத் தலைவன் அரசர்களோடு போர் செய்த காலத்தில் பாணர் சிங்க நோக்குப் போல் இருபடைகளையும் பார்த்துப் பாடினர். இதனை,

*“வில்கெழு தானை விச்சியர் பெருமகன்*

*வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்*

*புலிநோக் குறழ்நிலை கண்ட*

*கலிகெழு குறும்பூர் ஆர்ப்பினும் பெரிதே”* (குறுந்.328:5–8)

எனக் குறுந்தொகை தெளிவுறுத்தும்.

## 5.22. இனக்குழு வாழ்க்கை

பாணன் தன் சுற்றத்தோடு தானைத் தலைவன் ஒருவனைக் காணச் சென்றதை,

*“இரும்பே ரொக்கலொ டொருங்கினி தருந்தித்*

*தங்கினைச் சென்மோ பாண”* (புறம்.320:14–15)

எனப் பாணர் சுற்றத்தோடு கூடி வாழ்ந்தமையை அறிய முடிகிறது.

பாணர் தலைவனை,

*“இரும்பாண் ஒக்கல் தலைவன்”* (நற்.300:9)

என நற்றிணை குறிப்பிடுகிறது.

## 5.23. தெய்வ வழிபாடு

பாணர்கள் இசையைத் தொடங்கும் போதும், வழியிடைத் தீங்கு நேராமல் இருக்கவும் தெய்வத்தை வணங்குவர்.

யாழ்த் தெய்வத்தை வணங்கிப் பாணர் ஆடுதலையும் பாடுதலையும் தொடங்குவர். இதனை,

*“இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பிக்*
*கடனுடை மரபிற் கைதொழூஉப் பழிச்சி”* **(பெரும்.462–463)**
*“கடவ தெறிந்த இன்குரல் விறலியர்*
*தொன்றொழுகு மரபிற் றம்மியல்பு வழாஅது*
*அருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை”* **(மலை.536–538)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

பாணர் காடுகளின் வழியே செல்லுமிடத்துக் கள்வராலும் விலங்குகளாலும் தீங்கு வராது காத்தற்குக் கடவுளைப் பாடி பரவுவது இயல்பு. இதனை,

*“இலையின் மராத்த வெவ்வந் தாங்கி*
*வலைவலந்தன்ன மென்னிழல் மருங்கின்*
*காடுறை கடவுட்கடன் கழிப்பிய பின்றை”* **(பொரு.50–53)**
*“. . . . . . . . . . . . சென்னியர்*
*தெறலருங் கடவுள் முன்னர்ச் சீறியாழ்*
*நரம்பிசைத் தன்ன . . . . . .”* **(நற்.189:2–4)**
*“கைவ லிளையர் கடவுட் பழிச்ச”* **(பதிற்.41:6)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

பாலை களர் நிலத்திலுள்ள கள்ளி மரத்தின் நிழற்கண் உண்டாகிய தெய்வத்தை வணங்குவர் என்பதை,

*“கள்ளி நீழற் கடவுள் வாழ்த்தி*
*பசிபடு மருங்குலை கசிபுகை தொழாஅக்*
*காணலென் கொல்லென வினவினை வரூஉம்”* **(புறம்.260:5–8)**

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

## 5.24. பொருநர் – விளக்கம்

ஒருவரைப்போல் வேடமிட்டுப் பாடி ஆடுபவர் பொருநர் ஆவர். இவர்கள் தடாரி, கிணை ஆகிய தோற்கருவிகளை இசைத்துப் பாடுவர்.

**"பொருநர் என்போர் திறம்படப் பாடி நடிப்பவர். இவர்கள் தடாரி, கிணை ஆகிய தோற்கருவிகளை இசைத்துப் பாடினர்."[19]**

என்பார் வி.சி. சசிவல்லி.

**"ஏர்க்களம் பாடுநரும், போர்க்களம் பாடுநரும், பரணி பாடுநரும் எனப் பொருநர் பலராம்."[20]**

என்கிறார் நச்சினார்க்கினியர்.

## 5.25. புலம்பெயர் மக்கள்

பேரூர்களில் விழவுக் களந்தோறும் சென்று பாடும் பொருநர் விழா முடிந்ததும் அங்கேயே தங்கியிராது விழா நடக்கும் அடுத்த ஊரை எண்ணிச் செல்லும் இயல்பினர் என்பதை,

*"அறாஅ யாணர் அகன்றலைப் பேரூர்ச்*
*சாறுகழி வழிநாட் சோறுநடை யுறாது*
*வேறுபல முன்னிய விரகறி பொருந"* **(பொரு.1–3)**

எனப் பொருநராற்றுப்படை குறிப்பிடும்.

## 5.26. பொருநர் வறுமை

கொட்டைப் பாசியின் வேர் போன்று அழுக்கோடு குறைந்து போன தையலையுடைய ஆடையைப் பொருநர் உடுத்தியிருப்பர். இதனை,

*"பாசி வேரின் மாசொடு குறைந்த*
*துன்னற் சிதாஅர்"* **(பொரு.153–154)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

பொருநர் அரசரின் புகழைப் பாடியதால், அவர் முதுநீர் பாசி போன்ற உடையினைக் களைந்து புது ஆடையை உடுத்தச் செய்து, கள்ளும் அமிழ்து போன்ற ஊன் துவை அடிசிலும் வெள்ளி வெண் கலத்தே ஊட்டி, ஊருக்கு முன்னிடமான மன்றத்தில் தங்கியிருந்த பொருநரின் சுற்றத்தாரும் பசி தீரும் பொருட்டுச் செந்நெல்லை அளித்தான். இதனை,

*"புன்றலைப் பொருந னளியன் றானெனத்*
*தன்னுழைக் குறுகல் வேண்டி யென்னரை*
*முதுநீர்ப் பாசி யன்ன வுடைகளைந்து*
*திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ*
*மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியும்*
*அமிழ்தன மரபி னூன்றுவை யடிசில்*
*வெள்ளி வெண்கலத் தூட்ட லன்றி*
*முன்னூர்ப் பொதியிற் சேர்ந்த மென்னடை*
*இரும்பே ரொக்கல் பெரும்புலம் பகன்ற"* **(புறம்.390:12–20)**

*"ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி*
*வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை*
*நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்மெனத்*
*தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்*
*கோண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ*
*ஊண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை*
*விருந்திறை நல்கியோனே"* **(புறம்.392:13–19)**

என்னும் அடிகள் உணர்த்தும். பொருநரின் வறுமை வாழ்க்கையினை,

*"ஆடுபசி யுழந்தநின் இரும்பே ரொக்கலொடு நீடுபசி"*

**(பொரு.61–62)**

*"முன்னும் வந்தோன் மருங்கில னின்னும்*
*அளிய னாகலிற் பொருந னிவனென"* **(புறம்.391:11–12)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

தடாரிக் கொட்டி பாடி நின்ற பொருநனுக்கு அரசன் நெய்யிலே பொரித்த தாளிதத்துடன் கூடிய சூடான இறைச்சியையும், கள் தெளிவினையும்,

ஆடையினையும், வறுமை தீருமாறு மழைபோலச் செல்வங்களையும், அருங்கலன்கள் பலவும் தந்தான். இதனை,

*"நொய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு*
*மணிக்கல னிறைந்த மணநாறு தேறல்*
*பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு*
*மாரி யன்ன வண்மையிற் சொரிந்து*
*வேனி லன்னவென் வெப்பு நீங்க*
*அருங்கல நல்கி யோனே"* **(புறம்.397:13–18)**

எனப் புறப்பாடல் விளக்கும்.

## 5.27. துயிலெழுப்புநர்

பொருநர் அரசனை விடியற்காலையில் பெரிய தடாரிப் பறையை ஒலித்துத் துயிலெடை பாடிப் பரிசில் வேண்டி நிற்பர். அவ்விடியற்காலையில் வெள்ளியாகிய மீனும் வானத்தில் எழுவதாயிற்று. பறவைகளும் ஓசையை எழுப்பலுற்றன என்பதை,

*"வெள்ளியு மிருவிசும் பேர்தரும் புள்ளும்*
*உயர்சினைக் குடம்பைக் குரற்றோற்றினவே*
*பொய்கையும் போதுகண் விழித்தன பையச்*
*சுடருஞ் சுருங்கின் றொளியே மாடெழுந்*
*திரங்குரன் முரசமொடு வலம்புரி யார்ப்ப*
*இரவுப் புறங்கண்ட காலைத் தோன்றி"* **(புறம்.397:1–6)**

எனவும், இவ்விடியலில் துயில்பாடி எழுப்புதலை,

*"வைகறை யரவங் கேளியர் பலகோட்*
*செய்தார் மார்ப வெழுமதி துயிலெனத்*
*தென்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி"* **(புறம்.397:8–10)**

எனப் புறப்பாடல் குறிப்பிடும். வெள்ளி எழுந்த இருளையுடைய விடியற்காலத்தில் பொருநர் அரசனை நாடிச் சென்று கண்ணகன்ற உடுக்கையில் தோற்றுவித்த இரட்டைத் தாளத்திற்கேற்ப மன்னனை வாழ்த்திப் பாடுவர். இதனை,

*"பைத்த பாம்பின் துத்தி யேய்ப்பக்*
*கைக்கச டிருந்தவென் கண்ணகன் தடாரி*
*இருசீர்ப் பாணிக் கேற்ப விரிகதிர்*
*வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்*
*ஒன்றியான் பெட்டா அளவையின்"* **(பொரு.69–73)**

எனப் பொருநராற்றுப்படை தெளிவுறுத்தும்.

## 5.28. வேளாண்மை வாழ்த்தல்

அரசனின் தலைவாயிலிலே நின்று கிணையை மீட்டி, பலவாகிய உழவெருதுகளைப் பொருநர் வாழ்த்திப்பாடுவர் என்பதை,

*"நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தித்*
*தன்புக ழேத்தின னாக வென்வலத்*
*திடுக்க ணிரியல் போக வூன்புலந்து"* **(புறம்.383:1–6)**

எனப் புறப்பாடல் தெளிவுறுத்தும்.

## 5.29. கிணைப் பறையை ஒலித்தல்

அதியர் கோமான் பொருட்டு எழினியின் கடை வாயிலில் நின்று பொருநர் கிணைப் பறையை ஒலித்து நின்றனர் என்பதை,

*"மதியேர் வெண்குடை யதியர் கோமான்*
*கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்*
*பசலை நிலவின் பனிபடு விடியற்*
*பொருகளிற் றடிவழி யன்ன வென்கை*
*ஒருகண் மாக்கிணை யொற்றுப"* **(புறம்.392:1–5)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

சோழிய ஏனாதி திருக்குட்டுவனின் முன்றிலில் நின்று பொருநர் கிணைப் பறையை ஒலித்து வஞ்சித்துறைப் பாடலொன்றைப் பாடினர். இதனை,

*"ஒருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்*
*பாடிமிழ் முரசி னியறேர்த் தந்தை*
*வாடா வஞ்சி பாடினே னாக"* **(புறம்.394:6–9)**

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

## 5.30. தடாரிப் பறை அறைந்து பாடுதல்

நெடுமான் அஞ்சியின் முன்றிலில் பொருநர் இரவுப் பொழுதில் தடாரிப் பறையை அறைந்து பாடுவதை,

*"சென்ற ஞான்றைச் சென்றுபட ரிரவின்*
*வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற*
*புன்றலைப் பொருந னளியன் றானென"* **(புறம்.390:10–12)**

என்னும் அடிகள் தெளிவுறுத்தும்.

## 5.31. உணவு

கிணைமகளிர் மீனைக் கொண்டு சென்று அதில் கிடைக்கும் பொருளைக் கொண்டு புளிங்கூழ் சமைப்பர். பொருநர் அவ்வுணவைக் காலமல்லாத காலத்தில் உண்பர். இதனை,

*"நெடுங்கழைத் தூண்டில் விடுமீ னொடுத்துக்*
*கிணைமக ளட்ட பாவற் புளிங்கூழ்*
*பொழுமறுத் துண்ணு முண்டியேன்"* **(புறம்.399:15–17)**

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

## 5.32. அரசரால் பெறும் சிறப்பு

பொருநன் பொற்றாமரைமலரையும் பாடினி பொன்னரி மாலையையும் தேரையும் கலன்களையும் அரசனிடமிருந்து பாடிப் பரிசிலாகப் பெறுவர். இதனை,

*“எரியகைந் தன்ன வேடி றாமரை*
*சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி*
*நூலின் வலவா நுணங்கரின் மாலை*
*வாலொளி முத்தமொடு பாடினி யணியக்*
*கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தே*
*ரூட்டுளை துயல்வர வோரி நுடங்க”* **(பொரு.159–164)**

எனப் பொருநராற்றுப்படை தெளிவுறுத்தும்.

அரசனே வந்து பொருநரை வழியனுப்புதலை,

*“பால்புரை புரவி நால்குடன் பூட்டிக்*
*காலி னேழடிப் பின்சென்று கோலின்*
*தாறுகளைந் தேறென் றேற்றி”* **(பொரு.165–167)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

**“காலின் ஏழடி சென்று என்றது, உயர்குடிப்பிறந்தார், நண்பர், பெரியோர் முதலியோரை வரவேற்கும் போதும் வழிவிடும் போதும் நிரலே ஏழடி எதிர் சென்று வரவேற்றலும் ஏழடி பின் சென்று வழி விடுதலும் ஆகிய மரபினைக் குறித்து நின்றது. இங்ஙனம் செய்தல் தம்மோடொத்தோராகவாதல் உயர்ந்தோராகவாதல் கருதிய வழியன்றி நிகழ்தல் மரபன்று.”[21]**

எனக் கூறும் பொ. வே. சோமசுந்தரனார் அவர்களின் கூற்றும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

## 5.33. விறலியர் – விளக்கம்

விறல்படப் பாடி ஆடுபவள் விறலி ஆவாள். இவள் தனித்து நின்று நிகழ்ச்சி நடத்துவதோடு பாணர் முதலான கலைஞர் குழுவிலும் சென்று ஆடுவர்.

**“சங்க காலச் சமுதாயத்தில் தாம் கற்ற கலையைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்த கலைஞர்கள் இருந்தனர். தம்**

**உள்ளக்குறிப்புப் புறத்தே வெளிப்படுமாறு திறமையுடன் (விறல்பட) ஆடும் மகளிர் வாழ்ந்தனர். அவ்வாடல் மகளிரை அக்காலத்தில் விறலியர் என அழைத்தனர். விறலியர் என்போர் பாணருடனும், கூத்தருடனும் சென்று வள்ளல்களிடமும், மன்னர்களிடமும் நடனமாடிக் காட்டிப் பரிசு பெற்று வரும் தொழிலுடையவர்."[22]**

என்பார் வி.சி. சசிவல்லி.

**"விறலி – உள்ளக்குறிப்பு புறத்துப் புலப்பட ஆடுபவள், பாணர்குலப் பெண், பதினாறு அகவைப் பெண்."[23]**

எனச் செந்தமிழ் அகராதி கூறுகிறது.

**"விறலி என்ற சொல்லுக்கு விறல்பட ஆடுபவள் என்பதை விட மன்னவனின் விறலை – வீரத்தைப் பாடி ஆடுபவள் என்ற காரணம் பொருத்தமாகிறது."[24]**

என்பார் சரளா ராஜகோபாலன்.

## 5.34. புறவாழ்வுத் தொடர்பு

காவினது ஒரு பக்கத்தில் பதலையையும் மறுபக்கத்தில் துளையை அகத்தே உடைய சிறிய முழவையும் தொங்கவிட்டு விறலியர் புரவலரை நாடிச் செல்வர். இதனை,

*"ஒருதலைப் பதலை தூங்க வொருதலைத்*
*தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூங்கிக்*
*கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்*
*சுரனமுத லிருந்த சில்வளை விறலி"* **(புறம்.103:1–4)**

என்பார் ஔவையார்.

## 5.34.1. சார்ந்து வாழும் மரபினர்

விறலியர் கூத்தர், பாணர், பொருநருடன் சார்ந்து வாழும் மரபினர் ஆவர். நல்ல யாழையும் சிறுபறையையும் ஒருதலை மாக்கிணையுடன் கட்டி விறலி பாசறைக்குச் சென்றனர், இதனை,

> ***"நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கிச்***
> ***செல்லா மோதில் சில்வளை விறலி"*** **(புறம்.64:1–2)**

எனப் புறப்பாடல் உணர்த்தும். நாடக அரங்கில் விறலியின் பின் நின்று மத்தளம் வாசிக்கப்படும், இதனை,

> ***"ஆடுமயில் முன்னதாகக் கோடியர்***
> ***விழவுகொள் மூதூர் விறலி பின்றை***
> ***முழவன் . . . . . "*** **(அகம்.352:4–6)**

என அகப்பாடல் உணர்த்தும்.

> **"எட்டுத்தொகை நூல்களுள் பெருவழக்காயிருந்த விறலியாற்றுப்படை பத்துப்பாட்டில் இல்லை. பொருநன் முதலானோருடன் விறலி சென்றமை சேர்த்துக் குறிக்கப் பட்டுள்ளதால், தனியாக விறலியாற்றுப்படை பாடப்பெறவில்லை என்பர் பேராசிரியர் லெ.ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் (I.C.T. Studies, Vol. II) அது பொருத்தமாகாது. ஆணாதிக்கம் மேலோங்கியது. பெண்கள் ஆடவர் பாதுகாப்பில் வாழவேண்டியதேற்பட்டது. ஆகவே பெண்கள் தம் இச்சை போல எங்கும் செல்ல முடியவில்லை. தகுந்த ஆடவருடைய பாதுகாப்பிலே செல்ல வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. இவ்வுண்மையை விளக்குவது போல, மலைபடுகடாம், கூத்தர் தலைவனைச் சூழ விறலியர் நிற்பதனை எடுத்துக்காட்டுகிறது**

**(மலை.44–50). அதனாலேயே பத்துப்பாட்டில் விறலியாற்றுப்படை இடம்பெறவில்லை எனலாம்."[25]**

என்பார் கா. சுப்பிரமணியன்.

### 5.34.2. ஆடல் பாடலில் வல்லவர்கள்

விறலியர் ஆடல் பாடல் இசையில் வல்லவர்கள் என்பதை,

*"ஆடுக விறலியர் பாடுக பரிசிலர்"* **(பதிற்.58:1)**

எனவும், இனிய குரலால் பாடும் விறலியர்க்குப் பெண் யானைகள் பரிசளிக்கப்பட்டதை,

*"ஆடுசிறை யறுத்த நரம்புசே ரின்குரற்*
*பாடு விறலியர் பல்பிடி பெறுக"* **(பதிற்.43:21–22)**

எனவும் பதிற்றுப்பத்து குறிப்பிடும். வேள் ஆய் அண்டிரனிடம் போகும்படி விறலியை ஆற்றுப்படுத்துவதைப் புறநானூறு (133) பாடல் மூலம் அறியலாம்.

### 5.34.3. தெருவில் இரவுக் கூத்தினர் (பொதுவியல்)

விறலியர் மூங்கில்களை உயரமாக நட்டு, மட்பாண்டிலைத் திரியிட்டு எண்ணெய் பெய்து எரிப்பர். கூத்தாடும் களரியின் இரண்டு பாண்டில்கள் வலப்பக்கத்தொன்றும் இடப்பக்கத்தொன்றுமாக நிறுத்துவர். அப்பாண்டிலின் சுடரில் விறலியர் கூத்தாடுவர், இதனை,

*"வளிமுனை யவிர்வருங் கொடிநுடங்கு தெருவிற்*
*சொரிசுரை கவரு நெய்வழி புராலின்*
*பாண்டில் விளக்குப் பரூஉச் சுடரழல*
*நன்னுதல் விறலிய ராடும்"* **(பதிற்.47:4–7)**

எனப் பதிற்றுப்பத்து தெரிவிக்கும்.

## 5.34.4. அரண்மனையில் கூத்து (வேத்தியல்)

பொருநர் சுற்றம் அரசனின் அரண்மனையில் பல நாட்கள் உண்டும் கண்டும் கேட்டும் தங்கும் பொழுது விறலியர் முழவிசையோடு சீறியாழும் இசைக்கத் தாளத்திற்கேற்ப பாடி ஆடுவர். இதனை,

***"வேறுபல் லுருவின் விரகுதந் திரீஇ***
***மண்ணமை முழவின் பண்ணமை சீறியாழ்***
***ஒண்ணுதல் விறலியர் பாணி தூங்க"*** **(பொரு.108–110)**

எனப் பொருநராற்றுப்படை மூலம் அறியலாம்.

மயில்கள் உலவி ஆடுகின்ற காட்சி, ஆடுகளத்திற் புகுந்தாடும் விறலி போலத் தோற்றம் தருகின்றது என்பதை,

***"கழைவளர் அடுக்கத்து இயல்ஆடு மயில்***
***நனவுப் புகு விறலியின் தோன்றும்"*** **(அகம்.82:9–10)**

என்பார் கபிலர்.

## 5.35. அகவாழ்வுத் தொடர்பு

விறலியர் அகவாழ்வில் தூது செல்பவளாகவும், தலைவனைப் பரத்தையரிடம் கூட்டுவிப்பாளாகவும் உள்ளாள்.

> **"தலைவனது புதுப்புதுப் பரத்தை உறவிற்குத் துணையாக ஒரு விறலி இருந்தாள்."[26]**

என்பார் வ.சுப. மாணிக்கம்.

> **"பரத்தை வாழ்வில் கலைக்கு இடமுண்டு. பாணர் போன்றோர் தலைவனின் வாழ்வியலில் உதவுவதற்கு அவர்களுடைய கலைத்தன்மையே காரணமாக இருந்திருக்க வேண்டும். இசைக்கலையால் பரத்தையர் உறவுடைய தலைவனுக்குப் பாணர், கூத்தர், பாடினி, விறலி போன்றோர் அணுக்க**

**மாகி அவனுக்கு வாழ்வில் சிக்கல் எழுந்தபோது வாயில்களாக மாறி உதவ முன் வருவதாகக் கருதலாம்."27**

என்பார் ஏ.என். பெருமாள்.

விறலி அகவாழ்வில் தலைவனுக்குப் பரத்தையைக் கூட்டுவிப்பாளாக உள்ளாள். அவள் உண்மை பேசுதலைத் தவிர்த்த நாவினையுடையவளாகவும், நிலை குலைந்த இழிந்த சொல்லினையுடையவளாகவும் உள்ளாள். பாணன் கையிலே உள்ள தண்ணுமை என்னும் இசைக்கருவி யாதும் அற்ற ஒரு போர்வையைக் கொண்டிருப்பது போல விறலியின் சொல்லும் அமைந்துள்ளது. இதனை,

*". . . . . . . . . . . . . . . . . ஊரற்கு நாளை*
*மகட்கொடை யெதிர்ந்த மடங்கெழு பெண்டே*
*தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி*
*உடன்பட் டோராத் தாயரோ டொழிபுடன்*
*சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்*
*கன்றுபெறு வல்சிப் பாணன் கையதை*
*வள்ளுயிர்த் தண்ணுமை போல*
*உள்யாதும் இல்லதோர் போர்வையஞ் சொல்லே"*

**(நற்.310:4–11)**

என்பார் பரணர்.

தலைவியின் ஊடலைத் தீர்க்கத் தலைவன் விறலியைத் தூது அனுப்பினான். விறலியைக் கண்ட தோழி, இவள் நம் தலைவனை மற்றொரு பரத்தைபால் சேர்க்க வந்தனள். நாம் நம் தலைவனைப் பாதுகாத்துக் கொள்வோம் எனக் கூறுகிறாள். இதனை,

*"மடக்கண் தகரக் கூந்தல், பணைத்தோள்*
*வார்ந்த வால் எயிற்று சேர்ந்து செறி குறங்கின்*
*பிணையல் அம்தழை தைஇ துணையிலள்*

*விழவுக் களம் பொலிய வந்து நின்றனளே*

*எழுமினோ எழுமின், எம் கொழுநற் காக்கம்"* (நற்.170:1–5)

என நற்றிணை உணர்த்தும்.

## 5.36. தெய்வ வழிபாடு

நாடக மகளிர்க்கு வகுத்த இலக்கண முறையில் பிறழாத விறலியர் பாடி ஆடத் தொடங்குமுன் கடவுளை வாழ்த்துதலை மரபாகக் கொண்டிருந்தனர் என்பதை,

*"கடவ தறிந்த இன்குரல் விறலியர்*

*தொன்றொழுகு மரபில் தம்மியல்பு வழா அது*

*அருந்திறற் கடவுட் பழிச்சிய பின்றை*

*விருந்திற் பாணி கழிப்பி"* (மலை.536–539)

என மலைபடுகடாம் தெளிவுறுத்தும்.

## 5.37. கொல்லர்

இரும்புத் தொழில் செய்வோர், பொன் தொழில் செய்வோர் எனக் கொல்லர் இருவகைப்படுவர்.

### 5.37.1. இரும்பு செய் கொல்லர்

இரும்பு செய் கொல்லரைக் கருங்கைக் கொல்லன் எனவும் அழைப்பர்.

#### 5.37.1.1. உலைக்கல்

கொல்லர் இரும்பை வைத்துச் சம்மட்டி கொண்டு அடிக்கப் பயன்படும் கல் 'உலைக்கல்' எனப்பெறும். இதனைப் பட்டடைக்கல் என்றும் அழைப்பர். பகைவரால் தாக்கிக் கெடுக்க முடியாத அரசரின் வலிமை உலைக்கல்லுக்கு உவமிக்கப்படும். இதனை,

*"நசைவர்க்கு மென்மை யல்லது பகைவர்க்கு*
*இரும்புபயன் படுக்குங் கருங்கைக் கொல்லன்*
*விசைத்தெறி கூடமொடு பொரூஉம்*
*உலைக்கல் அன்ன வல்லா ளன்னே"* (புறம்.170:14–17)

எனப் புறப்பாடல் குறிப்பிடும்.

பாலை நிலத்துக் கற்பாறைகள் கொல்லனது உலைக் களத்திலுள்ள உலைக்கல்லைப் போன்ற வெம்மை உடையன என்பதை,

*“எறும்பி அளையின் குறும்பல் சுனைய*

*உலைக்கல் அன்ன பாறை ஏறி”* **(குறுந்.12:1–2)**

எனக் குறுந்தொகை பாடல் தெளிவுறுத்தும்.

**“நாடோடிகளாக வாழ்ந்து வந்த மக்கள் மிருகங்களை வேட்டையாடி தங்களது வாழ்க்கையை நடத்தி வந்தனர். அக்காலக் கட்டத்தில் கற்களினாலே கருவிகள் செய்து வேட்டையாடி வந்தனர். முதன் முதலில் நாடோடிகளாக, வாழ்ந்த அவர்கள் தங்களது அறிவு வளர வளர பயிர்த் தொழில் போன்றவற்றைச் செய்ய முற்பட்டனர். பயிர்த்தொழில் செய்ய முற்பட்ட அவர்கள் தங்களது நாடோடி வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்து ஓரிடத்தில் குடியேறத் தொடங்கினர். அவ்வாறு குடியேறிய மக்கள் தங்களது தொழிலுக்குக் கற்களினாலே செய்யப்பட்ட கருவிகளைப் பயன்படுத்துவது அதிக பயனைத் தராது என்பதை அறிந்தனர். அதன் விளைவாக இரும்பின் பயனைக் கண்டு அதிலிருந்து பல்வேறு இரும்புப் பொருள்களைச் செய்து வந்தனர். இவ்விரும்புவேலை செய்பவர்களைக் கொல்லர் என அழைத்தனர்.”[28]**

என்பார் வே. சா. அருள்ராஜ்.

## 5.37.1.2. போர்க்கருவிகள் செய்தல்

வேலை வடித்துக் கூரியதாக்கித் தருவது கொல்லனின் கடமையாகும். இதனை,

*“வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே”* **(புறம்.312:3)**

என்பார் பொன்முடியார்.

நெடிய வேலை வடிப்பதற்குத் தன்னுடைய ஊரில் உள்ள வலிய கையினை உடைய கொல்லனை வேண்டி நிற்பதை,

***"கருங்கைக் கொல்லனை யிரக்கும்***

***திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே"*** **(புறம்.190:12–13)**

என்கிறது புறநானூறு.

வலிய கையையுடைய கொல்லன் தீயில் பழுக்கக் காய வைத்த இரும்பை அடித்து அதன் வெம்மை குறைய நீரைத் தெளிப்பர். இதனை,

***"கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய***

***இரும்பு ணீரினு மீட்டற் கரிதென"*** **(புறம்.21:7–8)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 5.37.1.3. உலைமூக்கு

கொல்லுலையில் பொருத்தப்பட்டிருக்கும் துருத்தியின் குழாய்ப்பகுதிக்கு உலைமூக்கு என்று பெயர். இதனைக் குருகு என்றும் அழைப்பர். இதனை,

***"நறா அவவிழந்த தன்னவென் மெல்விரற் போதுகொண்டு***

***செறாஅச் செங்கண் புதைய வைத்துப்***

***பறாஅக் குருகின் உயிர்த்தலு முயிர்த்தனர்"*** **(கலித்.54:9–11)**

எனக் கலித்தொகை விளக்கும்.

உள்ளே பெருமூச்செறிந்து வருந்தச் செய்யும் இரவு கொல்லன் ஊதுகின்ற உலைமூக்குப் போன்றது என்பதை,

***"நல்லரா நடுங்க வுரறிக் கொல்லன்***

***ஊதுலைக் குறுகி னுள்ளுயிர்த் தகழு***

***நடுநாள் வருத லஞ்சுதும் யாமென"*** **(நற்.125:3–5)**

என நற்றிணை குறிப்பிடும். உலையிலிருந்து வெளிவருகின்ற பெருங்காற்றைத் துன்பத்திலிருப்பவர் வெளிவிடும் பெருமூச்சுக்கு ஒப்பிடுவர். இதனை,

*"............... கொல்லன்*

*ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த்து அகழும்"* (நற்.125:3–4)

*"............. கொல்லன்*

*விசைத்துவாங்கு துருத்தியின் வெய்ய உயிரா"*

(அகம்.224:2–3)

என்னும் அடிகள் உணர்த்தும். நண்டினது காலுக்குக் கொல்லனின் குறடு உவமிக்கப்படும். இதனை,

*"வன்புல மிறந்த பின்றை மென்றோல்*

*மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன*

*கவைத்தா ளலவ னளற்றளை சிதைய"* (பெரும்.206–208)

என்கிறது பெரும்பாணாற்றுப்படை.

## 5.37.1.4. சம்மட்டி

உலைக்களத்தில் இரும்பினைக் காய்த்து பட்டடைக் கல்லின் மேல் வைத்து ஓங்கி அடிப்பதற்குச் சம்மட்டி என்னும் கருவியைப் பயன்படுத்துவர். கொல்லர் சம்மட்டியை உரத்து அடிக்கும் ஓசை புறாக்களின் துயிலைக் களைக்கும் என்பதை,

*"கருங்கைக் கொல்லன் இரும்புவிசைத் தெறிந்த*

*கூடத் திண்ணிசை வெரீஇ மாடத்து*

*இறையுறை புறவின் செங்காற் சேவல்*

*இன்துயில் இரியும்....."* (பெரும்.437–440)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## 5.37.1.5. குறடு

கொல்லர்கள் கரியை உலையில் எடுத்துப் போடுவதற்காகவும் உலையில் சூடாக்கப்பட்ட இரும்பை வெளியில் எடுப்பதற்காகவும் குறடு என்னும் கருவியைப் பயன்படுத்துவர். இதனைக் கைகவர் இரும்பு என்றும் அழைப்பர் என்பதை,

*"பிடியுயிர்ப் பன்ன கைகவ ரிரும்பின்*

*ஓவுற ழிரும்புறங் காவல் கண்ணி"* (புறம்.345:8–9)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 5.37.1.6. கோடாரி

கொல்லன் அரத்தால் கோடாரியைச் செப்பம் செய்து கொடுத்தலை,

*"கருங்கைக் கொல்ல னரஞ்செ யவ்வாய்*

*நெடுங்கை நவியம் பாய்தலின்"* (புறம்.36:6–7)

என்கிறது புறநானூறு.

### 5.37.1.7. துருத்தி

கொல்லன் உலையிலுள்ள நெருப்பின் வெப்பத்தை அதிகரிப்பதற்காகப் பயன்படுத்தும் தோற்கருவி துருத்தி ஆகும். கொல்லன் வேகமாக இழுத்து விடும் உலைக்களத்துத் துருத்தி போல குதிரைகள் வெப்பப் பெருமூச்சு விடும் என்பதை,

*".. . . . . கொல்லன்*

*விசைத்துவாங்கு துருத்தியின் வெய்ய உயிரா*

*கொடுநுகத்து யாத்த தலைய, கடுநடை*

*கால் கடுப்பு அன்ன கடுஞ்செலல் இவுளி"* (அகம்.224:2–5)

என அகப்பாடல் தெளிவுறுத்தும்.

ஆம்பலின் அகன்ற இலை வாடைக்காற்று விட்டு விட்டுப் புகுந்து அலைத்தலால், அவ்விலை ஊதப்பெறும் கொல்லனது உலைக்களத்து விசை கொண்டு இழுக்கும் துருத்தியைப் போலப் புடைத்துச் சுருங்கும் என்பதை,

*"அருவி ஆம்பல் அகல் அடை துடக்கி*

*அசைவரல் வாடை தூக்கலின் ஊதுஉலை*

*விசைவாங்கு தோலின் வீங்குபு ஞெகிழும்"* (அகம்.96:5–7)

என்கிறது அகநானூறு. தலைவனைப் பிரிந்த தலைவியின் நெஞ்சு உலையிற் செறித்த துருத்தியைப் போல வருந்தும் என்பதை,

*"உலைவாங்கு மிதிதோல் போலத்*

*தலைவரம் பறியாது வருந்துமென் னெஞ்சே"* **(குறுந்.172:6–7)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 5.37.1.8. மீனவர்க்கு எறியுளி

கொல்லர்கள் கூரிய வாயையுடைய எறியுளியை மீனவர்க்கு செய்து தருவர் என்பதை,

*"கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறியுளி"* **(குறுந்.304:1)**

எனக் குறுந்தொகை குறிப்பிடும்.

### 5.37.1.9. உலைக்களம்

கொல்லனின் உலைக்களத்து நடக்கின்ற நிகழ்ச்சிகள் பலவற்றை உவமையாக விளக்குவர். கொல்லன் உலைக்களத்து அடிக்குங்கால் தெறித்து விழும் பொன் துகள்கள், மாலையினின்று வீழும் தேன் துளிக்கும், மின்மினிகள் நாற்புறமும் ஒளிவிட்டுப் பறப்பது போன்றும், வேங்கை மரத்தின் மலர்கள் உதிர்வது போன்றும் உள்ளன என்பதை,

*"பெயல் அலைக் கலங்கிய மலைப்பூங் கோதை*

*இயல்எறி பொன்னின் கொங்குசோர்பு உறைப்ப"*

**(அகம்.142:24)**

*"மின்மினி மொய்த்த முரவு வாய்ப் புற்றம்*

*பொன்எறி பிதிரின் சுடர வாங்கி*

*குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை*

*இரும்பு செய் கொல் எனத் தோன்றும்"* **(அகம்.72:3–6)**

*". . . . . . . . . . . . . கொல்லன்*

*எறிபொற் பிதிரிற் சிறுபல் காய*

*வேங்கை வீயுகும். . . . . ."* **(நற்.13:5–7)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

கொல்லன் காய்ச்சி அடித்த இரும்பினது வெம்மையை நீக்குவதற்கு நீர்த்தொட்டியிலிருக்கும் நீரை மடலால் எடுத்துத் தெளிப்பான் என்பதை,

*"இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த*
*தோய்மடற் சின்னீர். . . . ."* (நற்.133:9–11)

என்கிறது நற்றிணை. கொல்லர் ஏழு ஊர்களுக்குப் பொதுவாக ஓர் ஊரில் உலைக்களம் அமைத்திருப்பர் என்பதை,

*"ஏழூர்ப் பொதுவினைக்கு ஓர்ஊர் யாத்த*
*உலைவாங்கு மிதிதோல். . . . . ."* (குறுந்.172:5–6)

எனக் குறுந்தொகை குறிப்பிடும். கொல்லனது பணிக்களரியை,

*'கொற்றுறைக் குற்றில்'* (புறம்.95:5)

எனவும்,

*'விசைத்தெறிகூடம்'* (புறம்.170:16)

எனவும் அழைப்பர்.

### 5.37.1.10. புலவர் மரபு உருவாதல்

கொல்லர் சமுதாயத்தில் புலவர் பலர் தோன்றியிருக்கின்றனர். மதுரைப் பெருங்கொல்லன் (குறுந்.141), மதுரை கொல்லன் வெண்ணாகனார் (அகம்.363, நற்.285), மதுரைக் கொல்லன் புல்லன் (குறுந்.373) முதலியோர் ஆவர்.

## 5.38. பொற்கொல்லர்

பொன், வெள்ளி, செம்பு முதலிய வேலைகளைச் செய்வோர் பொற்கொல்லர் ஆவர். இவர்களைக் கம்மியர் எனவும் அழைப்பர். கம்மியன் பொன்னாலாகிய அணிகலனைப் பழுதறச் செய்தான் என்பதை,

*"ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த*
*பொலஞ்செய் பல்கா சணிந்த வல்குல்"* (புறம்.353:1–2)

எனப் புறப்பாடல் விளக்கும். பல வண்ணக்கற்கள் இட்டிழைத்த பொன்னாலாகிய சுரிதகம் என்னும் அணியைச் செய்தனர் என்பதை,

*"கைவல் வினைவன் தையுபு சொரிந்த*

*சுரிதக உருவின . . . . . "* (நற்.108:5–6)

என்பார் நக்கீரர். பொற்கொல்லர் பொன்னை நெருப்பில் உருக்கி ஆபரணங்கள் செய்து தருபவர் என்பதை,

*"சூடுறு நன்பொன் சுடரிழை புனைவார்"* (மது.512)

என மதுரைக்காஞ்சி குறிப்பிடும்.

வேங்கை மரத்தில் மலர்ந்த பூ பொன்னைப் பணி செய்யும் கம்மியன் உடைய கைவினையைப் போல் அழகுற்று விளங்குகிறதாம். இதனை,

*"கருங்கால் வேங்கை நாளுறு புதுப்பூப்*

*பொன்செய் கம்மியன் கைவினை கடுப்ப"* (நற்.313:1–2)

என நற்றிணை தெரிவிக்கும்.

பொன்னின் தரங்காண்பதற்குக் கட்டளைக் கல்லைப் பயன்படுத்தினர். இதனை,

*"பொன்காண் கட்டளை கடுப்ப"* (பெரும்.220)

*"உரைதிகழ் கட்டளை கடுப்ப"* (குறுந்.192:4)

*"பொன்உரை கட்டளை கடுப்ப"* (அகம்.178:11)

*"கட்டளை அன்ன மணிநிறத் தும்பி"* (ஐங்.215:1)

*"கட்டளை அன்ன கேழல் மாந்தும்"* (ஐங்.263:2)

என்னும் அடிகள் உணர்த்தும். தாது அளைந்து வரும் வண்டின் தோற்றம் பொன்னுரைகல் போல் உள்ளது என்பதை,

*"நறுந்தாது ஆடிய தும்பி பசுங்கேழ்ப்*

*பொன்உரை கல்லின் நல்நிறம் பெறூஉம்"* (நற்.25:3–4)

என நற்றிணை குறிப்பிடும். கம்மியன் கலன் பொறியற்றுப் போயின் இணைத்துச் சந்து ஊதிக் கூட்டுதற்கு மண் கட்டுவர். இதனை,

*"உறுவினைக் கசாவா உலைவில் கம்மியன்*

*பொறியறு பிணைக்கூட்டுந் துறைமணல்"* (நற்.363:4–5)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம். கம்மியர் செம்பினாலே செய்த பானையைக் கடையும் பொழுது மின்னல் ஒளி தோன்றும் என்பதை,

*". . . . .. . . கம்மியர்*

*செம்புசொரி பானையின் மின்னி"* (நற்.153:2–3)

என்னும் அடிகள் உணர்த்தும். முத்துக்களின் மீது மூடியிருக்கும் மாசினைப் போக்கி ஒளிபெறச் செய்து அவற்றிற்குத் துளை முதலியன இடுவர். இதனை,

*"கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ*

*மண்ணாப் பசுமுத்து. . . . . "* (நற்.94:4–5)

என்கிறது நற்றிணை.

### 5.38.1. அளவுக்கருவி

கம்மியர் கன்னம் என்ற தராசுத்தட்டில் பொன்னை நிறுப்பர் என்பதை,

*"பொன்செய் கன்னம் பொலிய"* (அகம்.317:8)

என அகப்பாடல் தெரிவிக்கும். அரசரும் தேவியரும் மற்றும் மக்களும் அணியும் அணிகலன் பற்றிய குறிப்புகளிலிருந்து பொற்கொல்லரின் தொழில் சிறப்புற்றிருந்ததை அறியலாம் (மது.719–720, பெரும்.181, 311, பொரு.159, 162).

### 5.38.2. புலவராய் விளங்குதல்

பொற்கொல்லர் புலவராகவும் இருந்துள்ளனர். தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் அத்தகையோருள் ஒருவர் ஆவர். அவர் பாடிய பாடல்களாக (அகம்.48, 108, 355, புறம்.326, குறுந்.217, நற்.313) ஆகிய பாடல்கள் கிடைக்கின்றன.

### 5.39. குயவர்

மட்பாண்டம் செய்வோர் குயவர் ஆவார். குயவர் தாழி முதலியனவும் வனைந்தனர். குயக்குலத்து இளையோர் கலம் வனைதற்கு மண்ணைப் பிசைந்து கொணர்ந்து திகிரிக்கண் வைப்பர் என்று வரும் கோவூர்க்கிழாரின்

*“. . . . . .. . . நன்மதி*

*வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த*

*பசுமண் குரூஉத்திரள் . . . .”* **(புறம்.32:7–9)**

என வரும் பகுதியால் குயவர்களை அறிய முடிகிறது.

### 5.39.1. மட்பாண்டச்சூளை

குயவர் மட்கலன்களைச் செய்து சூளையிடுவர். அச்சூளையிலிருந்து மிகுந்த புகை எழுந்தது என்பதை,

*“இருள்திணிந் தன்ன குரூஉத்திரள் பரூஉப்புகை*

*அகலிரு விசும்பின் ஊன்றுஞ் சூளை*

*நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே”* **(புறம்.228:2–4)**

*“கலஞ்சுடு புகை”* **(அகம்.308:6)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

மட்கலம் சுடுகின்ற சூளையின் புகை வெண்ணிற மேகம் சூழ்ந்து காணப்படுவது போலத் தோன்றும் என்பதை,

*“இலங்குமலை புதைய வெண்மழை கவைஇ*

*கலம்சுடு புகையின் தோன்றும்”* **(அகம்.308:5–6)**

என அகப்பாடல் தெரிவிக்கும்.

குயவர்கள் அதிக அளவில் மண் பாத்திரங்கள் செய்யச் சக்கரங்கள் பயன்படுத்தப்பட்டன. இதனை,

*“வனைகலம் திகிரியின் குமிழி சுழலும்*

*துணைசெவல் தலைவாய் ஓவிறந்து வரிக்கும்”* **(மலை.474–475)**

என மலைபடுகடாம் குறிப்பிடும்.

### 5.39.2. ஈமத்தாழி செய்தல்

கிள்ளிவளவன் விண்ணுலகம் அடைந்ததனால் அவனைப் புதைப்பதற்கு நிலவுலகை ஆழியாகவும், மேரு மலையை மண்திரளாகவும் கொண்டு பெரியதொரு தாழி செய்ய வேண்டும் என ஐயூர்முடவனார் குயவனிடம் வேண்டுவதை,

*"தேவருலக மெய்தின னாதலின்*
*அன்னோற் கவிக்குங் கண்ணகன் றாழி*
*வனைதல் வேட்டனை யாயி னெனையதூஉம்*
*இருநிலந் திகிரியாப் பெருமலை*
*மண்ணா வனைத லொல்லுமோ நினக்கே"* **(புறம்.228:11–15)**

எனப் புறப்பாடல் தெளிவுறுத்தும்.

தலைவி ஒருத்தி குயவனிடம் ஈமத்தாழியை அகலமாகச் செய்து தருமாறு வேண்டுவதைக் கீழ்க்கண்ட அடிகள் குறிப்பிடும்.

*"கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே*
*அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய*
*சிறுவெண் பல்லி போலத் தன்னொடு*
*சுரம்பல வந்த வெமக்கு மருளி*
*வியன்பல ரகன்பொழி லீமத் தாழி*
*அகலி தாக வனைமோ*
*நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே"* **(புறம்.256:1–7)**

### 5.39.3. குயவர் நம்பிக்கை

நொச்சி மாலையைச் சூடிப் பலிகளை இடுகின்ற செயல்புரியும் கையினை உடைய முதிய குயவன் தான் இடுகின்ற பலியை உண்ணுதற்காகத் தெய்வங்களையும் காக்கைகளையும் அழைப்பான். இதனை,

*"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்*
*பலிகள் ஆர்கைப் பார்முது குயவன்*
*இடுபலி நுவலும் அகன்றலை மன்றத்து"* **(நற்.293:1–3)**

என நற்றிணை விளக்கும்.

### 5.39.4. குயவர் – திருவிழா அறிவிக்கும் மரபு

குயவர்கள் திருவிழாவினை ஊரவர்க்கு அறிவித்தலையும் செய்வர் என்பதை,

*"ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி*
*யாறுகிடந் தன்ன அகனெடுந் தெருவில்*
*சாறென நுவலும் முதுவாய்க் குயவ"* **(நற்.200:2–4)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

### 5.40. தச்சர்

தச்சுத்தொழில் செய்வோர் தச்சர் எனப்பட்டனர். தச்சர், தேர், வண்டி, கட்டில், சிறுவர்கள் விளையாடும் சிறுதேர் முதலியவற்றைச் செய்துள்ளனர்.

**"தச்சு என்பது ஒன்றையும் மற்றொன்றையும் பொருத்தி இணைப்பதாகும். இத்தச்சுத் தொழிலைச்செய்வோர் தச்சர் எனப்பட்டனர். கல்தச்சுத் தொழில் செய்வோர் கல்தச்சர் எனவும், மரத்தச்சு செய்வோர் மரத்தச்சர் எனவும் வழங்கப்பட்டனர்."[29]**

என்பார் வி.சி. சசிவல்லி. தச்சரை,

*"கருந்தொழில் வினைஞர்"* **(சிறு.257)**

எனச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. தச்சச்சிறுவர்கள் தங்கள் தொழிலுக்கு வேண்டிய மரங்களைக் காட்டில் சென்று வெட்டி வருவர் என்பதை,

*"மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்*
*மழுவுடைக் காட்டகத் தற்றே"* **(புறம்.206:11–12)**

எனப் புறநானூறு குறிப்பிடும்.

உளியில் குடைந்து செய்த மரத்தாலான மணி மாலையை உமணர் வளர்த்த குரங்குக் குட்டிக்கு அணிவித்தனர் என்பதை **(சிறு.51–56)** அறியலாம்.

வீடுகட்குரிய அழகிய தூண்களையும் வலிமையான கதவுகளையும் தச்சர் செய்தனர். பலகையில் இருபுறமும் செங்கழுநீர்ப் பூக்களை ஏந்திய பிடிகளையும் இடையே திருமகள் உருவத்தையும் அழகுறச் செதுக்கியமைத்தனர் என்பதை,

***"ஒருங்குடன் வளைஇ ஓங்குநிலை வரைப்பில்***
***பருஇரும்பு பிணித்துச் செவ்வரக் குரீஇ***
***துணைமாண் கதவம் பொருத்தி இணைமாண்டு***
***நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப்***
***போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்***
***தாளொடு குயின்ற போரமை புணர்ப்பிற்***
***கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்து***
***ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை"*** **(நெடு.79–86)**

என நெடுநல்வாடை குறிப்பிடும்.

## 5.40.1. தேர்த்தச்சர்கள்

கண்ணைக் கவரும் வண்ணம் நேர்த்தியான தேர்கள் செய்யப்பட்டதை,

***"கண்ணோக் கொழிக்கும் பண்ணமை நெடுந்தேர்"***

**(அகம்.234:8)**

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

ஆர்க்காலோடு தச்சன் வடிக்கும் குடம் போல, போரில் பகைவர் எறிந்த வேல்கள் மார்பில் பாய்ந்தன என்பதை,

***"எடுத்தெறி ஞாட்பி னிமையான் றச்சன்***
***அடுத்தெறி குறட்டி னின்றுமாய்ந் தனனே"*** **(புறம்.290:4–5)**

எனப் புறப்பாடல் தெளிவுறுத்தும்.

அதியமானின் வலிமையைக் கூறவந்த ஔவையார்,

*"........ வைகல்*

*எண்டேர் செய்யுந் தச்சன்*

*திங்கள் வலித்த காலன் னோனே"* (புறம்.87:2–4)

எனப் பாராட்டியுள்ளார்.

தச்சர் ஒருவர் செய்த தேர் கூரிய உளியினாற் செதுக்கப்பட்ட குறட்டினை உடையது. அதன் சில்லுகளில் பொருத்தப்பட்ட ஆர்கள், கூதிர் காலத்திலே வானிலே தோன்றும் சந்திர கிரகணங்கள் போல விளங்கும். தேரின் பலகைகள் செவ்வரக்குப் பூசப்பெற்றுப் பலவகைச் சித்திரங்களையும் உடையனவாய் இருந்தன. இதனை,

*"கூருளி பொருத வடுவாழ் நோன்குறட்*

*டாரஞ் சூழ்ந்த வயில்வாய் நேமியொடு*

*சிதர்நனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத்*

*ததர்பிணி யவிழ்ந்த தோற்றம் போல*

*உள்ளரக் கெறிந்த வுருக்குறு போர்வைக்*

*கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி*

*ஊர்ந்துபெயர் பெற்ற எழினடைப் பாகரொடு"*(சிறு.252–258)

என வரும் சிறுபாணாற்றுப்படை மூலம் தொழில் நுட்பம் நிறைந்த தச்சர் ஒருவர் செய்த தேரொன்றினைப் பற்றி அறிய முடிகிறது.

### 5.40.2. வண்டி

தச்சர் சகடம் என்னும் வண்டி செய்வதில் வல்லவர் என்பதை,

*"கொழுஞ்சூட் டருந்திய திருந்துநிலை யாரத்து*

*முழவின் அன்ன முழுமர உருளி*

*எழூஉப் புணர்ந்தன்ன பரூஉக்கை நோன்பார்*

*மாரிக் குன்றம் மழைசுமந் தன்ன*

*ஆரை வேய்ந்த அறைவாய்ச் சகடம்"* (பெரும்.46–50)

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும்.

## 5.40.3. கட்டில்

பாண்டியனுடைய தேவியின் கட்டிலைத் தச்சர் தந்தத்தாற் செய்தனர். முரசம் போன்ற கால்களை உடையது. போரில் விழுப்புண் பட்டு இறந்த யானையின் கொம்பை எடுத்து, கனமும் செம்மையும் ஒப்ப இரு புறத்தையும் செதுக்கி, கூரிய சிற்றுளியாலே செய்யப்பட்ட பெரிய இலைத் தொழிலை இடையே அமைக்கப்பெற்றது. பல நிறம் கொண்ட மயிர்களை உள்ளே வைத்து மருவி, அதன் மேலே சிங்கம் முதலியன வேட்டையாடும் தொழில்களைப் பொறித்த தகடுகளை வைத்து, முல்லைப் பூக்களையும் பிற பூக்களையும் நிரையாகச் செருக்கி அமைத்து, தகடுகள் ஆணிகளால் தைக்கப்பட்டுள்ளன. கட்டிலின் கால்கள் உருண்டு திரண்ட குடத்தையும் குடத்திற்கும் கட்டிலுக்கும் நடுவாகிய இடம் மெல்லியவாய்த் திரண்டு உள்ளிப்பூடு போலச் செதுக்கிய உருவத்தையும் கொண்டன. இதனை,

*“தசநான் கெய்திய பணைமரு ணோன்றாள்*
*இகன்மீக் கூறு மேந்தொழில் வரிநுதல்*
*பொருதொழி நாகமொழி யெயி றருகெறிந்து*
*சீருஞ் செம்மையு மொப்ப வல்லோன்*
*கூருளிக் குயின்ற வீரிலை யிடையிடுபு*
*தூங்கியன் மகளிர் வீங்குமுலை கடுப்பப்*
*புடைதிரண் டிருந்த குடத்த விடை திரண்டு*
*உள்ளி நோன்முதல் பொருத்தி யடியமைத்துப்*
*பேரள வெய்திய பெரும்பெயர்ப் பாண்டில்*
*மடைமா ணுண்ணிழை பொலியத் தொடைமாண்டு*
*முத்துடைச் சாலேக நாற்றிக் குத்துறுத்துப்*
*புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்துத்*
*தகடுகண் புதையக் கொளீஇத் துகடீர்ந்து*
*ஊட்டுறு பன்மயிர் விரைஇ வயமான்*

*வேட்டம் பொறித்து வியன்கட் கானத்து*

*முல்லைப் பல்போ துறழப் பூநிரைத்து*

*மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்பட"* **(நெடு.115–131)**

என்னும் அடிகள் உணர்த்தும். தச்சர்கள் அரச யானையின் கோட்டினை அறுத்து அதனால் பலிக்கட்டில் செய்ததை,

*"அரசுவா வழைப்பக் கோடறுத் தியற்றிய*

*அணங்குடை மரபிற் கட்டின்"* **(பதிற்.79:13–14)**

எனப் பதிற்றுப்பத்து விளக்கும்.

## 5.40.4. சிறுதேர்

தச்சர்கள் சிறுவர்கள் விளையாடுவதற்குச் சிறிய குதிரைகளையுடைய தேரினைச் செய்வர். இதனை,

*"தச்சன் செய்த சிறுமா வையம்"* **(குறுந்.61:1)**

எனக் குறுந்தொகை உணர்த்தும்.

தச்சச் சிறுவர் பிறர் பாராட்டும் வகையில் சிறுதேரைச் செய்கின்றனர் என்பதை,

*"தச்சச் சிறாஅர் நச்சுப் புனைந்த*

*ஊரா நற்றே ருருட்டிய புதல்வர்"* **(பெரும்.248–249)**

எனப் பெரும்பாணாற்றுப்படை கூறும்.

சிறுவர் குதிரை பூட்டாமல் கையால் உருட்டும் மூன்று சக்கரங்களை உடைய சிறிய தேர் பற்றி,

*"பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்*

*முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்"* **(பட்.24–25)**

எனப் பட்டினப்பாலை விளக்கும்.

### 5.40.5. புலவர் மரபு

தச்சருள் ஒருவர் புலவராகவும் இருந்துள்ளார் என்பதைக் கச்சிப்பேட்டு இளந்தச்சனார் (நற்.266) என்னும் புலவர் மூலம் அறியலாம்.

## 5.41. மருத்துவர்

மருத்துவர் நோயையடைந்தவர் விரும்பியதைக் கொடாமல் ஆய்ந்து நோய்க்குத் தக்கவாறு மருந்து தரும் அறமுடையவர். இதனை,

*"அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாது*
*மருந்தாய்ந்து கொடுத்த அறவோன்"* **(நற்.136:2–3)**

என்பார் நற்றங்கொற்றனார். உயிரைப் போகாமல் மீட்பவர் மருத்துவர் என்பதை,

*"இன்னுயிர் போத்தரு மருத்துவர்"* **(கலித்.137:25)**

எனக் கலித்தொகை விளக்கும்.

நோய்களில் எல்லாம் கொடிய நோயாக விளங்குவது பசியே ஆகும். பசிப்பிணி மருத்துவன் என்ற பட்டத்தையே ஒரு வள்ளல் பெற்றுள்ளான் என்பதை,

*"பசிப்பிணி மருத்துவ னில்லம்*
*அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே"* **(புறம்.173:11–12)**

எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பாணர் கூற்றில் வைத்துச் சிறுகுடி கிழான் பண்ணனைப் பாராட்டியுள்ளார்.

*"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்*
*சேரா தியல்வது நாடு"*[30]

என வள்ளுவர் கூறும் கருத்தும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

பதிற்றுப்பத்தில் சான்றோர் சேர நாட்டின் வளத்தைக் குறிப்பிடும் பொழுது நோயொடு பசியும் ஒழிந்து விளங்கும் நாடு எனப் பாராட்டுவதை,

*"நோயொடு பசியிகந் தொரீஇப்*
*பூத்தன்று பெருமநீ காத்த நாடே"* **(பதிற்.13:27)**

எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடும்.

### 5.41.1. தையலிடுதல்

புண்பட்ட வீரனின் புண்களை ஊசி கொண்டு வைத்து மருந்திட்டுக் கட்டும் மருத்துவர் இருந்தனர் என்பதைக் கீழ்க்கண்ட அடிகளின் மூலம் அறியலாம்.

*"மீன்றேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச்*
*சிரல்பெயர்ந் தன்ன நெடுவள் ளூசி"* (பதிற்.42:2–3)

### 5.41.2. புலவர் மரபு

மருத்துவருள் ஒருவர் புலவராகவும் விளங்கியிருத்தலை உறையூர் மருத்துவன் தாமோதனார் (அகம்.133, 257, புறம்.60) என்னும் புலவர் மூலம் அறியலாம்.

## 5.42. நெசவாளர்

நெசவுத்தொழில் தமிழ்நாட்டில் நடைபெற்ற முக்கியமான தொழில் ஆகும். நெசவுத் தொழிலைப் பற்றி,

> **"இது வீட்டுத் தொழில்களில் முக்கியமானது. பண்டைத் தொழில்களுள் ஒன்று. விவசாயத்துக்கு அடுத்தது. மக்கள் நாகரிகம் அடையத் தொடங்கியதும் கையாண்ட முதல் கைத்தொழில்."[31]**

எனக் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகின்றது.

பருத்தி நூற்கும் பெண்டு பருத்திக் கொட்டையை நீக்கித் தூய்மை செய்யும் பொழுது அதில் உள்ள புறத்தோல், கொட்டை ஆகியவற்றை நீக்குவதற்கு நன்றாகப் புடைப்பர். இதனை,

*"சிறையுஞ் செற்றையும் புடையுந ளெழுந்த*
*பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து"* (புறம்.326:4–5)

என்கிறது புறநானூறு.

கணவனை இழந்த மகளிர் பருத்திப் பஞ்சினைச் செப்பஞ் செய்து நுண்ணிய நூலாக நூற்பதில் கைத்திறம் பெற்றிருந்தனர் என்பதை,

*“ஆளில் பெண்டிர் தாளில் செய்த*
*நுணங்ககுநுண் பனுவல் போல”* (நற்.353:1–2)

என்பார் கபிலர்.

மரப்பட்டையில் உள்ள நாரினை எடுத்துப் பின்னி குறவர் ஆடையாகப் பயன்படுத்தினர் என்பதை,

*“மரனாருடுக்கை மலையுறை குறவர்”* (நற். 64:4)

என நற்றிணை உணர்த்தும்.

பொன் இழைகளாலும் ஆடைகள் நெய்யப்பட்டுள்ளன என்பதை,

*“பொன்புனை உடுக்கையோன்”* (பரி.14:18)

என்னும் அடியின் மூலம் அறியலாம்.

## 5.42.1. பருத்தி பஞ்செடுத்தல்

பருத்திப் பஞ்சைக் கொட்டையிலிருந்து பிரித்தெடுக்க வில்லினைப் பயன்படுத்துவர் என்பதை,

*“வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழும்”* (அகம்.133:6)

*“வில்லெறி பஞ்சி போல மல்குதிரை*
*வளிபொரு வயங்குபிசிர் பொங்கும்”* (நற்.299:7–8)

என்னும் அடிகள் உணர்த்தும்.

வன்புலத்துக் காடுகளில் இல்லங்களை அடுத்து வேலி போல் பருத்தி பயிரிட்டனர். இதனை,

*“பருத்தி வேலிச் சீறூர்”* (புறம்.299:1)

*“பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும்*
*புன்புலம் தழீஇய அங்குடிச் சீறூர்”* (புறம்.324:7–8)

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

கொட்டையையும் தூசியையும் நீக்கிய பஞ்சினைப் பருத்திப் பெண்டிர் நூற்பர் என்பதை,

*"பருத்திப் பெண்டின் பனுவ லன்ன"* (புறம்.125:1)

என்கிறார் வண்ணக்கன் பெருஞ்சாத்தனார்.

### 5.42.2. நுட்பவேலை

ஆடை இழைகளின் வரிசையைக் காண்பதற்கு இயலாத வகையில் நுண்மையான நூலைக் கொண்டு நுட்பமாக நெய்யப்பட்டிருந்தது. இதனை,

*"பாம்புரி யன்ன வடிவினை காம்பின்*
*கழைபடு சொலியி னிழையணி வாரா"* (புறம்.383:10–11)

*"நோக்கு இழை கல்லா நுண்மைய பூக்கனிந்து*
*அரவுரி யன்ன அறுவை"* (பொரு.82–83)

என்னும் அடிகள் தெளிவுறுத்தும்.

பால் ஆவியை ஒத்த விளங்குகின்ற நூலால் செய்த கலிங்கத்தை,

*"ஆவியன்ன அவிர்நூற் கலிங்கம்"* (பெரும்.469)

எனப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.

பட்டு நூலால் அழகாகச் செய்யப்பெற்ற ஆடையை,

*"நூலாக் கலிங்கம்"* (பதிற்.12:21)

எனப் பதிற்றுப்பத்து கூறும்.

இழை போன இடமறியாத நுண்ணிய நூலாற் செய்த கலிங்கத்தை,

*"இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்*
*எள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ"* (மலை.561–562)

என மலைபடுகடாம் மூலம் அறியலாம்.

### 5.42.3. அழகூட்டுதல்

ஆடைகளுக்கு அழகூட்டும் வகையில் கரைகள் அமைத்து அதில் அழகிய பூ வேலைப்பாடுகளும் செய்தனர் என்பதை,

*"நீலக்கஞ்சைப் பூவார் ஆடை"* (புறம்.274:1)

*". . . . . . . . . . . . . நேர்கரை*

***நுண்ணூல் கலிங்கம் உடீஇ***

***கொட்டைக் கரைய பட்டுடை"*** **(புறம்.392:14–15)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம். பட்டினால் நெசவு செய்யக்கூடியவர்கள் பட்டாடைகளின் ஓரங்களில் முடிச்சுகள் செய்து அழகு செய்தனர் என்பதை,

***"துன்னற் சிதாஅர் நீக்கித்தூய***

***கொட்டைக் கரைய பட்டுடை நல்கி"*** **(பொரு.154–155)**

எனப் பொருநராற்றுப்படை குறிப்பிடும்.

பூவேலை செய்யப்பட்ட கலிங்கத்தைப் பற்றி,

***"புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு"*** **(நற்.90:4)**

என நற்றிணை கூறும்.

பகன்றையின் புதுப்பூப் போன்ற கலிங்கத்தை,

***"போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன***

***அகன்றுமடி கலிங்க முடீஇ"*** **(புறம்.393:17–18)**

என்கிறது புறநானூறு.

## 5.43. புலையர்

புலையர் இடுகாட்டில் இறுதிச் சடங்கு நிகழ்த்துபவர். ஈமத்தில் எரிவாய் இடுவதன் முன், பிணத்தைப் பாடையின் நீக்கித் தருப்பைப்புல் மேற்கிடத்தி, எதிரே பரப்பப்பட்ட தருப்பையில் சோற்றை வைத்துப் புலையன் படைப்பான். இதனை,

***"வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளொடு***

***புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி***

***புலைய னேவ . . . . "*** **(புறம்.360:17–19)**

எனப் புறப்பாடல் விளக்கும்.

சுடுகாட்டில் ஈமத்தில் இடுமுன், புலையன் உப்பில்லாச் சோறட்டு நிலத்தில் வைத்துப் படைத்தலும் அதனை அவன் கையில் ஏந்திப் படைக்குங்கால் பின்புறம் பாராமல் படைப்பர் என்பதை,

*“உப்பிலாஅ வவிப்புழுக்கல்*

*கைக்கொண்டு பிறக்கு நோக்கா*

*திழிபிறப்பினோ னீயப் பெற்று”* **(புறம்.363:12–14)**

என்னும் அடிகளின் மூலம் அறியலாம்.

## 5.43.1. கட்டில் பின்னுதல்

வாரைச் செலுத்தும் ஊசியைக் கொண்டு புலையர் கட்டில் பின்னுவர். இதனை,

*“கட்டி னிணக்கு மிழிசினன் கையது*

*போழ்தூண் டூசியின் விரைந்தன்று”* **(புறம்.82:3–4)**

என்பார் சாத்தந்தையார்.

## 5.43.2. துடியறைதல்

துடி என்னும் தோற்கருவியை இசைப்பவர் துடியர் எனப்பட்டனர். துடியர் புலையர் எனவும் அழைக்கப்பட்டனர். இக்கருத்தை,

**“துடி என்பது தோற்கருவி. இதனை இசைப்போர் துடியரெனப்பட்டனர். இத்துடியர் புலையரெனவும் கூறப்பெறுவோர்.”[32]**

என்னும் கு.வெ. பாலசுப்பிரமணியன் அவர்களின் கூற்றின் மூலம் அறியலாம்.

**“பாணர், பறையர், துடியர், கடம்பர் என்பார் ஒருசேரப் புலையரென்று வழங்கப்பட்டனர். ‘பாணன், பறையன், துடியன், கடம்பன் இந்நான்கல்லது குடியும் இல்லை’ (புறம்.335) என்று இவர்களைப் போர்ச் செயலோடு தொடர்புற்ற குடிகளாகக் கருதத்தக்கோராவர். பறையை முழக்கியவன் பறையன் என்றும், துடி கொட்டுபவன் துடியன் என்றும் அறியப்பட்டனர் எனலாம். கடம்பன் என்பதன் பொருள் விளங்கவில்லை. பாணர் என்பார் யாழ் மீட்டி இசைப்பாடும் இயல்பினராவர்.”[33]**

என்பார் மா. இராசமாணிக்கனார்.

**"பாணன், பறையன், துடியன், கடம்பன் என்போர் ஒரே இனத்தவர் என்பர். பறை என்னும் கொட்டுக்கருவியைக் கொண்டோர் பறையர். துடியென்னும் தோற்கருவியைக் கொண்டோர் துடியர். இவர்கள் நல்லன தீயனவுமாகிய நிகழ்ச்சிகளில் பறையும் துடியும் முழக்கினர். மன்னரின் செய்தியை ஊருக்கு அறிவித்தனர். இவர்கள் சமூகத்தில் மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்தனர். இடுக்காட்டில் நிணக்கும் இழிசினன் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளான்."[34]**

என்பார் சிவ. சண்முகசுந்தரம்.

இழிந்த பிறப்பினையுடைய புலையன் தன் வலி முழுதும் செலுத்தி, துடி அடிப்பர். அவ்வாறு பறை அடிக்கும் போது கையில் கோலுடன் இருப்பர். இதனை,

*"இழிபிறப்பாளர் கடுங்கை சிவப்ப*
*வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி"* **(புறம்.170:5–6)**

*"மலையமா ஊர்ந்து போகிப் புலையன்*
*பெருந்துடி கறங்க. . . . . . . ."* **(நற்.77:1–2)**

*"துடியெறியும் புலைய*
*எறிகோல் கொள்ளும் இழிசின"* **(புறம்.287:1–2)**

என்னும் அடிகள் உணர்த்தும்.

### 5.43.3. போர் மரபு

புலையர் போர்க்குரிய மறவர்க்குப் போர்ப் பூவைத் தரும் போது தண்ணுமை கொட்டி அறிவிப்பர். இதனை,

*". . . . . . . . . . . . . . பாசறைப்*
*பூக்கோ ளின்றென் றறையும்*
*மடிவாய்த் தண்ணுமை யிழிசினன் குரலே"* **(புறம்.289:8–10)**

எனப் புறப்பாடல் தெளிவுறுத்தும்.

## 5.44. புலைத்தி

புலைத்தியை வண்ணாத்தி என்றும் அழைப்பர். புலைத்தி களர் நிலர்த்துண்டாகிய கூவலைத் தோண்டி நாள்தோறும் துணிகளைத் துவைப்பாள். இதனை,

*“களர்ப்படு கூவற் றோண்டி நாளும்*
*புலைத்தி கழீஇய தூவெள் எறுவை”* **(புறம்.311:1–2)**

என்பார் ஔவையார்.

ஆடையைச் சோற்றின் கஞ்சியிட்டுப் புலர்த்திய புலைத்தி எப்பொழுதும் தன் கையொழியாதவள், வறுமை இல்லாதவள். இதனை அஞ்சில் அஞ்சியார்,

*“உடையோர் பான்மையின் பெருங்கை தூவா*
*வறனில் புலத்தி யெல்லித் தோய்த்த*
*புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு”* **(நற்.90:3–4)**

என்பார். புலைத்தி ஆடையைக் கஞ்சியிலே தோய்த்து எடுப்பாள் என்பதை,

*“நலத்தகைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்து”*

**(குறுந்.330:1)**

எனக் குறுந்தொகை மூலம் அறியலாம். ஆடைகளிலே ஊட்டப்பெற்ற கஞ்சிப் பசையினை நீர்த்துறையின்கண் அலசுவாள். இதனை,

*“பசைகொல் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி*
*துறைவிட் டன்ன. . . . . . ”* **(அகம்.34:11–12)**

என்பார் மருதன் இளநாகனார். ஊரிலுள்ளோர் ஆடைகளைத் துறைக்கு எடுத்துச் சென்று புலைத்தி வெளுப்பாள் என்பதை,

*“. . . . . . . . ஊரவர்*
*ஆடைகொண் டொலிக்குநின் புலைத்தி”* **(கலித்.72:13–14)**

எனக் கலித்தொகை குறிப்பிடும்.

புலைத்தி ஆடை வெளுக்க உவர் மண்ணைச் சுமத்தலால் தேய்ந்து போன ஊன் பொருந்திய தலையையும், கூர்மையான நகத்தினையும் உடையவள் என்பதை,

*"பூக்கண் பறைந்த புன்தலைச் சிறாஅரொடு*
*அவ்வரி கொன்ற கறைசேர் வள்உகிர்ப்*
*பசைவிரல் புலைத்தி நெடிதுபிசைந்து ஊட்டிய*
*பூந்துலகில் இமைக்கும் பொலன்காழ் அல்குல்"*

**(அகம்.387:4–7)**

என அகப்பாடல் உணர்த்தும். புலைத்தி பனங்குருத்தால் புட்டில் (பெட்டி) முடைந்து விலைக்கு விற்பர் என்பதை,

*". . . . . . புலைத்தி விலையாகச் செய்ததோர்*
*போழிற் புனைந்த வரிப்புட்டில் . . . . "* **(கலித்.117:7–8)**

எனக் கலித்தொகை குறிப்பிடும்.

துணி வெளுக்கும் வண்ணாரைக் காழியர் என்பர். அவர்கள் துணி வெளுக்க உவர் மண்ணைப் பயன்படுத்துவர். இதனை,

*". . . காழியர்*
*கவ்வைப் பரப்பின் வெவ் உவர்ப்பு ஒழிய*
*களரி பரந்த கல் நெடு மருங்கின்"* **(அகம்.89:7–9)**

என்பார் மதுரைக் காஞ்சிப்புலவர்.

தலைவனுக்காகப் புலைத்தி பரத்தையரிடம் தூது செல்லுதலை,

*"நாடிநின் தூதாடித் துறைச் செல்லாள் ஊரவர்*
*ஆடைகொண் டொலிக்குநின் புலைத்தி"* **(கலித்.72:13–14)**

என்கிறது கலித்தொகை.

புலைத்தி தெய்வம் அருள் கொண்டு ஆடுதலும் உண்டு என்பதை,

*"முருகுமெய்ப் பட்ட புலைத்தி"* **(புறம்.259:5)**

என்னும் அடிகள் மூலம் அறியலாம்.

## 5.45. சாணைக்கல் செய்வோன்

சாணைக்கல் செய்வோரும் சங்க காலத்தில் காணப்பெற்றனர். அவர்களைக் காரோடன் எனச் சங்க இலக்கியம் சுட்டுகிறது. இதனை,

*"சிறு காரோடன் பயினொடுசேர்த்திய*
*கற்போர் பிரியலம் . . . . . . "* **(அகம்.1:5–6)**
*"சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய*
*கற்போல் . . . . "* **(அகம்.356:9–10)**

என்னும் அடிகள் உணர்த்தும். மேலும், காரோடன் பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்திலேயே அகநானூற்றில் இவ்விரு பாடல்களில் மட்டுமே பயின்று வந்துள்ளமையை அறிய முடிகிறது.

## 5.46. தொகுப்புரை

கூத்தர், பாணர், பொருநர், விறலியர் முதலிய கலைஞர்களைப் பற்றித் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். கூத்து நிகழ்த்துவோர் கூத்தர் எனப்படுவர். கூத்தரைக் கண்ணுளர், மள்ளர், வயிரிய மாக்கள், கோடியர் எனச் சங்க இலக்கியம் சுட்டுகிறது. கூத்தர் பாடுவோர், இசைக்கருவிகளை இசைப்போர், கழைக்கூத்தர் என மூவகையினராகக் காணப்பெறுவர்.

கூத்தர்கள் ஓரிடத்தும் நிலைத்துத் தங்காது ஊர் ஊராகச் சென்று பலவகை இசைக்கருவிகளை இசைத்து ஆடிப்பாடுவர். அவ்வாறு நெடுந்தொலைவு செல்லும் பொழுது ஓரிடத்தில் இரவு தங்கிச் செல்வர். அப்பொழுது எவ்விடத்தில் தங்குகின்றனரோ அவ்விடத்திற்கேற்பப் பண் பாடுவர்.

கூத்தர்கள் நெடுந்தொலைவு செல்லும்பொழுது அவ்வழியில் அவர்களுக்குத் தீங்கு நேராமல் இருக்கவும், கூத்தாடத் தொடங்குவதற்கு முன்னும் தெய்வத்தை வணங்குவர்.

கூத்தர்களுள் கழைக்கூத்தினர் என்ற ஒருவகையினர் இருந்தனர். அவர்கள் கழையில் கட்டிய கயிற்றின் மேல் நின்று ஆடுவர். கூத்தர்களுள் பலர் புலவராகவும் விளங்கியுள்ளனர்.

பண் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்த பாணர் இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர், மீன்பிடித் தொழில் செய்வோர், குறுநில அரசனாக இருத்தல் என ஐவகையினராக இருந்தனர்.

யாழ்ப்பாணர் பயன்படுத்தும் யாழைக் கொண்டு சீறியாழ்ப்பாணர், பேரியாழ்ப்பாணர் என இருவகைப்படுவர். காலையில் மருதப்பண்ணும் மாலையில் செவ்வழிப்பண்ணும் இசைத்தல் யாழ்ப்பாணர் மரபாகும்.

பாணர்கள் பிடித்து வந்த மீனைப் பாண்மகள் பண்டமாற்று நெறியில் விற்று வருவாள். பாணர், பாடினியர் காலத்தில் இலக்கியம் வளர்ச்சி பெற்றது எனலாம். பாணரின் புறத்தோற்றம் மூலம் அவர்களின் வறுமை நிலையை அறிய முடிகிறது.

பாணர்கள் அகவாழ்வில் தூது செல்பவராகவும், ஊடலைத் தீர்க்கும் வாயில்களாகவும், தலைவனைப் பரத்தையரிடம் கூட்டுவிப்பவராகவும் உள்ளனர். புறவாழ்வில் அரசனை நாடிச் சென்று பரிசில் பெறுவோராகவும் உள்ளனர். அகநானூறு பாடல் மூலம் பாணன் குறுநில அரசனாகவும் இருந்துள்ளான் என்பதை அறிய முடிகிறது.

பாணர்கள் அரசன் நாண்மகிழிருக்கையில் சிறப்பாகக் குறிப்பிடப்பெறுவர். கூத்தர், பொருநர், விறலியர் அவ்வச்சிறப்பைப் பெறுவதில்லை. பாணர்கள் இசையைத் தொடங்கும் போதும், வழியிடைத் தீங்கு நேராமல் இருக்கவும் தெய்வத்தை வணங்கியுள்ளனர்.

ஒருவரைப்போல் வேடமிட்டுப் பாடி ஆடுபவர் பொருநர் ஆவர். இவர்கள் தடாரி, கிணை ஆகிய தோற்கருவிகளை இசைத்துப்பாடுவர். இவர்கள் அரசனை விடியற்காலையில் துயிலெடை பாடி பரிசில் வேண்டி நிற்பர்.

அரசனே ஏழடி பின் சென்று பொருநரை வழி அனுப்புவதன் மூலம் பொருநரின் சிறப்பை அறியலாம். அத்தகைய மரபு இருந்ததையும் உணர முடிகிறது.

விறல்பட பாடி ஆடுபவள் விறலி ஆவாள். இவள் தனித்து நின்று நிகழ்ச்சி நடத்துவதோடு பாணர் முதலான கலைஞர் குழுவிலும் சென்று ஆடுவர். இவர்கள் தெரு, அரண்மனை இரண்டு இடத்திலும் கூத்து நிகழ்த்தியுள்ளனர்.

விறலியர் அகவாழ்வில் தூது செல்பவராகவும், தலைவனைப் பரத்தையரிடம் கூட்டுவிப்பவராகவும் உள்ளனர். விறலியர் பாட, ஆடத் தொடங்குமுன் கடவுளை வாழ்த்துதலை மரபாகக் கொண்டிருந்தனர்.

கொல்லர் இரும்புத் தொழில் செய்வோர், பொன் தொழில் செய்வோர் என இருவகையினர் ஆவர். இரும்பு செய் கொல்லரைக் கருங்கைக் கொல்லன் எனவும் அழைப்பர். பொன்செய் கொல்லரைக் கம்மியர் எனவும் அழைப்பர்.

கொல்லர்கள் பயன்படுத்தும் உலைக்கல், துருத்தி, சம்மட்டி, குறடு போன்ற கருவிகளை உவமைக்காகச் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தியுள்ளனர்.

கொல்லர்கள் போர்க்கருவிகளையும் செய்து கொடுத்துள்ளனர். மீனவர்க்கு எறியுளி என்னும் கருவியைச் செய்து தந்துள்ளனர். கொல்லர் ஏழு ஊர்களுக்குப் பொதுவாக ஓர் ஊரில் உலைக்களம் அமைத்திருந்தனர். கொல்லர் சமுதாயத்தில் புலவர் பலர் தோன்றியிருக்கின்றனர்.

பொன், வெள்ளி, செம்பு முதலிய வேலைகளைச் செய்வோர் பொற்கொல்லர் ஆவர். இவர்கள் பொன்னின் தரங்காண்பதற்குக் கட்டளைக்கல்லைப் பயன் படுத்தியுள்ளனர். பொற்கொல்லரில் தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் என்பவர் புலவராக இருந்துள்ளார்.

மட்கலன்கள் செய்வோர் குயவர் ஆவர். இவர்கள் இறந்தவர்களுக்கு ஈமத்தாழினையும் செய்துள்ளனர். குயவர்கள் திருவிழாவினை ஊரவர்க்கு அறிவிப்பவர்களாகவும் இருந்துள்ளனர்.

தச்சர்கள் தேர், வண்டி, கட்டில், சிறுவர்கள் விளையாடும் சிறுதேர் முதலியவற்றைச் செய்துள்ளனர். தச்சருள் கச்சிப்பேட்டு இளந்தச்சனார் என்பவர் புலவராக இருந்துள்ளார்.

மருத்துவர்கள் நோய்க்குத் தக்கவாறு மருந்து அளிக்கும் அறவோராக விளங்கியுள்ளனர். மருத்துவருள் உறையூர் மருத்துவன் தாமோதரனார் புலவராக விளங்கியுள்ளார்.

ஆடையினுடைய இழைகளின் வரிசையைக் காண்பதற்கு இயலாத வகையில் நுண்மையான நூலைக் கொண்டு நுட்பமாக நெய்யும் நெசவாளர்கள் இருந்துள்ளனர்.

இடுகாட்டில் இறுதிச்சடங்கு நிகழ்த்துபவர் புலையர் என அழைக்கப்படுவர். அவர்கள் கட்டில் பின்னுதல், துடியறைதல் தொழிலிலும் ஈடுபட்டுள்ளனர்.

ஆடைகளை வெளுக்கும் வண்ணாத்தியைப் புலைத்தி என்றும் அழைப்பர். புலைத்தி ஆடை வெளுப்பதோடு பனங்குருத்தால் புட்டில் (பெட்டி) முடைந்தும் விற்றுள்ளனர். தலைவனுக்காகப் புலைத்தி பரத்தையரிடம் தூது செல்பவளாகவும் உள்ளாள்.

சாணைக்கல் செய்வோரைக் காரோடன் எனச் சங்க இலக்கியம் சுட்டுகிறது. காரோடன் பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்தில் அகநானூற்றில் மட்டும் காணப்படுகிறது என்பதை அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. தொல். புறத். நூ. எண்.30.
2. மேலது.
3. தொல். செய். நூ. எண்.182.
4. தொல். கற்பு. நூ. எண்.9:25–26.
5. தொல். கற்பு. நூ. எண்.27.
6. தொல். கற்பு. நூ. எண்.28.
7. தொல். கற்பு. நூ. எண்.52.
8. உ.வே. சாமிநாதையர், குறுந்தொகை மூலமும் உரையும், ப.22.
9. மு. சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப.123.
10. வெ. வரதராசன், தமிழ்ப் பாணர் வாழ்வும் வரலாறும், ப.7.
11. வி.சி. சசிவல்லி, பண்டைத்தமிழர் தொழில்கள், ப.271.
12. நச்சினார்க்கினியர், தொல். பொருள். அகத். – புறத். உரை, ப.282.
13. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.42.
14. வெ. வரதராசன், தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும், ப.62.
15. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.127.
16. வெ. வரதராசன், மேலது, ப.1.
17. கா. சுப்பிரமணியன், கட்டுரை – 'ஆற்றுப்படை ஒரு சமுதாய வரலாற்று விளக்கம்', ஆராய்ச்சி, ப.133.
18. அம்மன் கிளி முருகதாஸ், சங்க இலக்கியத்தில் திணைக் கோட்பாடும் அதன் சமூக இலக்கிய முக்கியத்துவமும், ப.177.
19. வி.சி. சசிவல்லி, பண்டைத்தமிழர் தொழில்கள், ப.278.
20. நச்சினார்க்கினியர், தொல். புறத். நூ.எண்.36.
21. பொ.வே. சோமசுந்தரனார் (விளக்கவுரை), பொருநராற்றுப்படை, ப.52.
22. வி.சி. சசிவல்லி, மேலது, ப.310.

23. ந.சி. கந்தையா பிள்ளை, செந்தமிழ் அகராதி, ப.657.

24. சரளா ராஜகோபாலன், கட்டுரை – 'சங்க இலக்கியத்தில் விறலியர்' இ.ப.த.ம. ஆய்வுக்கோவை, தொகுதி–1, ப.429.

25. கா. சுப்பிரமணியன், மேலது, ப.134.

26. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.345.

27. ஏ. என். பெருமாள், தமிழர் இசை, பக்.38–39.

28. வே. சா. அருள்ராஜ், பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில், ப.47.

29. வி.சி. சசிவல்லி, பண்டைத்தமிழர் தொழில்கள், ப.82.

30. திருக்குறள்.734.

31. கலைக்களஞ்சியம், தொகுதி–4, ப.215.

32. கு.வெ. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் கலையும் கலைக் கோட்பாடும், ப.53.

33. மா. இராசமாணிக்கனார், தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.49.

34. சிவ. சண்முகசுந்தரம், சங்ககாலச் சமயமும் சமுதாயமும், ப.91.

## முடிவுரை

- ☆ வேதகாலத்தில் தோன்றிய நான்கு வருணப் பாகுபாடுகள் மரபு வழியாகத் தொடர்ந்து பிறப்பு அடிப்படையில் வளர்ந்து பின்பு சாதிகளாக மாறின. இவை ஆரியர்களின் தொன்மத்தின்வழியே கட்டமைக்கப்பட்டவையாகும்.
- ☆ தொல்காப்பியம் குறிப்பிடும் நால்வகைப் பாகுபாட்டிற்கும் மனுதர்மம் குறிப்பிடும் நால்வகைப் பாகுபாட்டிற்கும் வேறுபாடு காண முடிகிறது.
- ☆ மொழி, கல்வி, ஆன்மிகம் எனப் பல்துறைகளடிப்படையில் பிராமணர்கள் முதன்மை நிலையிலும், நாட்டின் காவல், ஆட்சி முறை போன்ற அறிவு வலிமையோடு உடல் வலிமை பெற்ற சத்திரியர்கள் அடுத்த நிலையிலும் நாட்டின் பொருளாதாரத்தை நிலை நிறுத்தக்கூடிய வேளாண்மை, வணிகம் ஆகிய தொழில்களைச் செய்த வைசியர் அடுத்த நிலையிலும் அமைந்தனர். இம்மூவகையினரின் தொழில்களுக்கு உதவும் வகையில் ஏவலராகவும் வினைவலராகவும் இருந்த சூத்திரர் நான்காம் நிலையில் அமைந்தனர்.
- ☆ சாதிகளாக இறுகிய குலமரபுகள், ஒரு மரபினரோடு மற்றொரு மரபினர் திருமண உறவு, உணவு படைத்தல், பரிமாறல், வழிபாடு போன்றவற்றில் உறவில்லாத நிலையில் தடை ஏற்படுத்தப் பெற்றது.
- ☆ அந்தணர் வேதத்தோடு ஒட்டிய நிலையினர். அந்தணர்க்குரிய அடையாளங்களும் அவர்களுக்கான இருபிறப்பு முறையும் அவர்களது தொழில்களாக ஓதல், வேட்டல், ஓதுவித்தல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் போன்றவை தொல்காப்பிய உரை குறிப்பிடுவது போலவே சங்கப் பாடலடிகளும் குறிப்பிடுகின்றன.
- ☆ அரசர்களே பணிந்து ஒழுகும் அளவிற்கு அந்தணர்கள் சமுதாயத்தில் ஒழுக்கத்தில் சிறந்தவர்களாக வாழ்ந்து வந்தனர். ஒழுக்கத்தில்

வழுவிய அந்தணர்கள் சிலரை 'வேளாப்பார்ப்பான்' என்று அழைத்தனர் என்பதை அறிய முடிகிறது.

- ☆ பார்ப்பனர் தலைவனுக்குத் தோழனாய் தூது சென்றதோடு, இருபெரு வேந்தர்களுக்கிடையே நிகழும் போரை நிறுத்தவும் தூது சென்றுள்ளனர்.
- ☆ பண்டைத் தமிழகத்தில் அரச மரபில் பிறந்தோர்க்கு அரசாட்சி உரிமை என்ற கொள்கை இல்லை. ஆனால், சங்க இலக்கியத்தில் அரச மரபில் பிறந்தோர்க்கே அரசு உரிமை என்ற கொள்கை வலுப்பெற்றது. முல்லை நிலத் தலைவன் முதல் அரசனாகக் கருதப்பட்டிருக்கிறான்.
- ☆ அரசர்க்குரிய அடையாளங்களாக வெண்கொற்றக்குடை, செங்கோல், முரசு ஆகியவை விளங்குகின்றன. மக்களைப் பாதுகாத்தல், நடுநிலைமையோடு கூடிய முறைமை, வரி வசூலித்தல், வாய்மை காத்தல், கொடுங்கோன்மைக்கு அஞ்சல், பரிசிலரைப் போற்றுதல், சமுதாய மேம்பாட்டுக் கடமைகள், போர்க்கடமைகள் ஆகியவை அரசனது கடமைகளாகத் திகழ்ந்திருந்தன என்பதை அறிய முடிகிறது.
- ☆ ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல் முதலிய அறுவகைத்தொழில்களை வணிகர்க்குரியனவாகக் குறிப்பிட்டாலும் வாணிகம் செய்யும் தொழிலே முந்தி நிற்பதைக் காணலாம்.
- ☆ சங்க காலத்தில் ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்கள் அன்றாடத் தேவையான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலான பொருள்களைக் காசு கொடுத்து வாங்காமல் பண்டமாற்று செய்து கொண்டனர். இதுவே பின்னாளில் வணிகத்திற்குத் தோற்றுவாயிற்று.
- ☆ நிலவழி வணிகமும், நீர்வழி வணிகமும் நிகழ்ந்துள்ளன. தமிழ் வணிகர் அயல்நாடுகளுக்குச் சென்று வணிகம் செய்தது போலவே அயல்நாட்டு வணிகரும் தமிழகத்திற்கு வந்து வணிகம் செய்ததை அராபிய வணிகர், யவன வணிகர் மூலம் அறிய முடிகிறது.

- ☆ நாளங்காடி, அல்லங்காடி என இருவகை அங்காடிகளும் அங்காடிகளில் விற்பனைப் பொருள்களை அடையாளப் படுத்துவதற்காக அடையாளக்கொடி நாட்டப் பெற்றிருந்தமையும் அறிய முடிகிறது.
- ☆ பூ விற்போர், பொன் வணிகர், கூலம் பகர்நர், கூவியர், பாசவர், கலிங்கம் பகர்நர், வலைஞர் போன்ற சிறு வணிகர்களும் சங்க காலத்தில் இருந்துள்ளமையை அறியமுடிகிறது.
- ☆ நீரைத் தேக்கி தானியங்களை விளைவித்து உழவுத் தொழில் செய்தோர் வேளாளர் ஆவர். பாண்டியர் கல்வெட்டுகளில் வேளாளர் 'பூமி புத்திரர்கள்' என்றும் குறிக்கப்பெற்றுள்ளனர். வேளாளரில் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என இருவகையினர் வாழ்ந்து வந்துள்ளனர். உழுதுண்ணும் வேளாளர் உழவுத்தொழில் ஒன்றையே செய்தனர். உழுவித்துண்ணும் வேளாளர் உழவுத்தொழிலோடு அரசரால் படை, கண்ணி முதலிய சிறப்புகள் பெற்று படைத்தலைவராகவும், சிற்றரசர்களாகவும் மூவேந்தர்க்கும் மகட்கொடை நேரும் தகுதியும் பெற்றிருந்தனர் என்பதை அறிய முடிகிறது.
- ☆ ஐவகை நிலங்களில் வாழும் மக்கள் அவர்கள் வாழும் இடத்திற்கேற்ப அவர்களின் தொழிலும் வாழ்க்கையும் மாறுபட்டிருக்கின்றன என்பதை அறிய முடிகிறது. தேனெடுத்தல், கிழங்கு அகழ்தல், தினை பயிரிடுதல், தினைப்புனம் காத்தல், தினை அறுத்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களில் குறவர்கள் ஈடுபட்டிருந்தனர்.
- ☆ ஆயர்கள் குடியிருந்த ஊர் பாடி என்றும், சிறுபான்மை பாக்கம் என்றும் அழைக்கப்பட்டன. இவர்கள் நிரை மேய்த்தலைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். அவரவர் மேய்த்த நிரை இனத்தின் அடிப்படையில் மூன்று வகையாக ஆயர்கள் பிரிக்கப்பட்டிருந்தனர்.

☆ மருத நில மக்கள் உழவர், களமர், தொழுவர் என அழைக்கப்பட்டனர். இவர்களின் தொழில் வேளாண்மை ஆகும். உழவர்கள் அறுவடை செய்யத் தொடங்குமுன் நெற்கதிர்களுள் கூடுகட்டி வாழும் சிறு பறவைகளும், விலங்கினங்களும் ஓடி உய்யும் பொருட்டு தண்ணுமை என்னும் இசைக்கருவியை இசைப்பதன் மூலம் அவர்களின் அற உணர்வை அறியலாம். களையெடுத்தல், நெல் குற்றுதல் போன்றவை உழவர் மகளிர் செயல்களாக இருந்தன.

☆ நெய்தல் நிலத்தில் வாழும் மக்களைப் பரதவர் என்று அழைப்பர். மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், முத்தெடுத்தல், வாணிகத் தொழில், பயிர்த்தொழில் முதலியவை அவர்களது தொழில்களாக அமைந்தன. மீன் உணக்கல், மீன் விற்றல், உப்பு விற்றல், கடலில் வாழும் திமில்களை எண்ணல் முதலிய செயல்களில் பரதவ மகளிர் ஈடுபட்டனர்.

☆ பாலை நில மக்கள் எயினர், மழவர், மறவர் என அழைக்கப்பட்டனர். அவர்கள் பிறர் பொருளை வழிப்பறி செய்தலோடு வேட்டையாடுதல், ஆநிரை கவர்தல் முதலிய தொழில்களையும் செய்தனர். மழவர்கள் ஆறலை கள்வர்களாக இருந்ததோடு மட்டுமல்லாமல் பெரும்பாலோர் அரசரிடம் தலைமைசால் வீரராயும் அமர்ந்திருந்தனர் என்பதை அதியனை 'மழவர் பெருமகன்' என்றழைப்பதன் மூலம் அறியலாம்.

☆ கூத்தர், பாணர், பொருநர், விறலியர் முதலிய கலைஞர்களையும் அவர்களது தொழில்களையும் அறிய முடிகிறது. மூன்று வகையான கூத்தர்களையும், ஐவகையான பாணர்களையும் அறிய முடிகிறது. ஒருவரைப் போல் வேடமிட்டு பாடி ஆடுபவர் பொருநர் ஆவர். இவர்கள் தடாரி, கிணை ஆகிய தோற்கருவிகளை இசைத்துப் பாடுவர் என்பதையும், விறல்படப் பாடி ஆடுபவள் விறலி என்றும், தனித்து நிகழ்ச்சி நடத்துவதோடு பாணர் முதலான கலைஞர் குழுவில் இருந்துள்ளமையையும், அகவாழ்வில் தூது செல்பவராகவும்

தலைவரைப் பரத்தையரிடம் கூட்டுவிப்பராகவும் இருந்துள்ளமையையும் அறிய முடிகிறது.

- ☆ இருவகைக் கொல்லர்களையும், அவர்கள் பயன்படுத்தும் உலைக்கல், துருத்தி, சம்மட்டி, குறடு போன்ற கருவிகளை உவமைக்காகச் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தியுள்ளமையை அறிய முடிகிறது.
- ☆ மட்கலன்கள் செய்வோர் குயவர் ஆவர். இறந்தவர்களுக்கு ஈமத்தாழியைச் செய்வதும் திருவிழாவினை ஊரவர்க்கு அறிவிப்பதும் இவர்கள் தொழிலாகும்.
- ☆ தச்சர்கள் தேர், வண்டி, கட்டில், சிறுவர்கள் விளையாடும் சிறுதேர் முதலியவற்றையும் செய்துள்ளனர். நோய்க்குத் தகுந்த மருந்தளிக்கும் அறவோராக மருத்துவர்கள் திகழ்ந்துள்ளனர்.
- ☆ நுட்பமான நூலைக் கொண்டு ஆடை நெய்பவர்களை நெசவாளர்கள் என்றும், இடுகாட்டில் இறுதிச்சடங்கு நிகழ்த்துபவர் புலையர் என்றும், ஆடைகளை வெளுக்கும் வண்ணாத்தியைப் புலைத்தி என்றும், சாணைக்கல் செய்வோரைக் காரோடன் என்றும் அழைக்கப் பட்டுள்ளமையை அறிய முடிகிறது.

## மேனிலை ஆய்வுக்காக

ஐந்திணை மக்களின் வாழ்க்கை நிலைகளை எடுத்தியம்புகிற சங்க இலக்கியங்களில் நிலம், தொழில் சார்ந்ததன் அடிப்படையில் அவர்களின் இனவாழ்க்கை குலம், தொழில் இரண்டையும் மையப்பொருளாக வைத்து அவர்களது வாழ்க்கை முறைகளை உளவியல் சார்ந்த அடிப்படையில் நிகழ்த்தலாம் என்று இவ்வாய்வுக்குப்பின் நிகழும் மேலாய்வுக்களமாகச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

## முதன்மை நூல்கள்

1. சங்க இலக்கியம் (18 நூல்கள்) — சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2007.

2. ” — நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ், சென்னை, 2007.

## துணைமை நூல்கள்

1. அரங்கநாதன்,ப., — ஒன்றே குலம், பாரதி புத்தகாலயம், சென்னை, 1990.

2. அருணாசலக் கவுண்டர், கு., — பண்டைத்தமிழக வேளாண்மை வணிக வாரியங்கள், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1997.

3. அருள்ராஜ், வே.சா., — பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2000.

4. அறவாணன், க.ப., — தமிழ்ச் சமுதாய வரலாறு பண்டைக்காலம், தமிழ்க்கோட்டம், புதுச்சேரி, 1992.

5. அன்பு பொன்னோவியம் — உணவில் ஒளிந்திருக்கும் சாதி (சமூக, சமய வரலாற்றுக் கட்டுரைகள்) சித்தார்த்தா பதிப்பகம், சென்னை, 2007.

6. ஆறுமுகம், அ., சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, பாவேந்தர் பதிப்பகம், திருச்சி மாவட்டம், 1994.

7. ஆறுமுகம், க., தொல்காப்பியர்க்கு முன்னும் பின்னும், தில்லித் தமிழ்ச் சங்கம், 1983.

8. இராகவையங்கார், மு., வேளிர் வரலாறு, செந்தமிழ்ப் பிரசுரம், மதுரை, 1916.

9. இராசமாணிக்கனார், மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1970.

10. இராசாராம், சு., சங்க இலக்கியத்தில் நடைமுறை வாழ்க்கை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2007.

11. இராசேந்திரன், இரா., எளிய நடையில் திருக்குறள் பரிமேலழகர் உரை, நந்தினி பதிப்பகம், சென்னை, 2007.

12. இராமச்சந்திரன், சி.ஈ., சங்க கால வரலாறு (மேற்பட்டப் படிப்பிற்குரியது), தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1977.

13. இராமநாதன் செட்டியார், லெ.ப.கரு., சங்ககாலத் தமிழர் வாழ்வு, பாரி நிலையம், சென்னை, 1970.

14. இராமலிங்கம், அரங்க., சங்க இலக்கியத்தில் வேந்தர், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1987.

15. இலக்குவனார், சி., இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் (சங்ககாலம்) இலக்கிய இணையம், சென்னை, 2002.

16. இளங்குமரன், இரா., பாணர், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1987.

17. இறையரசன், பா., தமிழர் நாகரிக வரலாறு, பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1993.

18. கந்தையா பிள்ளை, ந.சி., தமிழகம், ஒற்றுமை ஆபீஸ், சைதாப்பேட்டை, 1934.

19. ” தமிழ் இந்தியா, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1945.

20. ” தென்னிந்திய குலங்களும் குடிகளும், ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1958.

21. கனகசபைபிள்ளை, வி., அப்பாத்துரை, கா., (தமிழாக்கம்) ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், சைவ சிந்ததாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1973.

22. காளிதாஸ், இராஜீ., இராசகோபாலன், இரா., — தமிழக வரலாறும் பண்பாடும், விஜய் பப்ளிகேஷன்ஸ், திண்டுக்கல், 1977.

23. கிருட்டினமூர்த்தி, கோ., — மீனவர் வாழ்வியல் (கடலூர் மாவட்டம்), திருக்குறள் பதிப்பகம், சென்னை, 2002.

24. குடந்தையான் (கவிஞர்) — சாதிகள் இல்லா சமுதாயம், பல்லவநாதம், சென்னை, 2002.

25. குணா — வகுப்பும் சாதியும் வருணமும், தமிழ்ப்பாசறை, சென்னை.

26. குமுதினி, ஐ., — தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் இலக்கணம் & மொழியியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

27. கைலாசபதி, க., — பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், மக்கள் வெளியீடு, சென்னை, 1978.

28. கோதில் மொழியன், சின்., — தொல்காப்பியத்தில் சாதி நெறி, வசந்த செல்வி பதிப்பகம், தர்மபுரி, 1988.

29. சசிவல்லி, வி.சி., — பண்டைத் தமிழர் தொழில்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1989.

30. ,, — முல்லை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.

31. சண்முகசுந்தரம், சிவ., சங்ககாலச் சமயமும் சமுதாயமும், சீச்சு பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1999.

32. சண்முகசுந்தரம், சு., திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, காவ்யா வெளியீடு, சென்னை, 1986.

33. சண்முகம்பிள்ளை, மு., சங்கத் தமிழர் வாழ்வியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1997.

34. சஷி, எஸ்.எஸ்., இந்தியாவின் ஆயர் சமுதாயம், இன்ஸ்டிடியூட் ஆஃப் சவுத் இண்டியன் ஸ்டடீஸ், சென்னை, 1990.

35. சிதம்பரனார், சாமி., தொல்காப்பியத் தமிழர், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2000.

36. ” பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், கா. மீனாட்சி வெளியீடு, சென்னை, 2002.

37. சின்னசாமி, இர., தமிழகம் நேற்று – இன்று – நாளை, இராமநாதபுரம் மாவட்டம், 1966.

38. சுப்பிரணியன், கா., சங்க காலச் சமுதாயம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1982.

39. சுப்பிரமணியன், ந., தமிழக வரலாறு, கி.பி.1565 வரை, என்னெஸ் பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1979.

40. சுவாமிநாதன், ஆ., — தமிழ்நாட்டு சமுதாய பண்பாட்டு வரலாறு, தீபா பதிப்பகம், சென்னை, 1977.

41. செல்வராசன், மா., — சங்க காலச் சமூகவியல் கோட்பாடு, ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பு மலர், சென்னைப் பல்கலைக் கழகம், 1981.

42 செல்வராசு, சிலம்பு, நா., — சங்க இலக்கிய மறுவாசிப்பு சமூகவியல் மானுடவியல் ஆய்வு, காவ்யா வெளியீடு சென்னை, 2005.

43. தங்கமணி, பொன்., — பழங்கால இந்திய அரசியலும் பண்பாடும் கி.பி. 1206 வரை, பொன்னையா பதிப்பகம், குமரி மாவட்டம், 1979.

44. தட்சிணாமூர்த்தி, அ., — தமிழர் நாகரிகமும் பண்பாடும், யாழ் வெளியீடு, சென்னை, 1999.

45. தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு — தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம் – அரசியல், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1983.

46. ” — தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம் – வாழ்வியல், தமிழ்நாட்டு பாடநூல் நிறுவனம், சென்னை, 1983.

| | |
|---|---|
| 47. திருநாவுக்கரசு, க.த., | தமிழர் நாகரிக வரலாறு,<br>தொல்காப்பியர் நூலகம்,<br>சென்னை, 1962. |
| 48. துரை அரங்கசாமி, மொ.அ., | சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்<br>(இலக்கியச் சிறப்புப் பெயர்களும்<br>குடிபற்றிய சிறப்புப் பெயர்களும்),<br>பாரி நிலையம், சென்னை, 1960. |
| 49. துரைசாமிப் பிள்ளை, ஞா.சா., | தமிழ் இலக்கியம் சங்ககாலம்,<br>அசோசியேசன் ப்ரஸ்,<br>கல்கத்தா, 1923. |
| 50. துரைசாமிப் பிள்ளை, எஸ்., | வேளாள மரபிலக்கணச் சுருக்கம்,<br>ஹனுமான் அச்சியந்திர பதிப்பகம்,<br>விழுப்புரம், 1926. |
| 51. தேமொழி, குரு., | நாடார் சமூக வரலாறு,<br>நாடார் மஹாஜன சங்கம், மதுரை,<br>1969. |
| 52. தேவநேயன், ஞா., | பழந்தமிழாட்சி,<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை, 1952. |
| 53. ,, | தமிழர் வரலாறு,<br>நேசமணி பதிப்பகம்,<br>காட்பாடி, 1972. |
| 54. நச்சினார்க்கினியர்(உ.ஆ.) | தொல்காப்பியம் (அகத்திணையியல்,<br>புறத்திணையியல்),<br>சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை, 1975. |

55. பக்தவத்சலபாரதி, சீ., பண்பாட்டு மானிடவியல்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை, 1990.

56. பரமேஸ்வரி, சி., தேவேந்திர குல வேளாளர்
வரலாறும் சமூக அரசியல் எழுச்சியும்,
அறிவகம்,
கோவை, 2000.

57. பாலசுந்தரனார், தி.மு., சங்க நூற் கட்டுரைகள்,
கழக வெளியீடு, 1966.

58. பாலசுப்பிரமணியன், கு.வெ., சங்க இலக்கியத்தில் சமூக
அமைப்புகள்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், 1994.

59. ” சங்க இலக்கியத்தில் கலையும்
கலைகோட்பாடும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1998.

60. பாலசுப்பிரமணியன், வல்லை., வேளாளரது தோற்றமும் அவர்தம்
வரலாறும்,
சென்னை வேளாளர் சங்கத்தார்,
1927.

61. பெருமாள், ஏ.என்., தமிழர் இசை,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1984.

| | | |
|---|---|---|
| 62. | பொதிகைத் தமிழரசன் | சமூகவியல் நோக்கில் நீதி இலக்கியம், பொன்மணி பதிப்பகம், கரூர், 2008. |
| 63. | மணியன் (புலவர்) | வரலாற்றில் வேளாண் குடிகள், 'வேளாண் சீலர்' கோவை திரு.எஸ் இராமசாமி அவர்களின் நாள் மங்கல விழா வெளியீடு. |
| 64. | மறைமலையடிகள், | சாதி வேற்றுமையும் போலிச் சைவரும், கழக வெளியீடு, சென்னை, 1957. |
| 65. | ,, | வேளாளர் நாகரிகம், கழக வெளியீடு, சென்னை, 1963. |
| 66. | மாணிக்கம், வ.சுப., | தமிழ்க் காதல், பாரி நிலையம், சென்னை, 2002. |
| 67. | மாதையன், பெ., | சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2004. |
| 68. | மாரியப்பன், அ., | தமிழக வரலாறு ஒரு சமூகப் பொருளாதாரக் கண்ணோட்டம், காவ்யா வெளியீடு, பெங்களூர், 1984. |

69. முத்து கண்ணப்பன், தி., சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், அதிபத்தர் பதிப்பகம், சென்னை, 1978.

70. முத்துசாமி, அ., சங்க இலக்கியத்தில் ஆயர், இராணி பதிப்பகம், சென்னை, 1993.

71. முத்துராசன், க., சங்க காலம், தேன்தமிழ்ப் பதிப்பகம், சேலம், 1980.

72. முருகையன், மு. அரங்க., சாதீயம், இலக்கியா, புதுச்சேரி, 1990.

73. வரதராசன், மு., முல்லைத் திணை, பாரி நிலையம், சென்னை, 1964.

74. வரதராசன், வெ., தமிழ்ப் பாணர் வாழ்வும் வரலாறும், பண்ணை பதிப்பகம், சென்னை, 1973.

75. வித்தியானந்தன், சு., தமிழர் சால்பு (சங்க காலம்), பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1971.

76. வெள்ளை வாரணன், க., சங்ககாலத் தமிழ் மக்கள், நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி, சென்னை, 1950.

77. வேங்கடசாமி நாட்டார், ந.மு., வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி, எஸ்.ஜார்ஜ் & கோ பிரிண்டர்ஸ், திருச்சி, 1915.

78. Subramaniyan, N., Sangam Polity, Asia Publishing, Newyork, 1966.

79. Pillai, K.K., A Social History of the Tamils, Vol-1, University of Madras, 1975.

80. Arokiasamy, M., The Kongu country, Madras University, 1956.

81. Srinivasa Iyangar, P.T., History of the Tamils, Kumaraswamy Naidu and Son, Madras, 1929.

## ஆய்வேடுகள்

1. அம்மன் கிளி முருகதாஸ், சங்க இலக்கியத்தில் திணைக் கோட்பாடும் அதன் சமூக இலக்கிய முக்கியத்துவமும், கலாநிதிப் பட்டத்திற்காக யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைக்குச் சமர்ப்பிக்கப்பட்டது. **1998.**

2. குருநாதன், இரா., சங்க இலக்கியத்தில் குறிஞ்சி (இயற்கையும் சமுதாய வாழ்க்கையும்), எம்.லிட்., ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, **1976.**

3. கோதில் மொழியன், சின்., — பழந்தமிழ் இலக்கியங்களில் சாதி எதிர்ப்புக் கருத்துகள், முனைவர் பட்ட ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1999.

4. சின்னப்பன், மு., — சங்க இலக்கியங்களில் வாழ்வியல் கோட்பாடுகள், முனைவர் பட்ட ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 2005.

5. பொன்முரளி, ஜெ., — சங்க இலக்கியம் காட்டும் தமிழர் போர்முறைகள், முனைவர் பட்ட ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 2004.

## அகராதிகள்

1. அபிதான சிந்தாமணி — ஏசியன் எஜீகேஷனல் சர்வீஸஸ், புதுதில்லி, 1984.

2. கலைக்களஞ்சியம் — தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1963.

3. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் (தொகுதி–1) — தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்,1986.

4. தமிழ்ப் பேரகராதி (தொகுதி–1) — சென்னைப் பல்கலைக்கழகம் சென்னை, 1982.

5. தமிழ் மொழியகராதி — சாரதா பதிப்பகம், சென்னை, 2003.

6. மதுரைத் தமிழ்ப் பேரகராதி — கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை, 1956.

7. A Word Index for Cankam Literature — Institute of Asian Studies, Chennai, 1993.

## ஆய்வுக்கோவை

5. தமிழண்ணல், அறவாணன், சிலம்பு செல்வராசு, நா., (ப.ஆ.) — சங்க இலக்கியத்தில் விறலியர், சரளா இராஜகோபாலன் (க.ஆ.) இ.ப.த.ம, புதுச்சேரி, 1995.

## இதழ்கள்

1. ஆராய்ச்சி, வானமாமலை, நா., மலர்–4, இதழ்–2, ஜனவரி, 1974.

2. செந்தமிழ்ச்செல்வி, சிலம்பு.6, பரல்.5, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, 1931.